# கல்கி

KALKI 19.9.99
ரூ. 4.50








# பண்பாட்டில் நிறைவு கண்ட பெருவிழா!

# நாளைய வளமான எதிர்காலத்திற்கு இன்றே நம்பிக்கையூட்டுவது TDFC

## திட்டம் - 1

### தவணை முறையில் வட்டி அளிக்கும் திட்டம்

### குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 10,000/-

| வைப்புத் தொகைக்கான காலம் | மாதந்தோறும் அளிக்கப்படும் வட்டி விகிதம் | மூன்று மாதத்திற்கு ஒரு முறை அளிக்கப்படும் வட்டி விகிதம் வருடத்திற்கு |
|---|---|---|
| 12 மாதம் மற்றும் 1 நாள் | - | 12.12 % |
| 25 மாதங்கள் | - | 12.63 % |
| 36 மாதங்கள் | 13% | 13.14% |
| 48 மாதங்கள் | | |
| 60 மாதங்கள் | | |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப்படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.

* Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403

## திட்டம் - 2

### முதலீடு பெருகிடும் திட்டம்

### குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 5,000/-

| வைப்புத் தொகைக்கான காலம் | ரூ. 5000/-க்கான முதிர்வுத் தொகை | வட்டிவிகிதம் | ரூ. 1000/-க்கான முதிர்வுத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதம் மற்றும் 1 நாள் | ரூ. 5635/- | 12.70% | ரூ. 1127/- |
| 25 மாதங்கள் | ரூ. 6480/- | 14.21% | ரூ. 1296/- |
| 36 மாதங்கள் | ரூ. 7370/- | 15.80% | ரூ. 1474/- |
| 48 மாதங்கள் | ரூ. 8390/- | 16.95% | ரூ. 1678/- |
| 60 மாதங்கள் | ரூ. 9545/- | 18.18% | ரூ. 1909/- |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப் படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

**வைப்புத்தொகையின் மீது [illegible] இல்லை**

மேலும் விபரங்களுக்கு



**தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.

**தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719**

கிளைகள் :

★ டிடிசி பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : 497102
★ டிடிசி பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:464188
★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி:741686
★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி : 258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்

**உங்களது முதலீடு ''டிடிஎப்சி'' யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.98 தினகரனில் வெளியிடப்பட்ட சட்டபூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1122/DIS/99/ELEGANT

1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு

கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



• வாஜ்பாய்



• சோனியாகாந்தி



• பிரியங்கா



• சுஷ்மா சுவராஜ்

# பிரியங்கா சொன்ன பதில்!

முதல் கட்ட தேர்தல் நாளன்று டெல்லியில் செமை மழை. நிஜ மழையோடு பண மழையும் சேர்ந்து கொண்டு அசத்தி விட்டது. டெல்லி சாந்தினி சௌக் தொகுதியில்தான் இந்தப் பணமழை முதலில் மையம் கொண்டது.

பி.ஜே.பி. வேட்பாளர் விஜய் கோயலும் சோனியா கட்சி வேட்பாளர் ஜே.பி. அகர்வாலும் ஒரே வீதியில் எதிரெதிரே சந்தித்துக் கொள்ள நேர்ந்தபோதுதான் பகிரங்கமான இந்தப் பண விநியோகத்தின் தாக்கம் வெளியே தெரிய ஆரம்பித்தது. இருதரப்பிலும் விநியோகம் நடந்து கொண்டிருந்ததால் யார் யாரைப் பற்றித் தேர்தல் ஆணையத்திடம் புகார் சொல்ல முடியும்? பார்த்தார்கள். இருவருமே திருடனுக்குத் தேள் கொட்டிய கதையாக மௌனம் சாதித்து விட்டனர்.

ஆனாலும் அங்கங்கே சுற்றியலைந்து கொண்டிருந்த நிருபர்கள் கண்களில் இந்தக் கண்கொள்ளாக் காட்சி தென்பட்டு விட்டது. விஷயத்தை

ராஜதர்பார்



• மன்மோஹன் சிங்

அம்பலத்துக்குக் கொண்டு வந்ததைத் தவிர, நிருபர்களாலும் வேறொன்றும் செய்துவிட முடியவில்லை!

இதே போல கரோல் பாக் தொகுதியிலுள்ள இந்த்ரபுரி பகுதியில் ஒரு பணப் போரே நடந்தது. கொடுத்த பணம் போதவில்லையென்று வாக்குப் பதிவுக்கு முதல் நாள் இரவு தொண்டர்கள் ஸ்டிரைக் செய்ய ஆரம்பித்து விட்டனர்! அப்புறம் ஒருவழியாக, "மேலிடத்தில் கொடுக்கப்பட்ட பணம் முழுதும் பட்டுவாடா செய்யப்பட்டு விட்டது. இனியும் வேண்டுவோர் கணக்குக் கொடுத்து விட்டு பணம் வாங்கிக் கொள்ளுங்கள்!" என்று கட்சி அமைப்பாளரான வக்கீல் ஒருவர் சொல்ல, ஒருவழியாகத் தொண்டர்கள் சமாதானக் கொடி காட்டினார்கள்!

சதர் தொகுதியில் போட்டியிடும் ஜகதிஷ் டைட்லரும் மதன்லால் குரானாவும் ஒருவர் மீது ஒருவர் சேற்றை வாரியிறைத்துக் கொண்டு பிரசாரம் செய்தனர். பின்னாலிருந்து பணம் வாரியிறைக்கப்பட்டது. அவுட்டர் டெல்லி வேட்பாளரான சாஹிப் சிங் வர்மா கட்டப் பஞ்சாயத்துக்காரர். அதனால் ஒவ்வொரு பஞ்சாயத்திலிருந்தும் இவ்வளவு தொகை வந்தே தீர வேண்டும் என்று வாய்மொழிச் சட்டமே போட்டு வசூலித்துப் பணத்தை வாரியிறைத்தார்.

இந்த நிலையில் மன்மோஹன் சிங் பாடுதான் ரொம்பவே திண்டாட்டமாகி விட்டது. "நான் ஏழைக் குடும்பத்திலிருந்து வந்தவன். படித்துப் பொருளாதார நிபுணனாகி, மாதச் சம்பளத்தை நம்பிக் குடும்பம் நடத்தியவன். கட்சி போட்டியிடச் சொன்னதால்தான் போட்டியிடுகிறேன். எனவே பணம் வேண்டுவோர் கட்சி மேலிடத்தில்தான் கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும்!" என்று பகிரங்கமாகப் பேட்டியே கொடுத்து விட்டார் சிங்!

பெல்லாரியில் வாக்குப் பதிவு முடிந்ததும் டெல்லிக்குத்தான் முதல் டெலிபோன் கால் செய்தார் சுஷ்மா. "ஒரு லட்சம் வோட்டில் வெற்றி!" என்று உற்சாகமாக அறிவித்திருக்கிறார். அதையே கட்சியின் செய்தித் தொடர்பாளர் வெங்கையா நாயுடுவும் கிளிப்பிள்ளை போல் பத்திரிகையாளர்களிடம் சொன்னார். "எந்த அடிப்படையில் இப்படிச் சொல்கிறீர்கள்?" என்று பத்திரிகையாளர்கள் திருப்பிக் கேட்க, "வோட்டுப் பதிவு முறையை வைத்து!" என்று ஒரு போடு போட்டார். உண்மை என்ன? இரண்டு கட்சியினருமே 'எக்ஸிட்போல்' நடத்தினர். இருவருமே அதன்படி ஒரு லட்சம் வாக்கு வித்தியாசத்தில் ஜெயிக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்! ஒருவேளை, எக்ஸிட் போலில் இருவருக்குமே தாராளமாக வாக்களித்து விட்டார்களோ மக்கள்!

தேர்தல் மனு தாக்கல் செய்வதற்காக லக்னோ சென்றார் வாஜ்பாயி. கூடவே பத்திரிகையாளர் பட்டாளம் ஒன்றும் சென்றது. பயணிக்க, தங்க, உண்ண, உல்லாசபானம்... என்று எல்லாமே கட்சி செலவு. பார்த்தார் சோனியா. சும்மா இருப்பாரா? அதே லக்னோ மெயிலின் குளு குளு வசதியோடும் சகல சௌபாக்கிய வசதிகளோடும் பத்திரிகையாளர்களை அழைத்துச் சென்று அமேதி தொகுதியில் மனுதாக்கல் செய்தார்!

அஸ்ஸாம் மாநில தேஜ்பூர்



''இன்ஸ்பெக்டர் சார், பிக்பாக்கெட் பீதாம்பரத்தோட தொல்லை தாங்க முடியலை.''

''ஏன்? என்ன ஆச்சு?''

''பிக்பாக்கெட் அடிச்ச மணிபர்ஸ்களை வைத்து, கண்காட்சி நடத்திக்கிட்டிருக்கான்!''

– ஜெ. கண்ணன்

தொகுதியின் சோனியா கட்சி வேட்பாளர் எம்.கே. சுப்பா. இவரது சரித்திரம் சுவாரஸ்யமானது. லாட்டரி கிங்கான இவர், 39,000 கோடி ரூபாய் லாட்டரி ஊழலில் சிக்கியிருப்பவர். பல கிரிமினல் வழக்குகளில் சி.பி.ஐ. விசாரணையிலிருப்பவர். மூன்று 'மனைவிகள்'! ஒரு கொலை வழக்கிலும் விசாரிக்கப்பட்டு வருபவர். இவர் இன்னமும் நேப்பாளக் குடிமகனா அல்லது இந்தியக் குடிமகனாகி விட்டாரா என்கிற சந்தேகமும் இருக்கிறது. இவருக்கு டிக்கெட் கொடுக்கப்படக் கூடாது என்று மன்மோஹன் சிங், ஏ.கே. அந்தோணி கோஷ்டி எதிர்ப்புத் தெரிவிக்க, "இவர்தான் கட்சியின் பணப்பை. இவருக்குத் தராவிட்டால் கட்சியின் கஜானாவே வறண்டு போய் விடும்!" என்று சோனியா கட்சியின் அஸ்ஸாம் மாநிலத் தலைவர் தருண் கோகாய் வாதாடிக் கொண்டிருக்கிறார். இந்த நிலையில், தாம் ஓர் அப்பாவி என்று ஓய்வு பெற்ற நீதிபதி ஒருவரிடம் சர்டிபிகேட் வாங்கி அச்சடித்து விநியோகித்துக் கொண்டிருக்கிறார், எம்.கே. சுப்பா!

**பி.**என். லேகி என்கிற மூத்த வழக்குரைஞர் ஒருவர் சோனியாவுக்குப் புளியைக் கரைத்துக் கொண்டிருக்கிறார். அதாவது, இத்தாலியக் குடியுரிமைச் சட்டப்படி, ஒருவர் தமது இத்தாலியக் குடியுரிமையை விட்டுக் கொடுக்க முடியாது. அதே சமயம் இத்தாலியக் குடிமகனாக இருந்து கொண்டு இன்னொரு நாட்டின் குடிமகனாகவும் இருக்க முடியும். இந்தியச் சட்டப்படியோ, ஒருவர் இந்தியக் குடிமகனாக இருக்கிறபட்சத்தில் வேறொரு நாட்டின் குடிமகனாகவும் இருக்க முடியாது. இந்த நிலையில் சோனியா எப்படி இத்தாலியக் குடியுரிமையை விட்டு விட்டு இந்தியக் குடிமகளாகி இருக்க முடியும்? நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார் சோனியாவுக்கு.

**வா**ஜ்பாயை எதிர்த்துப் போட்டியிடும்படி பிரியங்காவிடம் சொன்னபோது, "என் கன்னித் தேர்தலிலேயே நான் பலிகடா ஆக வேண்டுமா?" என்று கேட்டாராம் பிரியங்கா!

— இந்த்ரப்ரஸ்தன்

## விசேஷமாக ஒரு வேட்பாளர்!

**கோ**வை தொகுதியிலிருந்து ஆலயமணி சின்னத்தில் போட்டியிட்டார் இந்து மக்கள் கட்சிப் பொதுச் செயலாளர் அர்ஜுன் சம்பத்.

இவர் போட்டியிட்டதில் அப்படியென்ன விசேஷம்? சிறையிலிருந்தபடியே இந்த மக்களவைத் தேர்தலில் போட்டியிடும் ஒரே வேட்பாளர் இவராகத்தான் இருக்கும்.



போலீஸ்காரர் செல்வராஜ் கொலையின் போது கோவையில் நடந்த கலவரத்தில் கொலைக் குற்றம் சாட்டப்பட்டு சேலம் சிறையில் இருக்கும் இவருக்காக வேட்பு மனு தாக்கல் செய்தவர் இவரது தாய். நகரப் பகுதிகளில் இவரின் ஆலயமணிச் சின்னம் பொறிக்கப்பட்ட விளம்பரங்களும், நோட்டீஸ்களும் நிறைய.

"நாங்கள்தான் உண்மையான இந்துத் தொண்டர்கள். எங்களுக்கு கிறிஸ்துவர்களோ, முஸ்லீம்களோ எதிரிகள் அல்ல. பா.ஜ.க. உண்மையில் இந்து விரோத சக்தி. குண்டு வைத்தவன் வெளியிலே; கோவையைக் காத்தவன் சிறையிலே! தியாகி அர்ஜுன் சம்பத்துக்குப் போடுவீர் உங்கள் வோட்டை!" என்றெல்லாம் பிரசாரம் செய்தார்கள். இவர் பா.ஜ.கவின் வோட்டை கணிசமாகப் பிரிப்பார் என்கின்றனர் அரசியல் நோக்கர்கள். "நூறா? ஆயிரமா?" என்று கிண்டலடிக்கிறார்கள் பா.ஜ.க.வினர்.

தகவல், படம்: ரோகிணி

"அவர் போன பிறகுதான் இவர் வருவாரு..."

"இல்லே! அவர் வரவே மாட்டாருன்றேன்..."

"வருவாரு... ஆனா பொடி வைச்சுப் பேசவாரு பாரேன்..."

"அதெல்லாமில்லே... கடமைக்காக வருவாங்க. ஏதோ பேசிட்டுப் போயிடுவாங்க..."

-காமராஜர் அரங்கம் யூகங்களில் சிங்காரித்துக் கொண்டிருந்தது. மாலை நாலரை மணிக்கே முற்றுகையிட்டுக் கொண்ட காவல் துறை, பாதுகாப்பு ஏற்பாடுகளில் கறாருடன் முனைப்புக் காட்ட... மேடையில் பிரும்மாண்ட 'பிரோ-





• அஞ்சல் உறை

# பண்பாட்டில் நிறைவு கண்ட பெருவிழா!

அப்'பில் விழா நாயகர் கல்கி கிருஷ்ண மூர்த்தி எல்லாவற்றையும் பார்த்தபடி பொருள் பொதிந்த புன்னகை உதிர்ப்பதாகத் தோன்றியது!

திடீரென்று ஒரு பரபரப்பு! 'மூப்பனார் புறப்பட்டு விட்டார். இன்னும் இரண்டு நிமிடங்களில் இங்கே வந்து விடுவார்' என்று தொண்டர்கள் செல்லுத் தொலைபேசியில் பெற்ற தகவலைப் பரிமாற, அமரர் கல்கி நூற்றாண்டு நிறைவு விழா வரவேற்புக் குழுவினர் வி.ஐ.பி. நுழைவு வாசலுக்கு விரைந்தனர்.

அதற்குள் காவல் துறை துணை கமிஷனர் ராஜேந்திரனின் செல்போன் ஒலித்தது. 'முதல்வர் இன்னும் ஒரு நிமிடத்தில், அரங்கின் பின்புற நுழைவு வாயிலுக்கு வந்து சேருவார்.'

பக்கவாட்டில் இருந்த வரவேற்புக் குழுவினரின் பாடு திண்டாட்டமாகப் போய்விட்டது! முதல்வரை வரவேற்பதா மூப்பனாருக்காகக் காத்திருப்பதா என்று சற்று தடுமாறி, பின்னர் இரண்டாகப் பிரிந்து இரு இடங்களிலும் காத்திருக்க முடிவு செய்து, ஒரு பிரிவினர் பின்புற நுழைவை அடையவும் முதல்வரின் கார் வந்து சேரவும் சரியாக இருந்தது! நேரம் சரியாக 5.55!

• மேடையில்...



மூப்பனார் இன்னும் வந்து சேரவில்லை என்று அறிந்து, மேடையில் அமராமல் முன் வரிசைக்குப் போய் அவருக்காகக் காத்திருந்தார் முதல்வர்.

இது நடந்த மறுநிமிடமே, மூப்பனார் பக்கவாட்டு வி.ஐ.பி. நுழைவாயிலில் வந்திறங்கினார்.

கலைஞர் வந்து விட்டார் என்பது தெரிவிக்கப்பட்டதுமே அவர் நடையில் வேகம் கூடியது. அவர் அரங்கில் நுழைந்து முதல்வரை நெருங்கியதுமே அதுவரை அரங்கில் வளைய வந்த அசட்டு யூகங்கள் தவிடுபொடியாகிப் போயின.

நீண்ட நாள் பிரிந்த நண்பரைக் கண்டது போல், மூப்பனாரைத் தழுவி, அருகே அமரச் செய்தார் முதல்வர். இவர் அவரை நலம் விசாரிக்க, அவர் முகமெல்லாம் மலர, அந்த மலர்ச்சியும் பரஸ்பர மரியாதையும் அமரர் கல்கி நூற்றாண்டு விழா மேடையிலும் தொடர்ந்தது.

" 'அரசியல் பேசக்கூடாது' என்ற நிபந்தனையின் பேரில்தான் அமரர் கல்கி அஞ்சல் தலை வெளியிட்டு விழாவுக்கு அனுமதி அளித்திருக்கிறது தேர்தல் கமிஷன். அரசியலுக்குத் தடைவிதிக்கலாம். ஆனால் அரசியல் பண்பாட்டுக்குத் தடையேதுமில்லை என்பதை நிரூபிக்கிறது இன்றைய விழா" என்று வரவேற்புச் சொல்கையில் குறிப்பிட்டார் கல்கி நிறுவன சேர்மன் வி. வைத்தியநாதன்.

அந்த அரசியல் பண்பாட்டை அடிக்கோடிட்டு வலியுறுத்தும் வகையில், "பேரன்புக்கும் பெருமதிப்பிற்குமுரிய டாக்டர் கலைஞர் அவர்களே" என்று தொடங்கி, ரத்தினச் சுருக்கமாக தலைமையுரை ஆற்றினார் மூப்பனார். விழாக்குழு தலைவர் என்கிற முறையில் தாம் முதல்வரைத் தொடர்பு கொண்டு "செப்டெம்பர் 9 அன்று வந்து விடுவீர்களல்லவா?" என்று கேட்க, முதல்வர், "அன்றைய தினம் நீங்கள் ஒரு மேடையில் பேசுங்க. நான் ஒரு மேடையில் பேசறேன்; இறுதியில் ஒரே மேடையில் சந்திப்போம்" என்று களிப்புடன் அவர் பதில் கூறியதை மூப்பனார் தெரிவிக்க, அரங்கமே கரவொலியால் அதிர்ந்தது.

கடந்த ஓராண்டாக பல்வேறு இடங்களிலும் நடந்த கல்கி நூற்றாண்டு விழாக்களை முன்னின்று ஏற்பாடு செய்த வாசகர்களுக்கும் ரசிகர்களுக்கும் நன்றி கூறிய நூற்றாண்டு விழாக் குழுத் தலைவர் மூப்பனார், "இலக்கியம், உள்ள வரை கல்கியும் இருப்பார்" என்று குறிப்பிட்டது அரங்கில் இருந்த அத்தனை பேர் மனக்கருத்தின் எதிரொலியாகவே அமைந்தது.

அமரர் கல்கியின் நகைச்சுவை உணர்வையும் அவர் இளம் பத்திரிகையாளர்களையும் எழுத்தாளர்களையும் ஊக்குவிக்க எடுத்துக் கொண்ட முயற்சியையும் விவரித்துப் பேசினார் சாவி.

ம.பொ.சி. செங்கோல் பத்திரிகையை நடத்த கல்கியிடம் உதவி கேட்டபோது, "அப்படியொரு பத்திரிகையா? ரொம்ப ரகசியமாக நடத்துகிறீர்கள் போலிருக்கிறது!" என்று தமக்கே உரிய நகைச்சுவையுடன் குறிப்பிட்டாலும் அவர் ம.பொ.சிக்கு உதவத் தவறவில்லை என்பதைச் சுட்டிக்காட்டினார் சாவி.

கொத்தமங்கலம் சுப்பு காந்திமகான் கதையை வில்லுப்பாட்டாகச் சொன்னபோதெல்லாம் உணர்ச்சி மிகுதியால் கண்கலங்கி விடுவாராம்! அந் நிகழ்ச்சிக்குத் தலைமைதாங்கிய கல்கி, "கொத்தமங்கலம் சுப்பு இப்போது காந்தி மகான் கதை சொல்லி அழுவார்!" என்று குறிப்பிட்டதை அவர் விவரித்தபோது எழுந்த சிரிப்பலை, அந்த நகைச்சுவையின் தொடர்ச்சியை கி. ராஜேந்திரன் விவரித்தபோது இரு மடங்காக எழுந்தது:

"எப்படி சுப்புவால் ஒவ்வொரு முறையும் அழ முடிகிறது?" என்று கி.ரா. தந்தையிடம் கேட்க, அவர் சொன்ன பதில் இதுதான் :

"அதுவா..? அவர் 'காந்தி மகான்' கதையைப் புத்தகமாக வெளியிட்டு விற்பனையாகாமல் அப்படியே வீட்டில் இருக்கிறது... ஒவ்வொரு முறை காந்தி மகான் கதை சொல்லும் போதும் அது ஞாபகம் வந்துவிடும், வேறொன்றுமில்லை..." (இன்றைக்கும் பல எழுத்தாளர்கள் நிலை இதுதானே! ஒரு லைப்ரரி ஆர்டரை நம்பித்தானே பதிப்பகங்கள் பல இருக்கின்றன!).

"குருவாக கல்கியையும் நண்பராக கலைஞரையும் பெற்றதுதான் தாம் வாழ்க்கையில் அடைந்த மிகப் பெரிய பேறு" என்று கூறி தமது உரையை நிறைவு செய்தார் சாவி. இரு தலைவர்களையும் காவிரி – கொள்ளிடத்துக்கு அவர் ஒப்பிட்டது கலைஞரிடமிருந்து ஒரு சுவாரஸ்யமான பதிலை வரவழைக்கும் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை.

அந்த பதில் என்ன...? என்பதை விவரிக்கும் முன் அஞ்சல் தலை வெளியீட்டு நிகழ்ச்சியைப் பார்ப்போம்.

தமிழ்நாடு அஞ்சல் வட்டத் தலைவர் ஜெயராமன், கல்கி அஞ்சல் தலை வெளியிடுவதற்கு பெருமுயற்சிகள் எடுத்துக் கொண்டவர். ஓவியர் பத்மவாசன் வடிவமைத்தபடி அஞ்சல் தலையும் முதல்நாள் உறையும் உரிய நேரத்தில் தயாராவதற்கும் விழா மேடை சிறப்பாக அமைவதற்கும் ஆர்வத்துடன் உதவியவர். அவர் வெளியிட, முதல்வர் பெற்றுக் கொள்ள, இந்தியாவே நூற்றாண்டு நாயகரைத் தலைவணங்கி வாழ்த்தியது போல் உணர்ந்தனர் கல்கி அன்பர்கள்.

தாமும் ஒரு தீவிர கல்கி ரசிகர் என்பதைக் குறிப்பிட்டு விழா நாயகருக்கு மனம் கனிந்து அஞ்சலி செலுத்தினார் அஞ்சல் வட்டத் தலைவர்.

முதல்வர் உரைக்கு முன்பாகவே நன்றியுரை வழங்கினார் கி.ரா.: "நூற்றாண்டு விழா தொடக்கத்தில், நன்றி கூறும் சம்பிரதாயத்துக்கு அவசியமில்லை என்று நினைத்தேன். அமரர் கல்கி எல்லோருக்கும் சொந்தமானவர் என்பதால் ஒருவருக்கொருவர் மன நிறைவைப் பரிமாறிக் கொள்ளலாமேயொழிய நன்றி சொல்வது அன்னியப்படுத்தும் என்று கருதினேன். ஆனால்

நன்றி கூறத்தான் வேண்டும் என்ற முடிவுக்கு இப்போது ஓராண்டின் முடிவில் வந்திருக்கிறேன். வாழ்வின் எல்லாத் துறைகளிலும் வீழ்ச்சி கண்டு வருவதாக உணர்கிறோம். ஆனால் அமரர் கல்கி இனங்காட்டி கடைப்பிடித்த தேசியம், உயர்ரசனை, தமிழுணர்வு போன்றவை மட்டுமின்றி பொது வாழ்க்கைப் பண்புகளும் இன்று உயிரோடு இருக்கின்றன. அவை அடியோடு காணாமல் போய்விடவில்லை என்பதைப் பார்க்கையில் நன்றி உணர்வு பெருகுகிறது."

கி.ராஜேந்திரனின் இந்தச் சிந்தனைக்கு விரிவான விளக்கமாக அமைந்தது முதல்வரின் பேச்சு.

"காவிரி, கொள்ளிடம் என்று சாவி ஒப்பிட்டது அவ்வளவு பொருத்தமான உவமை அல்ல! கொள்ளிடம் என்பது காவிரியிலிருந்து பிரிவது-எங்களிருவருள் காவிரி யார் கொள்ளிடம் யார்...? அதை நான் ஆராயப் போவதில்லை. ஆனால் இரண்டு நதிகளிலும் ஓடுவது ஒரே தன்மையுடைய நீர்தான்!" - இதை முதல்வர் சொன்னதுதான் தாமதம், கூட்டத்தில் உற்சாகப் பெருக்கு காவிரி கொள்ளிடத்தையெல்லாம் விஞ்சிக் கொண்டு ஓடியது!

தேர்தல் பிரசாரத்தில் அலைந்து களைத்திருந்தபோதும் செப்டெம்பர் எட்டாம் தேதி இரவு பதினோரு மணிக்கு மேல் சுந்தாவின் பொன்னியின் புதல்வரைப் புரட்டியிருக்கிறார் முதல்வர். குறிப்புகள் எழுதி உரை தயாரித்து முடித்த நேரம் அமரர் கல்கி நூற்றாண்டு தினம் கூட (9.9.99) தொடங்கியிருக்கக்கூடும்.

மிக கவனத்துடன் தயாரித்த குறிப்புகளிலிருந்து மிக மிக நேர்த்தியான சிறப்புரையை வழங்கினார் முதல்வர்.

தமிழிசைக்கு அமரர் கல்கி ஆற்றிய தொண்டு, திராவிட இயக்கத்தினருடன் கருத்தளவில் முரண்பட்டாலும் மனத்தளவில் நட்பு பூண்ட அவரது பண்பு; பெரியாரின் பிள்ளையார் உடைப்பு இயக்கத்தைக் கண்டிக்கையிலேயே நாத்திகத்தை ஒரு வாழ்க்கை முறையாக அங்கீகரித்து மதிப்பளித்த அவரது பக்குவம்; நல்ல தமிழ் எழுதியதாலேயே அண்ணாவுக்கும் தமக்கும் இருந்த கருத்து வேறுபாட்டைக் கடந்து கல்கி சூட்டிய புகழாரங்கள்... என்று அமரர் கல்கியின் உயர் பண்பை ஆதாரங்களுடன் விவரிக்கும் பட்டியலாகவே அவர் உரை அமைந்தது. இறுதியில், "என்னைப்பற்றி கல்கி என்ன எழுதியிருக்கிறார் என்பதையும் இந்த நூற்றாண்டு சமயத்தில் கூறி நான் மகிழ்ச்சி அடைய வேண்டாமா?" என்று நெகிழ்ச்சியோடும் அடக்கத்தோடும் கேட்டுவிட்டு, தாம் கதை, வசனம் எழுதிய 'மனோகரா' படத்துக்கு விமர்சனம் எழுதிய கல்கி, தமது வசனத்தை எந்த அளவுக்குப் புகழ்ந்து எழுதியிருந்தார் என்பதையும் படித்துக் காட்டி மகிழ்ந்தார் முதல்வர்.

அரசியலில் மட்டுமின்றி பொது வாழ்விலும் கல்கி பண்புகள் தொடர வேண்டும் என விண்ணப்பிப்பது போல் தொனித்தது முதல்வரின் உரை. கல்கி தமது மகனுக்குச் சூட்டியது போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க தமிழ்ப் பெயரையே (ராஜேந்திரன்) தமிழர்கள் தங்கள் குழந்தைகளுக்குச் சூட்ட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் முதல்வர். கல்கி நூற்றாண்டுப் பிரதிக்ஞையாக அதை ஒவ்வொரு தமிழனும் கொள்ள வேண்டும் என்று முடித்தார்.

டெல்லி, மும்பை போன்ற நகரங்களிலிருந்தும் தமிழகத்தின் பல ஊர்களிலிருந்தும் கல்கி வாசகர்களும் ரசிகர்களும் எழுத்தாளர்களும் திரளாக வந்து பங்கேற்ற அமரர் கல்கி நூற்றாண்டு நிறைவு விழா நிகழ்ச்சி, வண்ணமிகு முழுநாள் கொண்டாட்டமாக அமைந்தது. அரங்கின் அலங்காரம் தொடங்கி, நுழைவாயிலில் அமைக்கப்பட்டிருந்த கண்காட்சி வரை பல்வேறு அம்சங்கள். அவை குறித்து எழுந்த பல்வேறு விமர்சனங்கள் என்று சின்னச் சின்ன சுவைகள் ஒன்று சேர்ந்து விழாவை ஒரு ருசிகரமான அனுபவமாக்கித் தந்தன. அத்தனை விவரங்களும் அடுத்த இதழில்.

— ஜி.எஸ்.எஸ்.

அட்டை வண்ணப்படம், படங்கள் : யோகா



''நேற்று நிறையப் பேர் காசில்லாமல் சாப்பிட்டு மாவாட்டினாங்களா?''
''எப்படி சார் கண்டு பிடிச்சீங்க?''
''ஓட்டல்லேயே தோசை மாவு, இட்லி மாவு பாக்கெட்டும் விக்கிறீங்களே!''

- வெ. ராஜாராமன்

**கி**.பி. இரண்டாயிரமாவது ஆண்டில், தமிழ்ப்பட உலகுக்கு, இளமையான ஒரு புது ஹீரோ கிடைக்கப் போகிறார். அதற்கு பலமான அஸ்திவாரம் போடப்பட்டு விட்டது. அந்த 'ஹீரோ- 2000' வேறு யாருமில்லை; சிலம்பரசன்தான். அப்பா டி. ராஜேந்தர், அடுத்து வரும் தமது படத்தில் தமது மகனையே ஹீரோவாக அறிமுகப்படுத்தப் போகிறார்.

"என்னை உருவாக்கி, மெருகூட்டியவர் என் அப்பாதான்! எனவே, அவர் மூலம்தான் நான் ஹீரோவாக அறிமுகமாவேன்!" என்று அழுத்தமான குரலில் சொல்கிறார் டி.ஆர். சிலம்பரசன்.

"ஓர் இளம் கதாநாயகனுக்கு இன்று என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும்? முதலில் துருதுருப்பும் சுறுசுறுப்பும் இருக்க வேண்டும். நன்றாக டான்ஸ் ஆடத் தெரிய வேண்டும்; சண்டை போடத் தெரிய வேண்டும். நான் இவற்றிலெல்லாம் நன்கு பயிற்சி பெற்றிருக்கிறேன். அது மட்டுமா? வாரத்தில் மூன்று நாட்கள் 'ஜிம்'முக்குப் போகிறேன். குதிரை ஏற்றம் தெரியும். சிலம்பம், கம்பு சுற்றுதல் எல்லாம் தெரியும்!"

"இவ்வளவுதானா?"

"ஊஹூம். கீ போர்டு வாசிப்பேன். டிரம்ஸ் வாசிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறேன். பியானோ வகுப்



# ஹீரோ-2000



புக்குப் போகிறேன். வாய்ப்பாட்டு கூட கற்றுக் கொள்கிறேன்!"

"அப்பாவைப் போலவே சகலகலாவல்லவன் என்று பெயரெடுக்க ஆசையா?"

"அதெல்லாம் நெடுநாளைய திட்டம். அடுத்த வருட பிளான் ஹீரோவாவது. எனக்கென்று சினிமா உலகில் ஒரு தனி இடத்தை சம்பாதிப்பதுதான். கொஞ்ச நாள் போனதும், எது வேண்டுமானாலும் வித்தியாசமாக முயற்சி செய்து பார்க்கலாம்!" என்று கூறுகிறார் சிலம்பரசன்.

இப்போது சாந்தோம் உயர்நிலைப் பள்ளியில் பதினொன்றாம் வகுப்பு மாணவன். எட்டாம் வகுப்பிலிருந்து இந்தப் பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறார். இதற்கு முன் டான் பாஸ்கோ. அங்கே, சினிமாவில் நடித்துக் கொண்டே பள்ளிக்குச் செல்வதில் சில சங்கடங்கள். அவர்களுடன் மல்லுக்கு நிற்பானேன். நமக்கு சினிமாதான் முக்கியம். எனவே அதற்கு இடையூறு இல்லாதபடி, வேறு பள்ளிக்கூடம் பார்த்துக் கொள்ளலாம் என்று சிலம்பரசனை இந்தப் பள்ளிக்கு மாற்றி விட்டார் அப்பா.

"படிப்பில் எப்படி? முதல் ரேங்கா?"

"இல்லீங்க! நாற்பது மார்க் வாங்கினால் பாஸ் என்றால், நான் நாற்பத்து ஐந்து, ஐம்பது மார்க் வாங்கி விடுவேன். அதுவே எனக்குப் போதும். முதல் ரேங்க் வாங்கி, நான் என்ன இஞ்ஜினியரிங், மெடிகல், ஐ.ஏ.எஸ். என்றா போகப் போகிறேன்? என் இலக்கு சினிமாதானே!" என்கிறார்.

'உறவைக் காத்த கிளி' படத்தில் குழந்தையாக அறிமுகம். அதன்பின் ஒரு டஜன் படங்களுக்கு மேல் நடித்து விட்டார்.

"இப்போது எனக்குப் பதினாறு வயது. இந்தக் கட்டத்தில் சிறுவனாக நடிப்பதும் சாத்தியமில்லை. ஹீரோவுக்கும் வயது போதாது. எனவேதான் சமீபத்திய 'மோனிஷா என் மோனலிசா' படத்தில் அப்பா எனக்கு சூப்பராக ஒரு பாட்டு கொடுத்தார். என் திறமையையெல்லாம் காட்டி ஆடியுள்ள அந்த டான்ஸ், படத்துக்கே ஹைலைட் என்றாலும் மிகையில்லை! பார்த்து விட்டுப் பலரும் பாராட்டினார்கள்."

"நட்சத்திரக் கிரிக்கெட் போட்டியின்போது, தூள் கிளப்பினீர்களே! கிரிக்கெட்டில் எப்படி ஆர்வம் ஏற்பட்டது?"

"தெரு கிரிக்கெட்தான். சிறு வயது முதல் கிரிக்கெட் ஆடுவேன். பள்ளிக்கூட டீமில் ஆடுகிறேன். மாவட்ட அளவில் கூட ஆடியுள்ளேன். ஆனால்



## மகனை ஹீரோவாக்குவது ஏன்?

**“சிறு குழந்தையாக இருக்கிறபோதே அவனுக்கு இசையில் அதிக ஈடுபாடு. பேசுகிறபோது, ரொம்ப முகபாவங்கள் காட்டிப் பேசுவான். அவனுக்குள்ளே ஒரு திறமை இருப்பதை நான் மூளையிலேயே புரிந்து கொண்டு, அந்தத் திறமையை முறைப்படி வளர்க்க எல்லா வசதிகளையும், பயிற்சிகளையும் கொடுத்தேன். என் பெண்ணுக்கு சினிமா ஆர்வம் இல்லை. சம்சாரம் அது சங்கீதம் படத்தில் சிலம்பு ஒரு பாட்டுப் பாடி, டான்ஸ் ஆடுவான். 'ஐயம் எ லிட்டில் ஸ்டார், ஆவேன் நான் சூப்பர் ஸ்டார்!' இது வெறும் பாடல் வரிகள் இல்லை; நாளைய சரித்திரம்'' என்கிறார் டி. ராஜேந்தர்!**

அதில் அதிக கவனம் செலுத்த நேரமில்லை. நட்சத்திரக் கிரிக்கெட்டின் போது, பழைய ஆர்வம் காரணமாக நானும் ஆடினேன். நாற்பத்தாறு ரன்கள், நாட் அவுட். அடுத்து நடந்த கார்கில் நிதிக்கான கிரிக்கெட் வீரர்களுடனான நட்சத்திரக் கிரிக்கெட் மாட்சில் கபில் டீமில் நான் இடம்பெற்றேன். ஏழாவதாக நான் ஆட அனுப்பப்பட்டேன். முதலில் நிதானமாக ஆடி ஸ்திரப்படுத்திக் கொண்டு, ரன் அடிப்பது என் பழக்கம். ஆனால் அன்று அதற்கெல்லாம் வழியில்லை. ஆனாலும் அன்றைய ஆட்டம் நல்ல அனுபவம்."

"படையப்பா பாட்டுக்குக் கூட நடனம் ஆடினீர்களே?"

"அதற்குக் கூட ரொம்ப பயிற்சி எடுத்துக் கொள்ளவில்லை. ரஜினி ஸ்டைல் எனக்கு ரொம்பப் பிடிக்கும் என்பதால், எல்லாம் எனக்கு அத்துபடி. எனவே சிரமம் இல்லாமல் ஆடினேன்.''

"ஸ்டைலில் ரஜினி பிடிக்குமென்றால், பிறரைப் பிடிக்காதா?''

"ஐயய்யோ அப்படியில்லை. நடிப்பில் சிவாஜி, கமல். சண்டைக் காட்சிகளில் அர்ஜுன், விஜயகாந்த்."

"இளையதலைமுறையினரில்.."

"விஜய், அஜீத், சூர்யா என்று எல்லாரையும் பிடிக்கிறது. ஒரு விஷயம் தெரியுமா? நான் எல்லாப் படங்களையுமே பார்த்து விடுவேன். அப்பா, அம்மாவுடன் சில என்றால், நண்பர்களுடன் பல. இது சினிமா பார்க்கும் மோகத்தின் காரணமாக இல்லை. இன்று சினிமா எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது என்று அப் டு டேட் ஆக தெரிந்து வைத்துக் கொள்வதற்காக. போன வாரம் வெளியான படங்களைக் கூட நான் பார்த்தாகி விட்டது. தமிழ், இந்தி, தெலுங்கு, ஆங்கிலம் என்று ஒன்று விடமாட்டேன்."

''பிரபலமாக இருந்து கொண்டு, வகுப்பறையில் உட்கார்ந்து பாடம் கேட்பது, ஸ்கூல் போய் வருவது எல்லாம் எப்படியிருக்கிறது?''

"வகுப்பில் நான் ஒரு மாணவன். தட்ஸ் ஆல். மற்றவர்களுக்கும் எனக்கும் வித்தியாசம் எதுவும் கிடையாது. ஆனால், ஸ்கூலுக்குள், அவ்வப்போது, சின்ன வகுப்பு மாணவர்கள் என்னைப் பார்த்து விட்டால், ஓடி வந்து கைகுலுக்குவது, ஆட்டோகிராப் என்று கொஞ்சம் தர்மசங்கடப்படுத்தி விடுவார்கள். மற்றபடி நோ ப்ராப்ளம்."

"வீட்டில் பாக்கெட் மணி கொடுப்பார்களா?''

''ம். தினம் ஐம்பது ரூபாய் கையில் இருக்கும். காலையில் வீட்டில் சாப்பிட நேரமிருக்காது என்பதால் ஸ்கூல் கேண்டீனில் டிபன், கூல்டிரிங்ஸ். மற்றபடி ரொம்ப செலவு ஏதும் இல்லை. மதிய உணவு வீட்டிலிருந்து வந்து விடும். நான் அதிகமாகப் பணம் செலவழிப்பது, மியூஸிக் கேஸட், சி.டி. வாங்குவதற்காகத்தான். நான் நிறைய மியூஸிக் கேட்பேன்."

"அப்பா படத்தில் மட்டும்தான் நடிப்பீர்களா?

"இல்லை! அறிமுகம் அப்பா மூலம் என்பது நிச்சயம். அடுத்து, நல்ல கதை, கேரக்டர் என்றால் டைரக்டர், கம்பெனி பார்த்து அப்பா ஓ.கே. சொன்னால் நடிப்பேன். என் அப்பாதான் எனக்கு நண்பர், ஆசான், வழிகாட்டி!''

**— மௌலி**

படங்கள் : **யோகா**



# அனைவருக்கும் இலவசம் !

## 420 ரூபாய் மதிப்புள்ள சிறப்பான இங்கிலீஷ் கோர்ஸ்

### எங்கள் நிறுவனத்தின் விளம்பரத்திற்காக...

**மொத்தம் மூன்று டிவிஷன்களில் பிரத்தியேக இங்கிலீஷ் கோர்ஸ் !**

| டிவிஷன் - 1 | டிவிஷன் - 2 | டிவிஷன் - 3 | | |
|---|---|---|---|---|
| ரூ. 110 | ரூ. 140 | ரூ. 170 | இவை அனைத்தும் | ஃப்ரீ ! |

**டிவிஷன்-1** (பேசிக் இங்கிலீஷ் கோர்ஸ்) ABCD மூலமாக ஆங்கிலம் கற்பிக்கப்படுகிறது ஆங்கிலம் சிறிதும் தெரியாதவர்கள் கூட இந்த கோர்ஸ் மூலம் ஆரம்ப நிலை இங்கிலீஷ் கற்க முடியும். ஆசிரியர் உங்கள் முன் நின்று கற்றுக் தருவது போன்ற அனுபவத்தை உருவாக்குகிறது. இந்த கோர்சின் விலை ரூ.110/-

**டிவிஷன்-2** (இங்கிலீஷ் கிராமர் கோர்ஸ்) எந்த மொழியானாலும் அதன் உயிர் இலக்கணமாகும். இலக்கணமற்ற மொழி உயிரற்ற மொழி போன்றதாகும். மொழிக்கு கம்பீரத்தை அளிப்பது இலக்கணம் தான். அதுபோன்ற முக்கியமான இலக்கணத்தை தவறுகள் ஏதுமின்றி சுலபமுறையில் நீங்கள் கற்று மற்றவர்களுக்கும் கற்பிக்குமாறு உங்களை உருவாக்குகிறது. இந்த கோர்சின் விலை ரூ.140/-

**டிவிஷன்-3** (இங்கிலீஷ் ரைட்டிங் & ஸ்பீக்கிங் கோர்ஸ்) சுலபமாக ஆங்கிலம் எழுத மற்றும் பேச கற்றுக் தரும் ஈஸி இங்கிலீஷ் கோர்ஸ். தடுமாறாமல் பேச மற்றும் தவறுகள் இல்லாமல் உங்கள் எண்ணங்களை ஆங்கிலத்தில் வெளிப்படுத்த இது மிகவும் உத்தமமான கோர்ஸ். இந்த கோர்ஸ் மூலமாக நீங்கள் மிகவும் சரளமாக ஆங்கிலம் எழுதவும் பேசவும் முடியும். இந்த கோர்சின் விலை ரூ.170/-

**அட்வான்ஸ்டு கம்ப்யூட்டர் டெக்னாலஜி மூலமாக தயாரிக்கப்பட்ட ஸ்பெஷல் கோர்ஸ்**



## இலவசமாக கோர்ஸை இவ்வாறு பெற்றுக்கொள்ளவும்

• இந்த பத்திரிகையிலுள்ள கூப்பனில் உங்களுடைய விவரங்களை எழுதி அனுப்ப வேண்டும் • ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளில் எழுதி அனுப்பினால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை • ஒரு கோர்ஸை இலவசமாக பெற ஒரு கூப்பனை கட்டாயமாக அனுப்ப வேண்டும் • கவரின் மீது ரூ.3 மதிப்புள்ள தற்பொழுதைய ஸ்டாம்பை ஒட்டி அனுப்பவேண்டும். • கூப்பனில் உள்ள நிபந்தனைகளின் படி இந்த ஃப்ரீ கோர்ஸ் அளிக்கப்படும். • கோர்ஸ் முற்றிலும் இலவசம், ஆனால் இதை பெற்றுக் கொள்வதற்கு உண்டான செலவுகளை நீங்களே ஏற்றுக் கொள்ளவேண்டும் • இந்த ஃப்ரீ கோர்ஸை உங்களுக்கு அனுப்புவதில் ஏதேனும் தடங்கல் ஏற்பட்டால், கோர்ஸ் அனுப்புவதில் முடிவு எங்களையே சாரும் • இந்த விஷயத்தைக் குறித்து எந்த விதமான கடிதப் போக்குவரத்திற்கும் இடமில்லை

**இக்கூப்பனை பூர்த்தி செய்து தாமதமின்றி உடனே அனுப்பவும்**

# STUDENTS' ENGLISH INSTITUTE

519

P.B.No. 8569, 15/1, Parthasarathipuram Extn. T.Nagar, Chennai - 600 017

எனக்கு 420 ரூ. மதிப்புள்ள ஸ்டுடென்ட்ஸ் இங்கிலீஷ் இன்ஸ்டிட்யூட் அவர்களின் டிவிஷன் 1,2,3 சிம்பிள் இங்கிலீஷ் கோர்ஸ் பேக்கேஜை இலவசமாக அனுப்பித் தரவும் தபால் செலவுகள், பேக்கேஜிங் ஃபார்வார்டிங் செலவுகள் & அட்வர்டைசிங் மெயின்ட்டெனன்ஸ் செலவுகள் நிமித்தம் ரூ.100ஐ தபால்காரரிடம் தந்து எனது ஃப்ரீ ஸ்டுடென்ட்ஸ் இங்கிலீஷ் கோர்ஸ் பாக்கெட்டை பெற்றுக் கொள்கிறேன் என உறுதியளிக்கிறேன். இந்த ஃப்ரீ கோர்ஸ் வாய்ப்பையளித்த உங்களுக்கு நன்றி.

(உங்களின் விலாசத்தை நன்கு புரியும் படியாக, ஆங்கிலத்தில் எழுதவும், இல்லாவிடில் கோர்ஸை அனுப்பித்தர முடியாது)

NAME ..............................................................................

ADDRESS ..............................................................................

.............................................................................. PIN CODE | | | | | | |

# ரூ. 10,000 பரிசு பெறும் நகைச்சுவை பயணக் கட்டுரை

**கோ**டை விடுமுறைக்கு எங்கு போவது என்று யோசித்துக் கொண்டிருந்த கணவரிடம் அந்தமான் போகவேண்டும் என்ற நெடுநாளைய ஆசையை வெளியிட்ட போது, என்னை மேலுங்கீழும் பார்த்து விட்டு, "அந்தமானுக்கு ரயில் போவதாகத் தெரியவில்லையே!" என்றார். இரண்டு நாட்களுக்கு முன்பு டைட்டானிக் பார்த்ததுதான் ஐயாவின் தடுமாற்றத்திற்குக் காரணம். "பயப்படாதீர்கள், டைட்டானிக் காலத்தில் எல்லாம் கப்பல் சரியாகக் கட்டி இருக்க மாட்டார்கள். தவிர வங்காள விரிகுடாவில் பனிப்பாறைகளும் மிதக்காது'' என்று சொல்லி ஒருவாறு சமாதானப்படுத்தி மசிய வைத்தேன்.



• பீப்பாய் போல் இளநீர்

(இப்போதாயிருந்தால் ரயில் மட்டும் பாதுகாப்பானதா என்று அவர் வாயைச் சுலபமாக அடைத்திருப்பேன்!)

அந்தமானுக்கு விமானம் உண்டென்றாலும் மத்தியதரவர்க்கத்திற்கு கட்டுபடி ஆகாது. தவிர, கப்பலில் இரண்டு மூன்று நாட்கள், "எல்லை இல்லாததோர் வானக் கடலிடை" செல்லும் இன்பத்திற்காக அல்லவோ

**கா. புவனேஸ்வரி**

இதைத் தேர்ந்தெடுத்தேன். ஆகவே அந்தமான் செல்ல சாதாரணர்களுக்கு இரண்டே வழிகள்தான் உள்ளன. ஒன்று கப்பலில் செல்வது அல்லது நீந்திச் செல்வது.

கப்பலில் ஏற மெரீனாவில் பெட்டி படுக்கைகளுடன் போய் நின்று விடாதீர்கள். கடற்கரை ரயில் நிலையத்திற்கு இடதுபுறம் வெகு அருகே உள்ளதுதான் துறைமுக நுழை வாயில். அருகே போகும் முன்பு காமிராவை ஒளித்து வைத்துவிடவும். இல்லாவிட்டால் உள்ளே விட மாட்டார்கள். இந்த சாடிலைட் யுகத்தில் இப்படியும் ஒரு கட்டுப்பாடு!

இங்கிருந்து கப்பல் நிற்கும் இடத்திற்கு அரை கி.மீ.தூரம். கப்பல் அருகே் கொள்ளையடிக்க - மன்னிக்கவும்-கொண்டுவிட சைக்கிள் ரிக்ஷாக்களுக்கு மட்டுமே அனுமதி உண்டு. இந்த தூரத்திற்கு அவர்கள் கேட்பது ரூ.60 முதல் 80 வரை. வெள்ளைக்காரர்கள் என்றாலும் 60 முதல் 80வரைதான்– அதாவது டாலர்களாக! நாங்கள் போனபோது இப்படித்தான். (இப்போது மாநகரப் பேருந்துகள் உள்ளே செல்கின்றனவாம்.)

கப்பலருகில் போனதும் மெடிகல் செக்

• படகுக்காகக் காத்திருக்கிறோம்





• கப்பலில் பயணம்

–அப் என்று ஒரு கூத்து.

வருபவர்கள் ஆணா, பெண்ணா என்ன வயது என்று கூட பார்க்காமல் அவர்கள் யந்திரத்தனமாகக் கேட்கும் இரண்டே கேள்விகள், "உடம்பு சரியாய் இருக்கா? (அந்தக் கால எம்.ஜி.ஆர். படங்களில் ரவுடிகளைப் பார்த்து எம்.ஜி.ஆர் கேட்பதுபோல இருக்கும்!) ப்ரெக்னண்டா?"

இதைத் தொடர்ந்து தேய்ந்து போன ரப்பர் ஸ்டாம்பால் உங்கள் பயணச் சீட்டில் குத்தப்படும். இதுதான் மெடிக்கல் செக்கப்!

கப்பலில் ஏறும் போதுதான் நான் எவ்வளவு பெரிய முட்டாள் என்று தெரிந்தது. கப்பலைப் பார்த்தால் டைட்டானிக் காலத்திற்கும் முந்தியதாகத் தென்பட்டது.

கடைசியாக காலை 10 மணிக்கு புறப்பட வேண்டிய கப்பல் 12 மணிக்குப் புறப்பட்டது. புறப்பட்டது என்றா சொன்னேன் புறப்பட வைக்கப்பட்டது. அவ்வளவு பிரம்மாண்டமான கப்பலை இரண்டு குட்டிப் படகுகள் முட்டி மோதி தள்ளி இழுத்து கடலுக்குக் கொண்டு சென்றது விசித்திரமாக இருந்தது.

கப்பலின் தளத்தின் கீழ் உள்ள கீழ் வகுப்புகள் பங்க் என்றும் மேலே உள்ள மேல் வகுப்புகள் (மாடிபோல வெளியிலிருந்து தெரிவது) காபின்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. பங்க் கட்டணம் சுமார் ஆயிரம் ரூபாய்தான். ரயிலில் உள்ளதை விட பெரிதான இரண்டடுக்கு பர்த்துகள் இதில் உண்டு.

நாங்கள் நான்கு பர்த்துகள் உள்ள காபின் அறையில் சென்றோம். மறுநாள் காலை ஷாருக்கான் போன்ற தோற்றமுள்ள வெள்ளைச் சீருடை அணிந்த ஒருவர் உள்ளே வந்தார். கணவர் 'ஏதேது உயர் வகுப்பில் பயணம் செய்பவர்களை காப்டனே நேரில் பார்த்து குசலம் விசாரிப்பார்

# அந்தமானைப் பாருங்கள் அழகு



• பளிங்குபோன்ற நீரில் நீந்திக் களிக்கலாம்

போலும்' என்று சொல்லிக் கொண்டு இருக்கையிலேயே, "ஷாருக்கான்" துடைப் பக்கட்டை ஒன்றை எடுத்துக் கொண்டு டாய்லெட்டை கழுவ ஆரம்பித்தார். கப்ப லும் பணியாளர்களும் மும்பையைச் சேர்ந்த வர்கள். மும்பைக்காரர்கள் பாவம்! அவர்கள் பெர்சனாலிட்டிக்கு ஏற்ற வேலைகள் கிடைப்பதில்லை.

தரப்பட்ட உணவோ கற்காலத்தியது. இந்த உணவு வகைகளைக் கண்டு வெறுப் படைந்த எனது ஆறு வயது சு(கு)ட்டிப் பெண், "அம்மா! கான்டீன்ல இருக்கற மாமா ஒரு பாத்திரத்துல ஊறுகா ஒளிச்சு வெச் சுருக்கார். ஊறுகா இருந்தா தயிர் சாதமும் இருக்குமே, கேளேன்!" என்றது. அவ்வாறு கேட்டதில் அவர் சிரித்துவிட்டு, "கப்பலில் வேலை செய்பவர்களுக்கு மட்டும் தனியே தயிர் சாதம் தரப்படும்" என்றார். அதாவது பயணிகள் சாப்பிடும் உணவைச் சாப்பிட கப்பலில் வேலை செய்பவர்கள் தயாராக இல்லை. எனவே 'வெந்ததைத் தின்று விதி வந்தால் சாவோம்' என்ற சித்தர் பாடல்படி நடக்கக்கூடியவர்கள் மட்டுமே அந்தமானுக் குக் கப்பல் ஏறலாம்!

கப்பலில் நூலகம் உண்டு. அங்குள்ள "சமீபத்திய" பத்திரிகைகளைப் புரட்டினால் "ஆசிய ஜோதி அணைந்தது", "நேருவுக்கு பிறகு" போன்ற அரசியல் செய்திகளையும் "ஜெமினி கணேசன் சாவித்திரி ரகசியத் திருமணமா?" போன்ற சினிமா கிசுகிசுக் களையும் (மனிதர் என்னவோ இன்னும் ஓயவில்லை) பார்க்கலாம். பொழுதுபோக்கு அறையில் கப்பலின் ஆட்டத்திற்கேற்ப

---

**"உனக்கும் உன் கணவருக்கும் ஈகோ பிரச்னை தலைதூக்கறதுன்னு சொன்னியே எப்பப்ப தலைதூக்குது?"**

**"நான் சமைக்கறேன்னு சொன்னதும் அவர் மூஞ்சி உர்ன்னு ஆயிடுது!"**

**– வடபழனி எஸ். உஷாதேவி**



காயின்களைக் குழியில் விழவைக்கும் "ஆடோமேடிக் காரம் போர்டுகள்" உள்ளன. சென்னையில் உள்ளது போலவே கலங்க லான "உலகத்திலேயே முதல் தடவையாக திரையிடப்படும்" வீடியோ படங்களும் பார்க்கலாம்.

சென்னையிலிருந்து அந்தமான் 1200 கி.மீ. போய்ச்சேர 56 மணி நேரம் ஆகும் என்று கையேடுகள் சொல்கின்றன. ஆனால் 56 மணி நேரம் ஆகியும் அந்தமான் வரவில்லை. அரசு ஊழியரான கணவர் உள்ளே உள்ள தால்தான் இத்தனை தாமதமோ என்று சந்தேகம் எழுந்தது! அனுபவம்மிக்க சக பயணி ஒருவரிடம் கேட்டபோது, "அது ஒண்ணுமில்லீங்க. இரண்டு எஞ்சின்ல ஒண்ணுதான் வேலை செய்யுது. அதனால கப்பல் மெதுவாப் போயிட்டிருக்கு. எப்போ அந்தமான் போகும்னு ஆண்டவனுக் குத்தான் தெரியும்" என்றார். அந்த ஒரு எஞ்சினும் நின்று போய் விட்டால் என்ன ஆகும் என்று கேட்டேன். அவர் "BBC, CNNலே கவரேஜ் குடுப்பாங்க. அப்பவும் தூர்தர்ஷன் கண்டுக்காது!" என்றார்.

கணவரோ, கப்பல் காப்டன் ஆளுக்கு ஒரு துடுப்புக் கொடுத்து பென்ஹர் படத்தில் வருவதுபோல சாட்டையால் அடித்து கப்பலை ஓட்டுவாரோ என்ற பீதி யில் ஆழ்ந்து போய் எரிச்சலுடன் முணு முணுக்க ஆரம்பித்தார். "பேசாம இந்தியா விலேயே சுத்தாம அந்த மானைப் பார்க் கணும், இந்தப் புலியைப் பார்க்கணும்னு ஏன்தான் அலைகிறாயோ" என்ற கணவரை, "பேசாமல் இருங்கள்; அந்தமானும் இந்தியா வில்தான் இருக்கிறது" என்றேன். சொல்லப் போனால் இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்த நாள் 30.12.43 என்று கூட சொல்ல லாம். ஏனென்றால் அன்றுதான் நேதாஜியும் ஜப்பானியரும் அந்தமான் தீவைப் பிடித்து அங்கு மூவர்ணக் கொடி ஏற்றி தீவின் பெயரையும் "ஷாஹீத் அண்ட் ஸ்வராஜ் த்வீப்" என்று மாற்றினார்கள்.

இருள் முற்றும் விலகாத காலை நேரத்தில் அந்தமான் வந்தோம். துறை முகத்தை அடையும் முன்பு அரைகுறை வெளிச்சத்தில் தெரியும் சிறுசிறு தீவுகளும், வழிகாட்டும் மிதவை விளக்குகளும், பளீர் பளீரென ஒளிரும் கலங்கரை விளக்கமும் கண்கொள்ளாக் காட்சி. சென்னை வரும் போது கடற்கரைச் சாலையில் உள்ள சோடி யம் ஆவி விளக்குகளின் ஜெகஜ்ஜோதி



## ஜெ. சொத்தும் ராதா ரவியின் விளக்கமும்!

"ஜெயலலிதாவிடம் எப்படி இவ்வளவு சொத்து குவிந்ததுன்னு கேட்கிறாங்க, தி.மு.க.காரங்க. நாலு மொழிகளில் கதாநாயகியா



நடிச்ச ஜெயலலிதாகிட்ட இவ்வளவு பணம் இருக்குமா இருக்காதா? சாதாரண வில்லனான எனக்கே நிறைய சொத்துக்கள் இருக்கே!'' என்று திருச்சுழி, நரிக்குடி பகுதிகளில் அ.தி.மு.க. வேட்பாளர் மலைச்சாமியை ஆதரித்துப் பேசினார் ராதா ரவி. இதில் என்ன ஆச்சரியம் என்கிறீர்களா? கடன் தொல்லையால் பெரும் அவதிப்பட்டதாகச் சொல்லப்பட்டவர் ராதா ரவி என்பதுதான் விசேஷம்.

– பழ. சேதுராமன்

வெளிச்சத்தில் கலங்கரை விளக்கம் சரியாகத் தெரிவ தில்லை.

துறைமுகத்திலிருந்து சுமார் நான்கு கி.மீ. தொலைவில் உள்ளது தலைநகரான போர்ட் ப்ளேரின் நகர்ப்பகுதி. கப்பலில் இருந்து வெளியே வந்தவுடன் ஒரு ஆட்டோ கூட கண்களில் தென்படாதது ஆறுதலாய் இருந்தது. (நான் சென்னைவாசியல்லவா!) சாலைகள் மேடுபள்ளமாய் உள்ளதால்– இது சென்னையில் உள்ளது போன்ற 'மேடு பள்ள'மல்ல; போர்ட் ப்ளேரை குன்றுகள் நிறைந்த மலை நகரம் என்று சொல்லலாம்– ஆட்டோக்கள் அங்கு ஓடுவதில்லையாம். அதனால் டாக்சியில்தான் போக வேண்டும் என்று தெரிந்தவுடன் ஒரு ஐநூறு ரூபாய் நோட்டை தயாராக எடுத்துக் கொண்டு படபடக்கும் இதயத்துடன் ஒரு டாக்சியை அணுகிய கணவருக்கு ஆச்சரியம் கலந்த அதிர்ச்சி. ஓட்டுனர் நகருக்குச் செல்ல கேட்ட தொகையே நாற்பது ரூபாய்தான். பொதுவாக போர்ட். ப்ளேரின் மையத்திலிருந்து நகரின் எந்த இடத் துக்கும் போக இரண்டு மூன்று கி.மீ.தான் ஆகும். அத னால் பத்து ரூபாய்க்குக் கூட டாக்சியில் போகலாம்!

போர்ட் ப்ளேர் ஒரு மினி இந்தியா. தமிழர்கள், வங்காளிகள், மலையாளிகள், சீக்கியர், தெலுங்கர்கள், மும்பைக்காரர்கள் மற்றும் ஹிந்தி பேசும் மாநிலத்தவர் என்று எல்லோரையும் இங்கு காணலாம். கோயிலும், குருத்துவாராவும், சர்ச்சும், மசூதியும் அருகருகே காணலாம். அந்தமானில் வங்காளிகள் பெரும்பான்மை. முக்கால்வாசிப் பொருள்கள் சென்னையிலிருந்தும் மீதி கல்கத்தாவி லிருந்தும் வருகின்றன. இந்த நகரம் தமிழ்நாட்டில் உள்ள எந்தவொரு தாலுகா ஹெட்குவார்டர்ஸ் போலத்தான் உள்ளது. 'மாத்தாடு மாத்தாடு மல்லிகே' அலறும் டீக்கடை கள், நெரிசலான பஜார் மற்றும் மெயின் பஸ் ஸ்டாண்டு, மணிக் கூண்டு, தண்ணீர்த் தட்டுப்பாடு, மின்தடை, ஒயின் ஷாப்புகள், திறந்த சாக்கடைகள், வெற்றிலை போட்டுத் துப்புவது, அங்கங்கே... போவது எல்லாம் உண்டு. 'இதென்ன... அந்த மானைப் பாருங்கள் அழுக்கு' என்றல் லவா தலைப்பிருக்க வேண்டும் என்கிறீர்களா? பொறுங்கள். போர்ட் ப்ளேர் மட்டுமே அந்தமான் அல்ல! அழகுகள் பின்னால் வரும்.

நல்ல வெயில் நேரத்தில் போனதால் நா வறண்டிருந்தது. இளநீர்க் கடைக்குச் சென்று மூன்று இளநீர்கள் வெட்டச் சொன்னார் கணவர். இளநீர் வெட்டுபவர் "ஒண்ணு போதுங்க" என்றார். 'இதென்ன மத்தியதர வர்க்கத்துக்கான ஏழைமை நம் முகத்திலேயே தெரிகிறதா? அல்லது இந்த ஒல்லிப் பிச்சான்களுக்கு மூன்று பேராய் இருந்தாலும் ஒரு இளநீரேபோதும் என்று நினைத்துக் கொண்டாரா?' என்று யோசித்துக் கொண்டிருந்தபோதே இளநீர் வந்தது. ஏ அப்பா! சென்னையில் கிடைப்பதைப் போல மூன்று மடங்கு பெரிதாக இருந்தது அது. ஒரு இளநீரில் 1500 மில்லி இருக்கும். இது மாதிரி தெற்கில் உள்ள நிக்கோபார் தீவிலிருந்து அவ்வப்போது வருமாம். மற்றபடி சாதாரண சென்னை சைஸ் இளநீரும் உண்டாம்.

(மீதி அடுத்த வாரம்)

ஐயோ! ஐயோ!
எலக்ட்ரானிக் வோட்டு
மெஷின்லு கருணாநிதி
தில்லு முல்லு பண்ணிட்டாரே...

தேர்தல்
தோல்வி ஜுரம்



1999 செப்டெம்பர் 19
பிரமாதி புரட்டாசி 2
மலர் : 58
இதழ் : 8

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பெருக்கெடுத்த கல்கியுணர்வு!

மகாகவி பாரதிக்கு அடுத்தபடியாக அமரர் கல்கிக்குத்தான் நடந்திருக்கிறது - ஓராண்டுக் காலம், உலகம் முழுவதிலும் கோலாகலமான நூற்றாண்டு விழா! சிகரமாக 9.9.99-ல் சென்னை காமராஜர் அரங்கில் நிறைவு விழா. அறிவாலும் உணர்வாலும் உழைப்பாலும் ஒருங்கிணைந்து, தமிழர்கள் ஒவ்வொரு விழாவையும் வெற்றிகொள்ளச் செய்திருக்கிறார்கள்.

அத்தனை பேருக்கும் நன்றி தெரிவிக்கும் நேரத்தில் 'கல்கியுணர்வு' என்னும் மாபெரும் சக்தி குறித்து சிந்தனைகள் எழுகின்றன.

மிக எளிய குடும்பத்தில் பிறந்து, ஏழைமையினிடையேயும் கல்வியில் சிறந்து, எழுத்தாளர்களாகப் பிரகாசித்தவர்கள் பலர் உண்டு;

நாட்டுக்காக வாழ்வை அர்ப்பணித்து உழைத்தவர்கள் அனேகம்;

மொழியை உயிர்மூச்சாகக் கொண்ட பலர், அதன் சிறப்புக்காகப் பாடுபட்டதுண்டு;

கலைகளைக் கண்ணெனக் கருதி, அவற்றைப் பேணுவதற்கு வாழ்நாளை ஒதுக்கியவர்கள் இருக்கிறார்கள்.

சீரிய அரசியல் கண்ணோட்டமும் பொது வாழ்வு குறித்த பொறுப்புணர்வும் கொண்டு, சமுதாய முன்னேற்றத்துக்கென வாழ்க்கையை அர்ப்பணித்தவர்கள் உண்டு.




அமரர் கல்கி தமது 55 வருட வாழ்க்கையில் இவை அனைத்தையும் செய்தார் என்பதுதான் அவரது தனிச் சிறப்பு.

இத்தனை பணிகளுக்கிடையேயும் மனிதர்களுக்காகப் பிரத்யேகமாக நேரம் ஒதுக்க அவர் தவறவில்லை. அதனால்தான் அவர் மறைந்து 45 ஆண்டுகள் ஆன பிறகும் ஆயிரக்கணக்கான தமிழர்கள் தங்கள் வாழ்வில் ஏற்பட்ட 'கல்கி பாதிப்பை'க் குறித்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

இத்தனை பண்புகளும் அவர் எழுத்துக்களுக்கு உரம் சேர்த்தன; அவர் புரட்சிகரமாக எளிமைப்படுத்திய தமிழ் மொழிக்கு ஆழமும் அர்த்தமும் சேர்த்தன.

தனிவாழ்விலும் பொதுவாழ்விலும் அவர் காத்த தூய்மை, அந்த அழகு தமிழுக்கு வலிமையைத் தந்தது. கல்கியின் சொற்களுக்கு - அவை வரி வடிவிலானாலும் சரி, ஒலி வடிவிலானாலும் சரி - மதிப்பைப் பெற்றுத் தந்தது.

தமிழுணர்வின் மேன்மை, தேசநலனில் அடங்கியிருப்பதை அவர் மிகத் துல்லியமாகச் சுட்டிக்காட்டினார். கல்கி இதழைத் தொடங்கியபோது 'இது தமிழர்களின் பத்திரிகை' என்று கூறியவர், 'இதற்கு மூன்று நோக்கங்கள் உண்டு; முதலாவது தேச நன்மை, இரண்டாவது தேச நன்மை; மூன்றாவதும் தேச நன்மை!' என தமிழர் நலனை தேச நலனுடன் பிணைத்தார்.

மொழியுணர்வைப் போலவே கலையுணர்வையும் தேசநலனின் ஒரு பரிமாணமாகத்தான் கொண்டார். பாரம்பரியக் கலைகள், ஒரு தேசத்தின் ஆன்மாவை எதிரொலிப்பவை. எனவே அவை பாதுகாத்து வளர்க்கப்பட வேண்டும் என்று கருதி உழைத்தார். இதற்கான பிரசாரம் மூலம் மக்களின் அறிவைத் தொட்டதோடு, தமது புனைவிலக்கிய படைப்புகளின் மூலமாக இதயங்களைத் தொட்டசைத்து, கலைகளின்பால் மெய்க்காதல் கொள்ளச் செய்தார். சிவகாமியின் சபதத்தைப் படித்தவர்களும் மீரா திரைப்படத்தைப் பார்த்தவர்களும் நம்




கலைகளின் உன்னதத் தன்மையை தரிசித்து, சிலிர்க்காமலிருந்திருக்க முடியாது.

கல்கியின் கலைப் பிரேமை, அவரது இயல்பான கவிதையுள்ளத்தோடு இழைந்து, ஓர் அபூர்வமான அழகுணர்ச்சியை உருவாக்கியது. இந்த அழகுணர்ச்சி, அவர் எழுத்தில் மட்டுமின்றி, வாழ்விலும் பணிகளிலும் எப்போதும் ஒளிவீசிற்று என்பதை, அவரது வாழ்க்கை வரலாறு உணர்த்துகிறது.

புலன்களால் நுகரப்படும் இன்பங்கள் யாவுமே, ஒரு துளியாவது மனிதனை மேம்படுத்த வேண்டும் என்ற அவரது உறுதியான கோட்பாட்டுக்கு இந்த அழகுணர்ச்சியே அஸ்திவாரமாக அமைந்தது.

இந்த உயர் ரசனையிலிருந்து விலகிய படைப்புகளைச் சாடிக் கிழித்தெறியும் தீரமும் உறுதியும் அவருக்கு இருந்தன.

அரசியலிலும் இலக்கியத்திலும் கூட கருத்து மாறுபாடுகளை வரவேற்றவர் கல்கி. எந்தப் பிரச்னையானாலும் உறுதியான நிலைப்பாடுடன் - ஆதரவானாலும் எதிர்ப்பானாலும் சமமான 'வள்ளன்மை'யுடன் வெளிப்படுத்தினார்!

ஆனால், எதிர்ப்பு, கருத்துக்கும் சித்தாந்தத்துக்கும்தானேயொழிய அவற்றைக் கைக்கொண்ட மனிதர்களுக்கு அல்ல. கருத்தில் முரண்பட்டவர்களையும் மதித்து அவர்களுடைய ஏற்புடைய பிற கொள்கைகளை, திறமைகளை வியக்க கல்கி தவறியதில்லை. வெறும் சகிப்புத் தன்மையைக் கடந்த இந்த சமபாவம்தான் கல்கியின் சொற்களுக்கும் செயல்களுக்கும் மேலும் பலம் சேர்த்தன.

கல்கியுணர்வு என்பது இந்த உயர்பண்புகளின் அபூர்வ சேர்க்கையால் அவரது வாசகர்களும் ரசிகர்களும் பெறுகிற எழுச்சியுணர்வு. இருபத்தோராம் நூற்றாண்டை நெருங்குகிற நேரத்தில் மானுடத்திடமும் மனிதநேயத்திலும் ஆழமான நம்பிக்கை கொள்ளச் செய்யும் அரிய உந்துசக்தி இந்த கல்கியுணர்வு. ◉

# வாக்குப் பதிவும் மதுரையும்!



• சரத்குமார்



• குமரி முத்து

எதையும் சித்தாந்த ரீதியாகவே அணுகும் மார்க்சிஸ்ட் கட்சியினர்கூட கூட்டணி சகவாசமோ என்னவோ, மதுரையில் யதார்த்த ரீதியில் அணுகி விட்டார்கள். ஆம். மதுரையில் கள்ள வோட்டுப் போட்டதற்காகப் பிடிபட்டவர்களில் உசிலை ரமேஷ், அம்மாசி ஆகிய மார்க்சிஸ்ட் தோழர்களும் அடக்கம் என்றால் கள்ள வோட்டின் வலிமையைப் பார்த்துக் கொள்ளுங்களேன்!

எந்தவிதமான போராட்ட வம்புக்கெல்லாம் போகாத – ஏன் வாய் திறந்தே பேசியறியாத த.மா.கா. வேட்பாளர் ராம்பாபுகூட வாக்குப் பதிவு நாளன்று சாலை மறியலில் இறங்கி விட்டார். மதுரை ரேஸ்கோர்சுக்கு அருகிலுள்ள மாநகராட்சி ஆரம்பப் பள்ளி வாக்குச் சாவடியில் தி.மு.க.வினர் கள்ள வோட்டுப் போடுவதாக பூத் ஏஜெண்ட் விநாயகவேல், ராம்பாபுவிடம் சொல்ல, இவர் அந்த வார்டின் தி.மு.க. கவுன்சிலர் ஜெயராஜிடம் போய் நியாயம் கேட்டிருக்கிறார். இதன் காரணமாக த.மா.காவைச் சேர்ந்த விநாயகவேலையும் சேரலாதனையும் சிலர் வந்து காயமடையுமளவுக்கு கவனித்து விட்டனர். இதன் காரணமாகவே ராம்பாபு தமது சகாக்களுடன் சாலை மறியலில் இறங்கினார். அப்புறம் போலீஸ் கமிஷனர் வந்து சமாதானப்படுத்தி நிலைமையைச் சமாளிக்க வேண்டியதாயிற்று.

இதேமாதிரி மதுரையைக் கலக்கிய இன்னொரு விஷயம், ரோஸ் கலர் டோர் ஸ்லிப். எல்லாக் கட்சியினரும் வெள்ளைக் கலரில் அச்சடிக்க, மார்க்சிஸ்ட் கட்சியினர் மட்டும் ரோஸ் கலரில் அச்சடித்து விநியோகித்து விட்டனர். வோட்டுப் போட வந்த அனைவரும் ரோஸ் கலர் ஸ்லிப்பையே வைத்திருந்தது கண்டு, பிற கட்சியினருக்குக் கோபம் வந்து விட்டது.

விஷயம் விபரீதமாவது கண்ட மாவட்ட கலெக்டர் ஓடி வந்து, ரோஸ் கலர் ஸ்லிப் கொண்டு வருபவர்களிடமிருந்து அதை வாங்கிக் கொண்டு வெள்ளைத் தாளில் வாக்காளர் எண்ணை எழுதித் தர ஏற்பாடு செய்த பிறகுதான் பிற கட்சியினரின் கோபம் தணிந்தது!

மதுரையைப் பொறுத்தவரை அனைத்துக் கட்சியினரும் கள்ள வோட்டுப் போட்டதாக எல்லாக் கட்சியினருமே புகார் செய்து கொண்டனர். ஆலங்குளம் பகுதி பூத் ஒன்றில் தி.மு.க.வினர் கள்ள வோட்டுப் போட்டதாகக் கூறி மார்க்சிஸ்ட் கட்சியினர் தேர்தல் அதிகாரியிடம் சண்டை போட்டனர்.

டி.வி.எஸ். நகர் பள்ளியில் ஒரு மர்ம ஆசாமி கத்தியோடு வந்து, வாக்களிக்க வந்தவர்களை மிரட்டியதாகக் கைது செய்யப்பட்டான். சுப்பிரமணியபுரம் கம்பர் உயர்நிலைப் பள்ளியில் வைக்கப்பட்ட மை அழிந்து போக, புது மை கொண்டு வந்து வைத்தனர்.



• மறியலில் ஈடுபட்ட ராம்பாபு கோஷ்டியினர்

சில இடங்களில் புகைப்பட அடையாள வாக்காளர் அட்டை வைத்திருந்த பலருடைய பெயர்கள், வாக்காளர் பட்டியலில் இடம் பெறாததால், அவர்கள் வாக்களிக்க முடியாமல் திரும்பிப் போக நேர்ந்து விட்டது!

திண்டுக்கல்லில் அனைத்துக் கட்சி வேட்பாளர்களும் கலந்து கொள்ளும் 'நேருக்கு நேர்' நிகழ்ச்சியொன்றை திண்டுக்கல் வர்த்தகர்கள் சங்கமும் அரிமா சங்கமும் சேர்ந்து நடத்தியது. இதில் கலந்து கொள்ள த.மா.கா. வேட்பாளர் என்.எஸ்.வி. சித்தனும் பார்வார்டு பிளாக் வேட்பாளர் சுரேந்திரனும் சரியான நேரத்திற்கு வந்து விட்டனர். அ.தி.மு.க வேட்பாளர் சீனிவாசன் இரண்டரை மணி நேரம் தாமதமாக வந்தார். தி.மு.க. வேட்பாளரான நடிகர் சந்திரசேகர் வரவேயில்லை. ''ஜெயிப்பதற்கு முன்பே இப்படியென்றால் ஜெயித்த பிறகு எப்படியிருப்பார்கள்?'' என்று பலரும் முணுமுணுத்தார்கள்.

விருதுநகர் – வத்திராயிருப்பு பகுதிகளில் ஜெயலலிதாவைத் தாறுமாறாகப் பேசி தேர்தல் பிரசாரம் செய்த குமரிமுத்து, ஒரு டீக்கடையில் டீ குடிக்க வந்தார். ''அண்ணே, நீங்க வழக்கமா சிரிக்கற மாதிரி ஒரு சிரிப்பை எடுத்து உடுங்க!'' என்று அன்போடு கேட்டார் டீக்கடைக்காரர். ''தொகுதி முழுக்க பிரசாரம் செய்து வர்றதால இப்படி அப்படி சிரிக்க முடியாது!'' என்று குமரிமுத்து சொல்ல, ''எங்கம்மாவை (ஜெவை) எதிர்த்துப் பேச மட்டும் முடியுது. சிரிக்க மட்டும் முடியலையோ?'' என்று டீக்கடைக்காரர் எகிற, பாதி டீ குடித்த வாயோடு இடத்தைக் காலி செய்து விட்டார் குமரிமுத்து.

சென்ற தேர்தலில் நெல்லை தொகுதியில் சரத்குமார் போட்டியிட்டபோது, இந்தமுறை போட்டியிடும் கீதாஜீவனின் தந்தை, சரத்குமாருக்கு எதிராக வேலை பார்த்தாராம். அதனால் திருநெல்வேலியில் தங்கியிருந்தும்கூட கீதாஜீவனுக்காக சரத்குமார் பிரசாரம் செய்யவில்லை!

— பழ. சேதுராமன்

# பல்கலைக் கழகம் சொல்வது உண்மைதானா?



டெல்லியிலுள்ள A.I.C.T.E. எனப்படும் அகில இந்திய தொழில்நுட்பக் கல்வி கவுன்சிலின் அனுமதி பெறாமல் பொறியியல் வகுப்புகளைத் துவங்கி, ஏராளமான மாணவர்களையும் சேர்த்து விட்டு, இறுதியில் ஏ.ஐ.சி.டி.ஈ., தொடர்ந்த வழக்கினால் நீதிமன்றத்தின் கண்டனத்தைப் பெற்றுக்கொண்டு வகுப்புகளை கைவிட்டது திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகம். அருகிலேயே இப்படிப்பட்ட முன்னுதாரணம் இருந்தும் தூங்குமூஞ்சியாக இருந்துள்ளது மதுரை காமராசர் பல்கலைக் கழகம்.

கடந்த 1990ம் ஆண்டு "மருத்துவமனை நிர்வாகவியல்" (M.H.M.) என்ற முதுகலை பட்டப் படிப்பைத் துவக்கியது மதுரை காமராசர் பல்கலைக் கழகம். குக்கிராமத்தில் கூட அடுக்குமாடி மருத்துவமனைகள் உருவாகி வரும் இக்கால கட்டத்தில் இப் படிப்பு எம்.பி.ஏ. வுக்கு நிகராக – சற்று மேற்பட்ட நிலையிலும் கூட கருதப்பட்டது. இப் படிப்பை முடித்த மாணவர்கள் பெரிய பெரிய மருத்துவமனைகளில் உடனுக்குடன் உயர் பதவிகளில் அமர்த்தப்பட்டனர். தமிழகத்தில் அபூர்வமாக ஏற்படுத்தப்பட்ட இப் படிப்பிற்கு ஏ.ஐ.சி.டி.ஈ.யின் அனுமதி பெற வேண்டுமென்ற சிந்தனையே இல்லாமல் இயங்கி வந்திருக்கிறது மதுரை காமராசர் பல்கலைக் கழகம். விளைவு – இந்தக் கல்வியாண்டில் இப்பட்டமேற்படிப்பு வகுப்புகளை நிறுத்த வேண்டுமென்று உத்தரவிட்டு விட்டது ஏ.ஐ.சி.டி.ஈ.

இந்தியாவிலேயே சிறந்த பல்கலைக் கழகங்களில் ஒன்றாகக் கருதப்படும் மதுரை காமராசர் பல்கலைக் கழகம், இதுபோன்ற ஓர் அபூர்வமான முதுகலைப் பட்டத்திற்கு ஒன்பது ஆண்டுகளாக அனுமதி பெறாமல் அலட்சியமாக நடந்து கொண்டிருப்பது பலருக்கும் அதிர்ச்சி தரும் விஷயம். 'மருத்துவமனை நிர்வாகவியல்' மாணவர்கள், "பல்கலைக் கழகத்தில் முறையிட்டும் பலனில்லை" என்று புலம்புகிறார்கள். கடந்த ஒன்பது ஆண்டுகளில் எந்த ஒரு சிண்டிகேட் கூட்டத்திலும் இப் படிப்பிற்கு அனுமதி வாங்குவது பற்றியே பேசவில்லை என்பதும் வருத்தத்திற்குரிய விஷயமே!

"இப்படிப்பு துவங்கப்பட்ட முதல் மூன்றாண்டுகள், தமிழக அரசின் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் நலத்துறை, தனது செலவில் பல தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி மாணவர்களைப் படிக்க வைத்தது. 'அரசு மருத்துவமனைகளுக்கு இத்தகைய பயிற்சி முடித்தவர்கள் தேவை' என்று கூறி, அம் மாணவர்களுக்குக் கட்டணம் செலுத்தி படிக்க வைத்தது அரசு. ஆனால் பிற்பாடு அந்த மாணவர்களை அரசு கண்டுகொள்ளாமலே விட்டு விட்டது, பாவம்...!" என்றும் குற்றஞ்சாட்டப்படுகிறது.

ஏ.ஐ.சி.டி.ஈ., விதித்த தடை குறித்து மதுரை காமராசர் பல்கலைக் கழக பதிவாளர் ராமசாமியிடம் நாம் பேசியபோது, "எந்தெந்த கோர்ஸுக்கு அனுமதி பெற்றுள்ளீர்கள், எதெதற்கு அனுமதி பெறவில்லை என்று பட்டியல் அனுப்பும்படி ஏ.ஐ.சி.டி.ஈ. கடிதமொன்று அனுப்பியது. சரியான மாணவர் சேர்க்கையில்லாததால் நாங்கள் M.H.M. கோர்ஸை நிறுத்திவிட்டோம். இரண்டும் ஒரு சேர நடந்ததால் 'தடை' என்ற செய்தி பரவிவிட்டது. உண்மையில் ஏ.ஐ.சி.டி.ஈ. தடை விதித்து, கோர்ஸை நாங்கள் நிறுத்தவில்லை" என்றார்.

— கிரண்நியூஸ்

# சினிமா இவரது 'சைட் பிஸினஸ்!'

இளம் டைரக்டர்கள் யார் நல்ல கதையோடு தெருவில் போனாலும், கைத் தட்டிக் கூப்பிட்டு, டைரக்ஷன் சான்ஸ் கொடுத்து, ஹிட் படம் கொடுக்கிறாரல்லவா சூப்பர் குட் பிலிம்ஸ் ஆர்.பி. சௌத்ரி? அவரைப் போலவே ஆனால், அவரைவிட பல மடங்கு சூப்பர் டூப்பர் ஹிட் படங்களைக் கொடுத்தவர் என்ற பெருமைக்குரியவர் இந்தித் திரையுலகின் நெம்பர் ஒன் பைனான்சியரான பரத்ஷா. ராஜ்கபூர், சுபாஷ் கை, மன்மோகன் தேசாய், ராஜ்குமார் சந்தோஷி, மகேஷ்பட், போனி கபூர் என்று வடஇந்தியர்களை மட்டுமில்லாமல், மணிரத்னம், ராம்கோபால் வர்மா என்று தென்னிந்தியாவின் டாப் டைரக்டர்களையும் வைத்துப் படமெடுத்தவர் பரத்ஷா!

பரத்ஷாதான், கமல்ஹாசனின் ஹேராம் படத்துக்கும் பொருளுதவி செய்திருப்பவர்.



தமிழில் மட்டுமின்றி, இந்தியிலும் சேர்த்து எடுத்தால், அகில இந்திய அளவில் பெரிய மார்க்கெட் கிடைக்குமே என்று கமல் யோசித்த வேளையில், பிரசாத் புரொடக்ஷன்ஸ் ரமேஷ் பிரசாத், பரத்ஷாவையும், கமலையும் இணைத்து வைக்க, ஹேராமுக்கு அகில இந்திய வீச்சு கிடைத்தது.

பத்து, பதினைந்து வருடங்களுக்கு முன்பு, சினிமா வினியோகம் செய்ய ஆரம்பித்த பரத்ஷாவுக்கு இன்று பாலிவுட்டில் 'ஹிட் மேன்' என்று செல்லப் பெயர். அமிதாப்பச்சன் படங்களைத்தான் ஆரம்பத்தில் அதிகமாக வாங்கி விநியோகித்துக் கொண்டிருந்தார்.

"அதன்பின், எந்தப் படமானாலும் சரி, நல்ல படம் என்று என் மனதில் தோன்றினால் போதும். உடனே எடுத்துக் கொண்டு விடுவேன். தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் என் கணக்கு தப்பாகப் போனதே கிடையாது" என்று கூறுகிறார் பரத்ஷா.

"விநியோகஸ்தராக இருப்பதில் ரொம்ப ரிஸ்க் இருக்கிறது. படம் ஓடாவிட்டால் நஷ்டத்தைச் சந்திக்க வேண்டும். அந்த நஷ்டத்தை, அடுத்தப் படத்தில் ஈடு கட்டும் விதமாய், கொஞ்சம் ரேட்டைக் குறைத்துக் கொள்வார்கள். ஆனால், பைனான்ஸ் பண்ணுவதில் எந்த ரிஸ்கும் இல்லை. அதிலும் பெரிய, புகழ் பெற்ற டைரக்டர்களின் படங்களுக்கு பைனான்ஸ் பண்ணுவதில் ரிஸ்க் ரொம்பக் குறைவு" என்று கூறும் பரத்ஷாவுக்கு வைர வியாபாரம்தான் குடும்ப பிசினஸ். வெற்றிப் படங்கள் தருவது சைடு பிசினஸ்தான் என்றால் ஆச்சரியமாக இருக்கிறதா?

"நீங்கள் எடுத்த படங்கள் தோல்வி அடைந்ததே இல்லையா?"

"ரொம்ப அரிது! தொண்ணூறு சதவீதம் வெற்றி பெற்று உள்ளன. வெற்றியும், தோல்வியும் பிசினசில் சகஜம்தானே? மணிரத்னம் எடுத்த தில்சே (உயிரே) எனக்கு மிகவும் பிடித்த படம். நெகிழ்ச்சியான கதை, நல்ல பாடல்கள், நல்ல நடிப்பு, நட்சத்திர மதிப்பு என்று எல்லாமே நன்றாகத்தான் இருந்தன. ஆனால் படம் பெரிய அளவில் வெற்றி பெறவில்லை. சைனாகேட் படத்திலும் அப்படித்தான். திட்டமிட்டதை விட, பட்ஜெட் அதிகமாகி விட்ட காரணத்தால் லாபமும் இல்லை. நஷ்டமும் இல்லை என்ற நிலை ஏற்பட்டது. செலவைக் கட்டுப்படுத்தி இருந்தால் லாபம் பார்த்திருக்க முடியும்."

"பெரிய டைரக்டர்களையெல்லாம் நீங்களே வளைத்துப் போட்டு விடுவதாக ஒரு பேச்சு உள்ளதே!"

"வருடத்தில் இருநூறு படங்கள் வெளியானால் இருபது, இருபத்தைந்து படங்களில்தான் நான் பணம் போடுகிறேன். மீதி இருக்கும் படங்கள் மற்றவர்களுடையது தானே! நான் யாரையும் தடுக்கவில்லையே!"

— மானஸா

நன்றி: பிளிட்ஸ்

# பக்தர்கள் அனைவரும் வருக!

நாகை மாவட்டம் மயிலாடுதுறை வட்டம் கிழாய் சரகம்

# புத்தமங்கலம்

ஸ்ரீ அபிராமி அம்பாள் சமேத ஸ்ரீ கிருபாலநாத சுவாமி

ஸ்ரீ ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ வரதராஜப் பெருமாள்

ஆலயங்களுக்கு

அமரர் கல்கியின் நுற்றாண்டுவிழா நினைவாக

அவர் பிறந்த கிராமத்தில் நிகழ்த்தப்பெறும்

ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

## மகா கும்பாபிஷேகம்

**16.9.99**

காலை **6.30** மணி: யாக பூஜைகள் ஆரம்பம்

**9.30:** ஸ்ரீ வரதராஜப் பெருமாள் ஆலய யாகசாலை பூர்ணாஹுதி தீபாராதனை யாத்ராதானம், கிரகப்ரீதி கடம் புறப்பாடு.

**9.45:** ஸ்ரீ வரதராஜப் பெருமாள் ஆலய மகா கும்பாபிஷேகம்

**10.00:** ஸ்ரீ கிருபாலேசுவரர் ஆலய யாகசாலை பூர்ணாஹுதி தீபாராதனை.

யாத்ராதானம் கிரகப்ரீதி கடம் புறப்பாடு

**11.00:** ஸ்ரீ கிருபாலேசுவரர் ஆலய விமான கும்பாபிஷேகம்

**11.15:** மூலஸ்தான மகா கும்பாபிஷேகம்

**11.30:** ஆசீர்வாதம், பிரசாதங்கள் வழங்குதல்

இரவு **7.00** மணி: சிவ விஷ்ணு ஆலயங்களில் மகாபிஷேகம்

மும்பை மசாலா :

# மண்டிக்கத் தெரியாத அரசியல்வாதிகள்!

இம்முறை உறியடித் திருநாளின் போது, வழக்கமாக அலறும் 'கோவிந்தா ஆலா ரே' ப்ளேட்டை திருப்பிப் போட வேண்டியிருந்தது! ஆம்! 'கோபிகா ஆலா ரே' என்று, தயிர்ப்பானையை உடைக்க வந்து நின்ற மகளிர் அணியைப் பார்த்துப் பாட வேண்டியதாயிற்று! தரைமட்டத்தில் நாலு புடைவை கட்டிய பெரிசுகள்; அதற்கு மேலே சல்வாரில் நாலு காலேஜ் இளசுகள்; இவர்களையடுத்து இரண்டு ஜீன்ஸ் குமரிகள்; அவர்கள் தோள் மேலே ஒரு ஸ்கூல் பொடிசு; கடைசியாக ஆறு வயதில் டீ ஷர்ட் - ஷார்ட்ஸில் வித்யா காம்தே என்ற சின்னஞ்சிறிசு. விசிலடி வீரர்களையும், தோள்வலி கால் வலிகளையும் பொருட்படுத்தாத ஒன்றரை மாத ப்ராக்டீஸ், உறியடியன்று கைகொடுத்தது. மடுங்கா, மரோல், காட்கோபர், கல்வா, பிவண்டி என்று செமை வசூல்! ஓரளவு டீஸண்டான கும்பல், எட்டக்கூடிய உயரம் இவைதான் இவர்களின் குறிக்கோள். 'கணபட்டியைச் சேர்ந்த இந்த 'கோரக்நாத் மண்டல்' வீராங்கனைகள் உடைத்தது தயிர்ப் பானையை மட்டுமா? ஒரு male bastion ஐ அல்லவா?' என்று காலரைத் தூக்காத பெண்மணிகள் இல்லை!

### 'தயை' இல்லாத 'மான்சன்'

ஜன்மாஷ்டமியும் அதுவுமாக இப்படி ஒரு விபரீதமா? பாண்டுப்பில் உறியடிக்க வந்த ஒரு கும்பல், அங்கு நின்ற 'டெம்போக்கள்' பின்னால் ஒதுங்க, அவர்கள் கோபப்பட, இவர்கள் ஆவேசப்பட, தொடர்ந்த கைகலப்பையும் ரகளையையும் விட்டுத் தள்ளுங்கள். உடைந்தது டெம்போ கண்ணாடிகள் மட்டும்தானா? 'டெம்போ'வே சிதறுமளவுக்கு பரேலில் நடந்த அசம்பாவிதத்தைத



என்ன சொல்ல? 'தயா மான்சன்' என்ற கட்டடத்தில், உறியடியை வேடிக்கை பார்க்கவென எக்கச்சக்கமாகக் கும்பல் கூட, அந்தச் சுமையைத் தாளாமல், பால்கனி சரிந்து விட்டது! மரித்த ஐவரில் ஓர் இளம் அன்னையும் அவரது இரண்டு வயது மகனும் அடக்கம் என்பதுதான் அடக்கமுடியாத சோகம்!

### யாருக்காக இரத்தம் சிந்தினார்?

தேர்தலும் அதுவுமாக இப்படி ஒரு அயனான சந்தர்ப்பத்தை இந்த அரசியல் கட்சிகளெல்லாம் கோட்டை விட்டு விட்டனவே என்று மனது துடியாய்த் துடிக்கிறது! வேறொன்றுமில்லை - செம்பூரில், வின்சென்டியன் ஆசிரமத்திலுள்ள சாப்பலில், லாமினேட் செய்யப்பட்ட இயேசு கிறிஸ்துவின் படம் ஒன்று உள்ளது. இயேசுவின் திருவடிகளிலிருந்து, ஆக-16ம் தேதி இரவு 9 மணியிலிருந்து காலை 3 மணி வரை இரத்தம் வடிந்திருக்கிறது! மாநகர கேபினில் காட்டியிருக்கிறார்கள். சென்ற வருடம், அக்டோபர் 9, 10 நவ-8 தேதிகளில் இதே போல் கையிலிருந்தும், உடலிலிருந்தும் இரத்தம் கசிந்திருக்கிறது. "இதெல்லாம் அற்புதம்; அதிசயம்; கடவுள் செயல்; வேறெதைச் சொல்வது? நம்புபவர்களுக்கு எந்த விளக்கமும் தேவையில்லை; நம்பாதவர்களிடம் எந்த விளக்கமும் எடுபடப் போவதில்லை" என்பதோடு நிறுத்திக் கொண்டு விட்டார் ஃபாதர் ஜோஸ்!

இதுதான் சாக்கென்று, NCPகாரர்கள், "எங்கள் தலைவர் சரத்பவாரை எலிசபெத் டெய்லருக்கு ஒப்பிட்டுப் பேசினால் அடுக்குமா? அதனால்தான் இயேசுவே இரத்தம் சிந்தினாராக்கும்" என்று சொல்லியிருக்கலாமில்லை? அட காங்கிரஸ்காரர்கள்தானாகட்டும், "எங்கள் தலைவி சோனியாவை மோனிகா லெவின்ஸ்கிக்கு ஒப்பிட்ட பாவம்தான் இப்படி இரத்தமாகக் கசிந்து ஓடுகிறது" என்று ஒரு போடு

• ஞானேஷ்வர்

போட்டிருக்கலாமில்லை? இந்த பிஜேபிகாரர்களுக்கு எங்கே போயிற்று புத்தி? "எங்கள் அப்பழுக்கற்ற அட்டல்ஜியை ஒழுக்கக்கேடானவர் என்று அவதூறு பேசியதைச் சகித்துக் கொள்ள

• கோபிகைகள் உடைக்கும் உறி

முடியாமல்தான் பரமபிதாவே இரத்தம் சிந்தினார்" என்று சொல்ல வேண்டியதுதானே...? ஹூம்... எல்லாம் வேஸ்ட்!

## உங்களுக்குமா...?

முதல்வர் ராணேவின் வாழ்க்கை வரலாறை புனேவைச் சார்ந்த நிதின் சுபத்கர் எழுதி, புத்தகமாக வெளியிட்டிருக்கிறார். செம்பூர் தெருக்களில் வளர்ந்து, சிவசேனை 'ஷாகா'க்களில் கல்வி பயின்று, பெஸ்ட் தொழிலாளர் சங்கத் தலைவராக மாறி, லேடீஸ்பார் அண்ட் ரெஸ்டாரண்ட் நடத்தி, கார்ப்பொரேட்டராக உருவாகி, படிப்படியாக முதல்வர் பதவியை எட்டிய கதையையெல்லாம் விலாவாரியாகச் சொல்லியிருக்கிறார். புத்தக வெளியீட்டு விழாவில் பேசிய ராணே "இவ்வளவு சீக்கிரத்தில் என் வாழ்க்கை வரலாறெல்லாம் வெளிவரும் என்று நான் நினைக்கவேயில்லை! நான் என்ன அவ்வளவு பெரியவனா?" என்று ஆச்சர்யப்பட்டிருக்கிறார்; அட... எங்களுக்குத்தான் இந்த நினைப்பிருந்தது என எண்ணியிருந்தோம்.. உங்களுக்குமா?

• அன்று சிந்திய ரத்தம்

## ஞானப் பால்...?

ஏழு வயது த்யானேஷ்வர் ஹன்வந்தே, மஹாராஷ்ட்ராவிலுள்ள ஜல்னா மாவட்டத்திலிருக்கும் 'தல்னி' கிராமத்திலிருப்பவன். ஃபோட்டோ எலெக்ட்ரிக் இஃபக்ட், ஸோலார் ஸிஸ்டம், போக்ரன், கில்லாரி பூகம்பம்... இப்படி எதைப் பற்றியும் அலசுகிறானாம். ஆனால் இவனுக்கு ஐன்ஸ்டீனோ, நியூட்டனோ யாரைப் பற்றியும் தெரியாது. இவனைப் பள்ளிக்கு அனுப்புவதென்பதே இவன் பெற்றோருக்கு பெரும்பாடு! இவனைப் பார்க்க வருபவர்களின் பெயர், முகவரி, வேலை எல்லாவற்றையும் பக்பக்கென்று சொல்கிறானாம்! முற்பிறவியில் ஏதோ சாது – சந்நியாசியாக இருந்து, உலகத்தை உய்விக்கவென ஏதோ புத்தகம் ஒன்றை எழுதியிருக்கிறானாம். அது பார்தூர் தாலுகாவில் இன்னும் இருக்கிறது என்கிறான்! இப்போதைக்கு தாக்கரே வெற்றி பெற என்ன வழி என்பதையும் சொல்லத் தயாராக இருக்கிறானாம். பாவம்... கம்ப்யூட்டர், இன்டர்நெட் எல்லாம் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறானாம்; அமெரிக்கா சென்று ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்று வேறு தாபம்! யாராவது வழிகாட்ட மாட்டார்களா என்று ஏங்குகிறான்! ஹூம்... தாக்கரே வெற்றி பெற இவன் வழி சொன்னால், இவன் அமெரிக்கா செல்ல அவர் வழிகாட்ட மாட்டாரா என்ன?

— ஜெயஸ்ரீ ராஜ்

### உள்ளது உள்ளபடி:

பாராளுமன்றச் செயலகம், பாராளுமன்ற உறுப்பினர்களின் விவரங்கள் அடங்கிய யார்? எவர்? தொகுப்பு நூலை வெளியிடுவது வழக்கம். 1996 லோக் சபாவுக்குரிய யார்? எவர்? நூலில் இடம் பெற்றுள்ள பூலான்தேவி பற்றிய விவரங்கள் வருமாறு:

பெயர்: பூலான் தேவி
கட்சி: சமாஜ்வாதி கட்சி
தந்தை பெயர்: தெய்தின் நிஷாத்
பிறந்த தேதி : 10 ஆகஸ்டு 1963
சொந்த ஊர் : ஷேகாபூர் கிராமம், ஜலான் மாவட்டம்
திருமணம்: 5 ஜூலை 1994, கணவர்: உமத் சிங்
தொழில் : குடும்பத் தலைவி, விவசாயி
நிரந்தர முகவரி: நிலாம் இல்லாம், பத்தி பாக் மைதானம் எதிரில், பதோஹி (உ.பி)
விருப்பமானவை: தாழ்த்தப்பட்ட, ஏழை, பின் தங்கிய மைனாரிடி மக்களின் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்துவது, அவர்கள் கௌரவத்துக்காகப் போராடுவது.
பொழுதுபோக்கு: சமூக சேவை
பிடித்த விளையாட்டு: நீச்சல்
பிற விவரங்கள்: பொய் குற்றச்சாட்டுகளின் பேரில் பல்வேறு சிறைகளிலும் பதின்மூன்று வருடங்கள் கழித்தவர்.
பி.கு: 98 தேர்தலில் போட்டியிட்டுத் தோல்வியடைந்த பூலான்தேவி, மீண்டும் இப்போது போட்டியிடுகிறார்.




### புதுக்கவிதை:

மைக் பிடித்து
பாட்டுப் பாடிவிட்டால்
மக்கள் கூட்டம்
மயங்கி விடுமா?
பாட்டைக் கேட்டு மயங்கி
வோட்டுப் போட்டால்
அப்புறம்
'ஆட்டத்தை'யும் பார்க்கணும்
உஷார்!

— போக்ரோடு புதுக்கவிஞன்

## தேர்தல் மேடை

### களம் கண்ட புத்தகம்

தேர்தல் சீசனுக்கு ஏற்ப சாரான் பதிப்பகக்காரர்கள், ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். தலைப்பு: தேர்தல் களம்: 50 ஆண்டு காலத் தேர்தல் கண்ணோட்டம். விலை ரூ. 25. (121, அண்ணாசாலை, சென்னை –6)

1977ம் ஆண்டு முதல் 1998வரை நடந்த அனைத்து பாராளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்கள் பற்றிய விவரங்களின் தொகுப்புதான் இந்த நூல். தமிழகத்தின் தொகுதி வாரியான வாக்காளர் எண்ணிக்கை, பதிவான வாக்குகள், ஜெயித்தவர், அடுத்து வந்தவர், இரு வேட்பாளர்களும் பெற்ற வாக்கு விவரம் எல்லாம் தரப்பட்டுள்ளன. ஒரு பாராளுமன்றத் தொகுதிக்குரிய விவரங்களைக் கொடுத்த கையோடு, அடுத்ததாக, அந்தத் தொகுதியில் உள்ளடங்கிய சட்டமன்றத் தொகுதிகளுக்கு உரிய தேர்தல் விவரங்களைக் கொடுத்திருக்கிறார்கள்.

உபரியாய், தேர்தல் கூட்டணி விவரங்கள், தொகுதி வாரியாய் ஜாதிகளின் ஆதிக்கம் பற்றிய விவரங்களும் உள்ளன.

ஆங்காங்கே ஒட்டுப் போட்டு, சில தவறுகள் திருத்தப்பட்டுள்ளன. இன்னமும் சில விவரங்களில் தவறு உள்ளதாகத் தெரிகிறது.

சீசனுக்கேற்ற முயற்சி என்ற முறையில் பாராட்டலாம்.

### வாக்காளர் விழிப்புணர்வுக்கு ஜே

போன பாராளுமன்றத் தேர்தலில்,

42% வாக்காளர்கள் தேர்தலில் வாக்களிக்கவே இல்லை. செல்லாத வாக்குகள், கள்ள வோட்டு இவற்றையெல்லாம் குத்து மதிப்பாகக் கணக்கிட்டு சேர்த்துக் கொண்டால், மொத்தத்தில் பாதிப் பேர் வாக்குகள்தான் பதிவாயின என்று கொள்ளலாம். இதில், எந்த ஒரு கட்சிக்கும் பதினைந்து சதவீத வாக்குகளுக்கு மேல் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்க ஒரு விஷயம்.

இதுதான் தகுதியில்லாத, லஞ்ச

# ஜெயாய் தேர்றச்சாட்டுகளோம்!

ஊழல்காரர்களும், கிரிமினல்களும் தேர்தலில் போட்டியிட்டு, மக்கள் பிரதிநிதிகளாக பாராளுமன்றம் செல்ல வழி வகுக்கிறது.

இதைச் சொல்லுகிற விதமாகத்தான் வாக்காளர் விழிப்புணர்வு இயக்கம் என்ற அமைப்பு பத்து நிமிட வீடியோ படம் ஒன்றைத் தயாரித்துள்ளது. தலைப்பு: 'மணி மகுடம், உன் வாக்குரிமை!' எழுதி இயக்கியிருப்பவர் டாகுமெண்டரி பட இயக்குனரான எஸ். கிருஷ்ணசாமி.

வாக்குக் கேட்டு வரும் வேட்பாளரின் தகுதி, சொத்து, பின்னணியைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, கட்சியைப் பார்க்காமல், நேர்மையானவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்கிறது இந்த டாகுமெண்டரி படம்.

## தில்லுமுல்லு:

1952, 57 ஆகிய இரண்டு பொதுத்தேர்தல்களிலும், போட்டியிடும் வேட்பாளர்கள் ஒவ்வொருவருக்கும், அவரவர்க்கு ஒதுக்கப்பட்ட சின்னம் பொறித்த தனித்தனி வோட்டுப் பெட்டிகள் ஒவ்வொரு வாக்குச் சாவடியிலும் வைக்கப்பட்டிருக்கும். ஏறத்தாழ ஒரு ரூபாய் கரன்ஸி அளவில் வாக்குச்சீட்டு இருக்கும். வாக்காளரிடம் கொடுக்கப்பட்ட வாக்குச் சீட்டுடன் மறைவான இடத்தில் வைக்கப்பட்டிருக்கும் வோட்டுப் பெட்டிகளுள், தம் அபிமான வேட்பாளரின் சின்னத்துக்குரிய பெட்டியின் உள்ளே, வாக்குச்சீட்டைப் போட்டு விட்டு வந்து விட வேண்டும். இதுதான் அப்போது கடைப்பிடிக்கப்பட்டு வந்த வாக்களிப்பு முறை.

இந்த முறையில், வாக்காளர் தமது வாக்குச்சீட்டை, வாக்குப் பெட்டிக்குள் போட்டாரா இல்லையா என்று கண்டுபிடிக்க முடியாது. இதை சில வேட்பாளர்கள் தமக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். எப்படி?

தமக்குத் தரப்படுகிற வாக்குச்சீட்டை, பெட்டிக்குள் போடாமல் வெளியே ரகசியமாய் எடுத்து வரச் செய்து, அவர்களுக்குப் பணம் கொடுத்து, அந்த வாக்குச்சீட்டை வாங்கி விடுவார். இப்படி பத்து, இருபது வாக்குகள் சேர்ந்தவுடன் தமக்கு வேண்டிய ஒருவரை வாக்களிக்க உள்ளே அனுப்பி, அவர் தம் வாக்குச்சீட்டை, பெட்டிக்குள் போடுகிறபோதே தாம் காசு கொடுத்து வாங்கிய வோட்டுக்களையும், தமக்குரிய பெட்டிக்குள் சேர்த்து விடுவார்.

1962 தேர்தலின்போது, இந்த பல பெட்டி வாக்களிப்பு முறைக்கு விடை கொடுத்து விட்டு, தற்போது அமலில் உள்ள பல வேட்பாளர்களுக்கும் பொதுவான வாக்குச்சீட்டில் முத்திரையிட்டு, ஒரே பெட்டிக்குள் சேர்க்கிற முறை அறிமுகப்படுத்தப்பட்டது.

## தமாஷ்!

**லோ**க் சக்தி கட்சியில், இந்தத் தேர்தலில் ஒரு பிரமுகருக்கு டிக்கெட் தரவில்லை. அதனால் அவருக்குக் கோபம். தான் கட்சியிலிருந்து ராஜினாமா செய்யப் போவதாக அறிவித்தார்.

ஒரு பத்திரிகையாளர், அவரை சீண்டிப் பார்க்க விரும்பி, "எப்போது உங்கள் ராஜினாமா கடிதத்தைக் கொடுப்பீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்தப் பிரமுகரது பதில், "ராஜினாமா செய்ய முடிவு எடுத்து விட்டேன். ஆனால் எந்தக் கட்சியிலிருந்து ராஜினாமா செய்வது என்றுதான் புரியவில்லை. லோக் சக்தி கட்சி இப்போது இல்லை; ஐக்கிய ஜனதா தளம் இன்னும் அங்கீகரிக்கப்படவில்லை! ஒரே குழப்பம்!" அரசியல்வாதிக்கே இத்தனை குழப்பம் என்றால், மக்களுக்கு எத்தனை குழப்பம் இருக்கும்?



• காயத்ரி

கலபம். வண்டியை நிறுத்துவதில் பிரச்னை இருக்காது" என்றார் ஜெயலட்சுமி.

ஆனால் பொன்மேகலா "குழந்தைகளை அழைத்துச் சென்றால் கூட வெகு பாதுகாப்பானது" என்பதற்காகவும், "தூக்கிப் போடாது. எனவே முதுகெலும்பு பிரச்னை கிடையாது" என்ற



# மாணவிகளை அசத்திய ஐடியாக்கள்!

"எந்த வாகனத்தில் போக விரும்புவீர்கள்?" ராணி மேரி கல்லூரியைச் சேர்ந்த அந்த நான்கு மாணவிகளிடமிருந்தும் ஹெலிகாப்டர், நீர்மூழ்கிக் கப்பல் என்றெல்லாம் வித்தியாசமான விடை வந்துவிடவில்லை இந்தக் கேள்விக்கு. பிராக்டிகலான அணுகுமுறை தெரிந்தது.

"மொபெட், ஸ்கூட்டர் மாதிரி இரண்டு சக்கர வாகனம்தான். சமாளிப்பது



• ஜெயலட்சுமி

• பொன்மேகலா

காரணத்துக்காகவும் காருக்கே தங்கள் ஓட்டு என்றனர்.

"பேருந்தில் பயணம் செய்வதே பெஸ்ட்" என்று ஆச்சரியப்பட வைத்தார் காயத்ரி. "வண்டி தொடர்பான எந்தப் பிரச்னையாய் இருந்தாலும் அது ஓட்டுனர் நடத்துனர் ஆகியவர்களோடு முடிந்துவிடும். நாம் கவலைப்பட வேண்டாம். நமக்குப் பிடிக்கவில்லை என்றால் எப்போது

வேண்டுமானாலும் இறங்கி மாற்றுவழியைத் தேடிக் கொள்ளலாம்" என்று காரணங்களை அடுக்கினார்.

'வாகனங்கள்'தான் க்விஸ்ஸுக்கான தலைப்பு என்று தீர்மானித்தனர் மாணவிகள். கூடவே இவை தொடர்பான விளம்பரங்களைப் பற்றியும் பேச்சு திரும்பியது. கஸுகி சாமுராயின் 'நோ ப்ராப்ளம்' விளம்பரம் சூப்பர் என்று சான்றிதழ் கொடுத்தார் பொன் மேகலா. "ஹீரோ சைக்கிளிலே ஒருத்தன் போவான். ஒரு பெரிய இடைவெளியை அவன் பறந்தபடி தாண்ட வேண்டும். இதயத்தைப் பிடித்துக் கொண்டு நிற்கும் புத்தபிட்சுக்கள், அவன் பத்திரமாகத் தாண்டியதும் பெருமூச்சு விடுவார்கள். அசத்தலான ஐடியா இது" என்றார் மஞ்சுளா. "சன்னி ஸிப் விளம்பரம் கூட ரொம்ப நகைச்சுவையாய் இருக்கும். டிரைவிங் கற்றுக் கொள்வது ரொம்ப கஷ்டம்னு ஒருத்தன் தன் தோழிக்கு டிரைவிங் கற்றுத்தரா. அனாயாசமாக வண்டியை ஓட்டிச் செல்லும்



• மஞ்சுளா

அவள் வேறொருவனுக்கு விட்ட் கொடுத்து பறந்து விடுவாள்" என்று கூறிச் சிரித்தார் ஜெயலட்சுமி.

"ஒரு குழந்தை அழும். பொம்மை அது இதுன்னு காட்டினாலும் சமாதானமாகாது. சர்வோ ஆயில் என்ஜினில் விடப்பட்ட கார் ஒன்று அந்தக் குழந்தையிடம் வந்து மிக வேடிக்கையான ஒலியை எழுப்ப குழந்தை சிரித்து விடும். இந்த விளம்பரம் எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றார் காயத்ரி.

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம்தானே?

கடைசி தேதி : 27.9.99

தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி

## குவிஸ் கூப்பன் – 7

1. ஆகாய விமானம் கண்டுபிடிக்கப்பட்ட வருடமும், பிரபல தொழிலதிபர் ஃபோர்ட் தனது மோட்டார் நிறுவனத்தைத் துவங்கிய வருடமும் ஒன்றே. அது எது?

☐ 1853 ☐ 1903 ☐ 1953

2. சைக்கிளைக் கண்டுபிடித்தவர் யார்?

☐ ஜேம்ஸ்பேட்டர்ஸன் ☐ கிர்க் பாட்ரிக் மாக்மிலன் ☐ ருடால்ஃப் வில்சன்

3. உலகிலேயே விலை உயர்ந்த கார் எது?

☐ மெர்ஸிடிஸ் பென்ஸ்

☐ ரோல்ஸ் ராய்ஸ் ☐ சான்ட்ரோ

4. விடுதலை வீரர் செண்பகராமன் ஆங்கில ஆட்சிக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில் சென்னையை தாக்கப் பயன்படுத்திய கப்பலின் பெயரென்ன?

☐ எமிட்டென் ☐ விக்டோரியா

☐ எலிசபெத்

5. இந்தியாவில் பூமிக்கடியில் புகைவண்டி விடப்பட்ட நகரம் எது?

☐ மும்பை ☐ கல்கத்தா ☐ சண்டிகர்

6. சந்திரனில் முதலில் காலடி வைத்த விண்வெளி வீரரைச் சுமந்து சென்ற வாகனம் எது?

☐ அப்போலோ ☐ அப்போலோ 7

☐ அப்போலோ 11.

7. மோட்டார்கள் நகரம் (City of Motor Cars) என்று குறிப்பிடப்படுவது எது?

☐ லண்டன் ☐ டெட்ராய்ட் ☐ பெர்லின்.

8. அன்லீடட் பெட்ரோல் அறிமுகப்படுத்தப்பட்டதன் காரணமென்ன?

☐ குறைந்த விலை ☐ சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு ☐ இறக்குமதி தேவையில்லை.

பெயர்: ..........................................................

முகவரி: ..........................................................

..........................................................

..........................................................



எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES

102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017. PH: 4344442, 4327764

TUESDAY HOLIDAY (10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)



**P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-**

| நட்சத்திரம் | ராசி | ராசிக்கேற்றகல் | கல்லின் எடை | வெள்ளி மோதிரம் விலை | இன்சூர் தபால் செலவு |
|---|---|---|---|---|---|
| அசுவினி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய | மேஷம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| கார்த்திகை 2-ம் பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய | ரிஷபம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| மிருகசீரிசம் 3-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் முடிய | மிதுனம் | மரகதபச்சை | 20 CENT | 400/- | 50/- |
| புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம் முடிய | கடகம் | முத்து | 2 CARAT | 400/- | 50/- |
| மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய | சிம்மம் | மாணிக்கம் | 20 CENT | 400/- | 50/- |
| உத்திரம் 2ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய | கன்னி | மரகத பச்சை | 20 CENT | 400/- | 50/- |
| சித்திரை 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய | துலாம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| விசாகம் 4ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய | விருச்சிகம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய | தனுசு | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| உத்திராடம் 2ம் பாதம், திருவோணம் அவிட்டம் 2-ம் பாதம் முடிய | மகரம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய | கும்பம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| பூரட்டாதி 4ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய | மீனம் | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| தனுசு, மீன ராசிக்காரர்கள் கனக புஷ்பராக மோதிரமும் அணியலாம் | | | 25 CENT | 500/- | 60/- |
| ராகு, கோமேதகம் | | | 50 CENT | 400/- | 50/- |
| கேது, வைடூரியம் | | | 20 CENT | 400/- | 50/- |
| அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் | | | 2 CARAT | 400/- | 50/- |

*** நவரத்தினம் மோதிரம் அணிந்தால் மிகவும் நல்லது. ***

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் மோதிரம் ரூ. 400/- கார்னெட் மோதிரம் அணிந்தால் செல்வ வளம் பெருகும். வியாபாரம், படிப்பு, ஞாபக சக்தி அதிகரிக்கும்.

குறிப்பு : புஷ்பராகம், வைரம், நவரத்தினம், ஆகிய மோதிரங்கள் வெள்ளியிலும், தங்கத்திலும் அணியலாம்.
மீதி அனைத்து ராசிக்கல் மோதிரங்கள் வெள்ளியில் அணிய வேண்டும். வெள்ளியில் அணிந்தால் பலன் அதிகம். மேற்படி ராசிக்கல் மோதிரம் நம்பிக்கையுடன் அணிந்து முயற்சி செய்தால், கல்வி, தொழில், வேலை வாய்ப்பு, வியாபாரம், அனைத்திலும் 100 சதவீத வெற்றி கிடைக்கும்.

* எங்களிடம் நியூமராலஜி படியும் கல் மோதிரங்கள் கிடைக்கும் * திருக்கணித பஞ்சாங்கப்படி கம்ப்யூட்டர் ஜாதகம் ரூ. 50/-

**குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.**

## மறுபிறவி–

**சு. சமுத்திரம்**

# என் துறை அமைச்சரை எதிர்த்தே போராடினேன்!

**1993**–ஆம் ஆண்டு நான் சென்னை வானொலி நிலைய மூத்த செய்தியாளராகப் பணியாற்றி வந்தேன். அப்போது 'செய்தி ஆசிரியராக' வேறொருவர் இருந்தார். இரண்டு பதவிகளும் இணையானவை. இன்னும் சொல்லப் போனால், ஏட்டளவில் அந்தச் செய்திப் பிரிவுக்கு நான்தான் பொறுப்பு. சனிக்கிழமைதோறும் நாட்டு நடப்பைப் பற்றி 'சுழல் விளக்கு' என்ற தலைப்பில் கருத்துத் தெரிவிப்போம். இது தலையங்கம் மாதிரி. இதற்குச் செய்தி ஆசிரியரே பொறுப்பு.

ஹர்ஷத்மேத்தா, பிரதமருக்கு ஒரு கோடி ரூபாய் கொடுத்ததாகத் தெரிவிக்கப்பட்ட விவகாரத்தில், அப்போதைய பிரதமர் நரசிம்மராவை கடுமையாக விமர்சித்து 'சுழல் விளக்கை'ச் சுற்றவிட்டார் செய்தி ஆசிரியர். இதற்கு முன்பும் இப்படியான கருத்துக்களைத்தான் திணிப்பார். 'இது செய்தி ஆசிரியரின் உரிமை' என்று சொல்வார், நான் தட்டிக் கேட்கும்பொழுது.

அவரோடு சேர்ந்து நானும் 'கூண்டோடு கைலாசம்' போய்விடக்கூடாது என்பதற்காக, டெல்லியில் உள்ள மேலதிகாரிகளுக்கு புகார்க் கடிதம் ஒன்று எழுதினேன். அந்தக் கட்டுரையையும் மொழி பெயர்த்து இணைத்திருந்தேன். நான் அரசுப் பணியில், பல்வேறு மேலதிகாரிகளுக்கு எதிராக எழுத்து மூலமாகப் போராடியவன். அதனாலேயே இந்த விவகாரத்தில் எல்லோரும் ஒன்றுசேர்ந்து, அப்போதைய செய்தி ஒலிபரப்புத் துறை





## முல்லா! முல்லா!!

முல்லா கடைக்குப் போய் ''இந்த ஃப்ரிஜ் என்ன விலை?'' என்றார். அதற்குக் கடைக்காரர், உன்னை மாதிரி முட்டாள்களுக்கு நாங்க இதை விற்க மாட்டோம். போய்யா!'' என்று கூறிவிட்டார்.

எப்படியாவது விலையைத் தெரிந்து கொண்டுவிடும் ஆர்வத்துடன் முல்லா அடுத்த நாள் பர்தா போட்டுக் கொண்டு போய், ''இந்த ஃப்ரிஜ் என்ன விலை?'' என்று கேட்டார்.

''நீ பர்தா போட்டுக்கிட்டு வந்தாலும் எனக்குத் தெரியாமல் போகாது. விலை சொல்ல மாட்டேன் போ!'' என்றார் கடைக்காரர்.

முல்லா தன் பர்தாவைக் கழற்றினார். ''நீ எனக்கு விலை சொல்லா விட்டாலும் பரவாயில்லை. வந்தது நான்தான் என்று எப்படிக் கண்டு பிடித்தாய்! அதைமட்டும் சொல்லு.''

கடைக்காரர் சொன்னார்: ''உன்னைத் தவிர வேறு எந்த முட்டாள் தினம் தவறாமல் வாஷிங் மெஷினைக் காட்டி ஃபிரிஜ்னு சொல்லுவான்!''

— மஞ்சுதேவன்

## தெரியுமா உங்களுக்கு?

விநாயகர் சதுர்த்தியன்று களிமண்ணால் பிள்ளையார் உருவம் செய்து வழிபடுகின்ற வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கம். பிறந்த மண்ணை, தெய்வம் போல் கொண்டாட வேண்டும் என்ற தேசபக்தி தத்துவம் இந்த வழிபாட்டில் உட் பொதிந்துள்ளது.

ஆதாரம்: 'ஹிந்து மித்ரன்'
தகவல்: வானவில் மூர்த்தி

இணை அமைச்சர் சிங்க்டியோவிடம், நான்தான் பிரதமரை இழிவுபடுத்திய அதிகாரி என்று விவகாரத்தை எனக்கெதிராகத் திருப்பி விட்டார்கள். இதன் விளைவாக, ஒருநாள் திடீரென்று எனக்கு மாற்றல் உத்தரவு வந்தது.

நியாயத்தைப் புறந்தள்ளி, பழிவாங்கிய அதிகாரிகளுக்கு மத்தியில் நான் பணியாற்ற வேண்டிய கட்டாயம். எல்லாவற்றையும் விட, அநியாயத்திற்குத் தலைவணங்கி, நான் அங்கு செல்ல விரும்பவில்லை. சென்னையில் உள்ள மத்திய நடுவர் மன்றத்தில் வழக்குத் தொடுத்தேன். வழக்கறிஞர் ச. செந்தில்நாதன் எனக்காக வாதாடினார். ஆனாலும், 'மாற்றல் உத்தரவில் நீதிமன்றம் தலையிடாது' என்று என் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

நான் மாற்றப்பட்ட வேலையில் சேருவதில்லை என்று திட்டவட்டமாக இருந்தேன். எனக்கு நடந்தது அநியாயம் என்பதை நிரூபிப்பதிலும் உறுதியாக இருந்தேன். என்றாலும், குடும்பச் சூழ்நிலை விபரீதமாக இருந்தது. என் உத்தியோகம் ஒன்றுதான் குடும்பத்தின் மூலதனம். கல்யாண வயதில் மகள், கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் இரண்டு மகன்கள். மாதச் சம்பளமே குடும்பத்திற்குப் போதாது. இந்தப் பின்னணியில் எப்படிப் போராடுவது? ஆனாலும் நான் துணிந்து விட்டேன்.

'தோட்டக் கலை' கிருஷ்ணமூர்த்தி உள்ளிட்ட பல தோழர்களிடம் கடன் பெற்றுக் கொண்டு, சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்வதற்காக, டெல்லிக்குச் சென்றேன். மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழகச் செயலாளர் ஏ. நல்லசிவன் அவர்களது நாடாளுமன்றக் குடியிருப்பில் தங்கியதால், வாடகைப் பிரச்னை எழவில்லை. என்றாலும், சுப்ரீம் கோர்ட்டில் இந்த வழக்கை அனுமதிக்கவே மாட்டார்கள் என்றும் தெரியவந்தது. அதனால் என்னைப் பற்றி நன்றாகத் தெரிந்து வைத்திருந்த தலைவர்களை அணுகி நியாயம் கேட்டேன். ஜி.கே. மூப்பனார், அப்போதைய அமைச்சர் கே. வி. தங்கபாலு, மக்களவை உறுப்பினர் என். கே. டி. ராமச்சந்திரன் ஆகியோர் அமைச்சர் சிங்க்டியோவிடம் எனக்காக வாதாடினார்கள். 'நந்தன்' பத்திரிகை ஆசிரியர் நா. அருணாசலத்தின் அறிமுகத்தால் பழக்கமான சுப்ரமணியசுவாமியும் எனக்காகச் சிங்க்டியோவிடம் வாதாடினார். இதற்குப் பெரிதும் உதவியவர் திருமதி. சந்திரலேகா.

சிங்க்டியோ ஒரிசா குறுநில மன்னர் பரம்பரையைச் சேர்ந்தவர். மாற்றல் உத்தரவு போட்டது போட்டதுதான் என்று சொல்லி விட்டாராம். இந்தச் சமயத்தில்தான் என்னுள் ஒரு போராளி எழுந்தான்.

எந்தப் பிரதமர் இழிவுசெய்யப்பட்டதற்காகப் போராடினேனோ அவரது அலுவலகம் முன்பு சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பது என்று தீர்மானித்தேன். இதற்காக நோட்டீஸ் அச்சடித்து பரிச்சயமான ஒருசில எம்.பிக்களுக்கும் கொடுத்து விட்டேன்.






அமைச்சகத்திற்கு என் உண்ணாவிரதம் பற்றிய தகவலும் போய் விட்டது. உண்ணாவிரதத்திற்கு முயற்சி செய்தால் கைது செய்யப்படுவேன். வேலை போய்விடும். ஏற்கெனவே, மூன்று மாத காலமாகச் சம்பளம் இல்லாமல் குடும்பம் அல்லல்பட்டுக் கொண்டிருந்தது.

நாளை மறுநாள் உண்ணாவிரதம் இருக்கத் திட்டம். அதற்குள் ஒரு சிறிய சிந்தனை. மத்திய அமைச்சரான ரங்கராஜன் குமாரமங்கலம் பழக்கமில்லாதவர்தான் என்றாலும் அவரிடம் இதுகுறித்துத் தொலைபேசியில் பேசினேன். அவர் உடனடியாக என்னை வரச் சொன்னார். அமைச்சர் சிங்கியோவை டெலிபோனில் 'விடு விடு'வென விட்டார். நான் உண்ணாவிரதம் இருக்கப் போவதையும் சூசகமாகக் குறிப்பிட்டார். பிறகு என்னைத் தகவல் ஒளிபரப்பு அமைச்சகத்தின் மூத்த அதிகாரி ஒருவரை பார்க்கச் சொன்னார். பார்த்தேன். எந்தச் சென்னையிலிருந்து இழிவாக்கப்பட்டு, மாற்றப்பட்டேனோ, அதே சென்னைக்கு மூன்று மாத காலத்திற்குள் 'விளம்பரத் துறையின் இணை இயக்கு[illegible] பதவி உயர்வோடு திரும்பினேன்.

இப்போது அந்த 'சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பது' என்று நான் எடுத்த முடிவை நினைத்துப் பார்க்கும்போது பிரதமர் அலுவலகத்தை நெருங்கு முன்பே உதைபட்டிருப்பேன். துப்பாக்கி முனையில் அடி விழுந்திருக்கும். கைது செய்யப்பட்டு, திஹார் போன்ற ஏதோ ஒரு சிறையில் வைக்கப்பட்டிருப்பேன். என் வேலை போயிருக்கும். மகளின் திருமணம் தடைபட்டிருக்கும். பையன்களின் படிப்பு இடையிலேயே நின்றிருக்கும். எல்லோருக்கும் [illegible] உறவினர்களிடையே பொல்லா[illegible] சித்திரிக்கப்பட்டிருப்பேன். நடுத்தரமான வசதிகளுடன் வாழும் மனைவியும், பிள்ளைகளும் நடுத்தெருவிற்கு வந்திருப்பார்கள். ஆனாலும், அதிர்ஷ்டவசமாக இந்த விளைவுகளைச் சந்திக்காமலேயே என்னால் வெற்றி பெற முடிந்தது. இது எனக்கு மட்டுமல்ல, என் குடும்பத்திற்கும் மறுபிறவிதான்.

சந்திப்பு : கே. பாலசுப்ரமணியன்

படம் : ஸ்ரீஹரி

# இதயங்கள் கொல்வதில்லை..

2

**சென்ற வாரம்...**
**மும்பையில் அடிக்கடி கொலை நடக்கிறது. அதுவும் தனியாக இருக்கும் வயதானவர்களே கொலையாகிறார்கள். ஏன்? சிறப்பு அந்தஸ்திலுள்ள சி.பி.ஐ அதிகாரி மணி துப்புத் துலக்க வருகிறார்.**

ரமணனுக்குப் பயமாக இருந்தது. அப்பா பிழைக்க வேண்டும். அப்பா போய் விட்டால், அம்மாவை, அக்காவை, தங்கையை என்று வாழ்க்கையை அவனால் தனியாக சமாளிக்க முடியாது.

அவனுக்கு மாத்திரம் ஏன் இப்படி ஒரு பித்துக்குளி அம்மா வாய்த்திருக்க வேண்டும்? கேட்டால், கடைசி தங்கை பிரபாவின் பிரசவம் வரை அப்பாவும் சரி, மற்றவர்களும் சரி, தவறாமல் சான்றிதழ் வழங்குகிறார்கள்.

"டெலிவரிம்போது... ஏதோ ப்ராப்ளம்டா, ரமணா!"

இந்த உலகில் எவ்வளவோ அம்மாக்களுக்கு டெலிவரி ஆகவில்லையா..? ஆனால் அவன் அம்மாவுக்குத்தான் இந்தப் பிரச்னை எல்லாம் வர வேண்டுமா?

அவனால் அவன் அம்மாவை, இந்தக் குடும்பத்தை, மும்பைக்குக் கூட்டிக் கொண்டு போக முடியாது. யார் காட்டிய தயவிலோ, அவனே இன்னமும் 'ஒரு பேயிங் கெஸ்ட்டாகத்தான்' ஏதோ ஒரு குடும்பத்துடன் ஒரு சிங்கிள் பெட்ரூம் ஃப்ளாட்டில், ஒட்டிக் கொண்டு இருக்கின்றான். பெரும்பாலான நேரங்களில், பால்கனிதான் அவன் குடியிருப்பு. காலை எட்டு மணிக்குப் புறப்பட்டால், அவன் மீண்டும் பால்கனியைப் பார்க்க எட்டு மணி, ஒன்பது மணி ஆகி விடும். வாரத்தில் ஒரு நாளோ, இரண்டு நாளோ, தென்னக சாப்பாட்டிற்காக கன்சர்னில்! சாப்பிடுவதோடு சரி, மற்றபடி மின் ரயில் பயணம், ஓட்டம், பஸ் பிடித்தல். எவ்வளவு சம்பாதித்தாலும் பத்தாத, பம்பாய்!

அவன் அப்பாவுக்கு, இங்கே என்ன வேலை என்று அவன் யாரிடமும் சொன்னதில்லை. சொல்லிக் கொள்கிறாற்போல் ஒரு வேலையிலோ, பதவியிலோ, அப்பா என்றைக்குமே இருந்ததில்லை. ஒரு ஆறு மாதம் ஏதாவது சைவ விடுதியில், சரக்கு மாஸ்டராக இருப்பார். பிறகு பார்த்தால் ஒரு ஆறு மாதம் கல்யாண வீடுகளில் இலை வைத்து, தண்ணீர் ஊற்றிக் கொண்டிருப்பார். திடீரென்று சில காலம் ஏதாவது ஒரு கோயிலில் பிரசாத லட்டு பிடித்துக் கொண்டிருப்பார். இரண்டே வேட்டிகள், இரு துண்டுகளுடன் காலத்தைத் தள்ளும் அப்பா. ஆனால் நல்ல வெள்ளையாக உடுத்துவார். எந்த வேலையிலும் அவரால் நிரந்தரமாக இருக்க முடிந்ததேயில்லை. குழந்தைகளுடன் சேர்த்து, பித்துக்குளியான ஒரு மனைவியையும் கவனித்துக் கொள்ள வேண்டிய ஒரு கட்டாயத்தை வாழ்க்கை அவர் மீது திணித்ததும் இதற்கு ஒரு காரணமாக இருக்குமா?

அப்பா, இவ்வளவு காலம், இவ்வளவு பேரை எப்படிக் காப்பாற்றினார்? அதுவே ரமணனுக்குப் புரியாத புதிர். பெண் குழந்தைகளுக்குச் சமயத்தில் தீபாவளிக்குத் தாவணிகூட வாங்க முடியாத காலங்கள் உண்டு. பித்துக்குளி அம்மாவின் வைத்தியச் செலவு, மருந்துச்செலவு, ஆட்டோ செலவு... இதைத் தவிர அவன் குடும்பம் எதைத்தான்

கண்டது?

பம்பாய், மும்பையான சில வருடங்களுக்கு முன்னரே, ரமணனுக்கு அங்கு வேலை கிடைத்தது. அக்காவுக்குக் கல்யாணம் என்று நிச்சயம் ஆன தருணம். இது என்ன சோதனை? அவன் மும்பையிலிருந்து ஓடி வர வேண்டி இருந்தது.

அப்பா இன்டென்சிவ் கேர் யூனிட்டில். கொள்ள வழங்கப்படும் அக்கௌன்ட்ஸ் ஸ்டேட்மென்ட்.

கொஞ்சம் கசங்கலாக இருந்தது. அதையே வெறித்துப் பார்க்கும் மணியின் மூளையில் ஏதோ ஒரு பொறி!

போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் தயாராகிக் கொண்டிருந்த சமயம் பாலக்



ஏதோ தற்செயலாக மேஜையின் மேலிருந்த அந்தக் கல்கி இதழ்களைப் புரட்டிய மணிக்கு, அந்தக் கம்ப்யூட்டர் காகிதம் முதலில் ஒரு இலேசான நெருடலாகத்தான் இருந்தது. அது ஒரு பாங்க் பாஸ் ஷீட். மாதாந்திர ஸ்டேட்மென்ட். அதாவது பாங்க், பாஸ் புத்தகம் போல. வங்கிகள் எல்லாம் கணிப்பொறிமயமாக்கப்பட்ட பின்னர், மாதா மாதம் வாடிக்கையாளர்களுக்கு அவர்களின் வங்கிக் கணக்கு வழக்குகளை சரிபார்த்துக் காட்டுப் பாட்டியின் சார்ட்டட் அக்கௌண்டன்ட் பிள்ளை, துபாயிலிருந்து வந்து விட்டான். மல்ஹோத்ராவிடம் விசிட்டிங் கார்டு கொடுத்து வருத்தமாக நின்றான். மல்ஹோத்ரா, மணியை அறிமுகம் செய்து வைக்க, கிட்டத்தட்ட அழும் நிலைக்கு வந்து விட்டான். பெயர் அனந்தகிருஷ்ணன்.

"அம்மா ரொம்ப ஆச்சாரம் சார். பாலக்காட்டுலேர்ந்து, பம்பாய்க்குக் கூட்டிக்கிட்டு வரவே ரொம்ப கஷ்டப்பட்டேன். துபாய்க்கு, நான் போனப்புறம் ஒரே

ஈஸ்வர்

ஒரு தடவை வந்தா. இனிமே வர மாட்டேன்னுட்டா. கடல் கடந்ததே பிடிக்கலை. இங்கே மாதுங்கா ரொம்ப பிடிச்சுப் போச்சு. சங்கரமடம், மகாலட்சுமி கோயில்னு ஏனோ ஒரு ஒட்டுதல். தனியாவே இருந்தா. எவ்வளவு பணம் அனுப்பி என்ன பிரயோஜனம்? கூட நான் இருந்தா, இது நடந்திருக்குமா? யார் சார் அந்த ராஸ்கல்?''

''தேடிக்கிட்டிருக்கோம். உங்க ஒத்துழைப்பு தேவை''

''என்ன செய்யணும் சொல்லுங்க!''

''ஒரு கண்டோலன்ஸ் ரெஜிஸ்தர் போட்டிருக்கோம். துக்கம் விசாரிக்க வர்றவங்க கிட்ட ஒரு கையெழுத்து வாங்கிக்கணும்.''

''ஏன் சார், கொலை செஞ்சவன், துக்கம் விசாரிக்கவும் வருவான்னு எதிர்பார்க்கறீங்களா? வாட் இஸ் திஸ் நான்சென்ஸ்.''

''மிஸ்டர் அனந்த், ப்ளீஸ்... இது ஒரு நெருடலான கேசா போய்க்கிட்டிருக்கு. எங்களுக்கு ஏதாவது ஒரு சின்ன நுனி கிடைக்கணும். கிடைக்கும். யூ ஆர் வெல் எஜுகேட்டட். எங்க நிலைமையைப் புரிஞ்சிக்குங்க. உங்க ஒத்துழைப்பு முழுக்க முழுக்கத் தேவை.''

''ஓகே. கோ அஹெட்... யாரும் இன்சல்டிங்கா ஃபீல் பண்ணாம பார்த்துக்குங்க. மை மதர் வாஸ் எ ஜெம் ஆப் எ வுமன். அவளைக் கடைசியாப் பார்க்க வர்றவங்க மனசு நோகறா மாதிரி எதுவும் ஆயிடக் கூடாது.''

''நிச்சயமா ஆகாது.''

---

**''ஒரு வழியா எங்க கூட்டணியில் இருந்த சிக்கலை பேசி முடிச்சிட்டோம்...''**

**''அதுக்கு ஏன் தலைவரே இவ்வளவு வருத்தப் படறீங்க?''**

**''அதுக்குள்ள எலெக்ஷன் முடிஞ்சு போச்சே!''**

**— பொள்ளாச்சி கே. சித்ரா**



''அப்படின்னா சரி.''

''அது மாத்திரம் இல்லே மிஸ்டர் அனந்து. எல்லாம் முடிஞ்சி ஊருக்குப் போறதுக்கு முன்னாடி, நீங்க கொஞ்சம் எங்களை வந்து பார்க்கணும். கூடவே உங்க அம்மாவுக்கு எதிரிங்கன்னு யாராவது இருக்காங்களான்னு செக் பண்ணுங்க.''

''எழுபது வயசுல எதிரியா?'' – அனந்த், சிரித்தான். யாரோ வர நகர்ந்தான்.

ஐஜி. அறை. இன்ஸ்பெக்டர் ஜெனரல் ராபர்ட் ஃபெடரியோ முகத்தில் இலேசான கவலைக்குறிகள். எதிரே டி.எஸ்.பி. மல்ஹோத்ரா, இந்தத் திருநெல்வேலி மணி.

ஒரு திருநெல்வேலிக்காரன், தில்லி வழியாக மும்பையில் நுழைந்து இந்த மகாராஷ்டிர போலீசுக்கு சில கட்டளைகளை, வேண்டுகோள் போல் விடுவித்துக் கொண்டிருந்தது ஆரம்ப முதலே ஐ.ஜி.க்குப் பிடிக்கவில்லை. அவருக்கு ஓய்வுபெற, இன்னும் ஆறு மாதங்களே இருந்தன. இந்த சமயம் இப்படி ஒரு சவால். ஆனாலும் இவனுடன் ஒத்துத்தான் போக வேண்டும். கூட்டணிகள் காலத்தின் கட்டாயம்.

''என்ன மிஸ்டர் மணி. ஹோம் மினிஸ்டர் இன்னும் ஒரு வாரந்தான் டைம்னு ஸ்ட்ரிக்டா சொல்லிட்டாரு. கண்டுபிடிக்க முடியலைன்னா, ரெயில்வே ப்ரொடக்ஷன் ஃபோர்சுக்கோ, போலீஸ் ட்ரெயினிங் சென்டர் இன் ஜார்ஜாவோ போயிடுங்க சார்னு, நாசூக்கா மெரட்டிக்கிட்டு இருக்காரு.''

''எனக்கு இப்பத்தான் சார், சில முக்கியமான க்ளூஸ் கெடச்சிருக்கு.''

''விடிஞ்சது போங்க. நீங்க டார்கெட்டை ரீச் பண்ணிட்டீங்கன்னு இல்லே நான் நினைச்சுக்கிட்டு இருக்கேன். இதுக்கு எங்க டிபார்ட்மெண்டே போதுமே. நீங்க போற வேகத்தைப் பார்த்தா, கொலையாளி கும்பல் வெளிநாட்டுக்குப் பறந்ததுக்கு அப்புறமாத்தான் கண்டே பிடிப்பீங்க போலிருக்கு.''

''அது மாதிரியே ஆனாலும், அவங்க எங்கேயும் பறந்து போகாம தடுக்கறது, ஒரு மாநிலத்து ஐ.ஜி. நெனைச்சா, முடியாத காரியமா சார்?''

பந்து வேகத்தில் தன் முகத்திலேயே அடிப்பதை ஐ.ஜி.யால் உணர முடிந்தது. இவன் இவர் கீழ் இருக்கும் டிஎஸ்.பியோ, கமிஷனரோ அல்ல.

''சரி... மிஸ்டர் மணி. ஆக வேண்டியதைக் கவனிப்போம். அடுத்தது நாம என்ன

செய்யப் போறோம்?"

"சார்... முதல்ல கொலை செய்யப்பட்ட நபர்களோட பாங்க் பாலன்ஸை நாம உடனடியா கண்காணிக்கணும்."

"எதற்காக?"

"மர்டர் ஃபார் கெய்ன், ஒரு பாசிபிலிடின்னு வச்சுப்போம். ஆனா இதுவரை யார் வீட்லயும் எதுவும் காணாம போனதா கம்ப்ளெயின்ட் இல்லே!"

"கரெக்ட்."

"கொலையான எல்லாருமே வயசானவங்க. சாதாரணமானவங்க. அந்த பஞ்சாப் சிங் ஒருத்தர்தான், கொஞ்சம் காங்கிரஸ்தான் அபிமானி. மத்தவங்க அரசியல் பக்கமே வராதவங்க."

"அதனால..."

"சொல்றேன். ஜாலியா ஒரு அஞ்சு கொலையை நடத்தற அளவுக்கு இன்னமும் மும்பை கூட முன்னேறிடலை."

"இண்டலா?"

"நோ... நோ... மோட்டிவேஷனைத் தேடறேன். கொலை செஞ்சவங்களுக்கு, இந்த தாத்தாக்களும், பாட்டிகளும் நிச்சயமா எதிரிகளா இருக்க முடியாது. ஆனா எல்லாமே திட்டமிடப்பட்ட கொலைகளாவும் இருக்கு. நோ ட்ரேஸ் ஆஃப் எனி எவிடன்ஸ். வேற என்ன நோக்கமா இருக்கலாம்."

"சொல்லுங்க..."

"பாஸிபிலிடீஸ் யோசிச்சாச்சு. மொதல்ல மனசுக்கு வர்றது லேண்ட்கிராபிங். நமக்குத் தெரிஞ்சவரைக்கும் பம்பாய்ல இன்னிக்குத் தேதில பல கலவரங்களுக்கும் காரணம், நிலம். இடப்பற்றாக்குறை. ரியல் எஸ்டேட் காரங்களுக்கும், மும்பாய் தாதாக்களுக்கும் இந்த விஷயத்துல இருக்குற தொடர்பை நான் உங்களுக்குச் சொல்லத் தேவையே இல்லை."

"ஓகே... புரியுது. கோ அஹெட்..."

"ஆனா இந்தக் கேஸ்ல இந்த மேட்டர், கொலையாளிங்களுக்கு எந்த அளவுக்கு சாதகம்னு புரியலை. கிட்டத்தட்ட, கொலையான எல்லாருமே டெனண்ட்டுங்க மாதிரிதான். பொண்ணு, புள்ளைங்களோட மும்பை ஃப்ளாட்டுங்களை காப்பாத்தவேதான் இங்கே வந்து வாழறவங்க. சொத்து உரிமை இவங்ககிட்ட இல்லே. ஸோ இந்தச் சொத்துக்களை மாத்தறதும் அவ்வளவு சுலபம் இல்லே. இது, கொலை செஞ்சவங்களுக்கும் தெரியாம இருக்காது."

"அப்படீன்னா...?"



"என் சின்னப் பையனுக்கு இந்த சின்ன வயதிலேயே, அரசியல்வாதிகளைப் பற்றி நல்லா தெரிஞ்சுருக்கு..."

"ஏன்? என்ன சொல்றான்?"

"அரசியல் புள்ளிங்க, வோட்டுக் கேட்க வர்றாங்கன்னு, தெருக்களை சுத்தப்படுத்தி, பிளீச்சிங் பவுடர் போடறதைப் பார்த்து, 'இதெல்லாம் அவங்க வந்துட்டுப் போனப் புறம்தானே செய்யணும்னு' கேட்கறான்."

— மதுரை என். உஷாதேவி

"அடுத்த பாசிபிலிடிக்கு [illegible] கொலையான, வயசானவங்க [illegible] தனியா இருக்கறவங்க. [illegible] அம்மாக்களுக்கு வெளிநாட்[illegible] புள்ளைங்களும், பொண்ணு[illegible] பப்போ பணம் அனுப்[illegible] இருப்பாங்க. இருக்காங்க. [illegible] வளத்தவங்க மேல இருக்கற பாச[illegible] உணர்ச்சி. ஐயோ, இவங்களைத் [illegible] விட்டு இருக்கோமேன்னு. இந்த [illegible] உரிய ஒரு சென்சிடிவ் [illegible] இந்தியாவுக்கு வர்ற வெளிநா[illegible] இப்போ சர்வ சாதாரணம். [illegible] கோடிக்கணக்குல அப்படி [illegible] ஒருவேளை, அதுவே அவங்க [illegible] இருந்தா?"

ஐ.ஜி.யும், டி.எஸ்.பி. [illegible] அடுத்தடுத்து மணி சொல்லை[illegible] கவலையுடன் கேட்டார்கள்.

அதிரடிக்குத் தயாரானது [illegible]

அறையில் நல்ல [illegible] மாதுங்கா வங்கி மானேஜரின் [illegible] இங்கிருந்து பார்த்தால் வெளி[illegible] தெரியும். இலேசான கறுப் [illegible] ணாடி வெளிஹாலையும் இந்த [illegible] யும் பிரித்து நின்றது. மேனேஜரி[illegible] சைனில் மஞ்சள் நிறப் பின்[illegible] போல் மின்னும் அழகி[illegible] பி.டி.மேனன், சீனியர் மானேஜர் [illegible]

# அன்றும் இன்றும்!

சென்ற 30, 40 வருடங்களில் சமுதாயத்தின் சீரழிவிற்கு உதாரணமாகச் சில சம்பவங்கள்:

''வருடம் 1962. அப்போது சென்னையில் நான் வங்கி அதிகாரியாகப் பணியாற்றிய போது நேர்த்தியாக உடையணிந்த ஒரு கனவான் என் அறைக்கு வந்து தன்னை புது டில்லியில் பணிபுரியும் ஓர் உயர் அதிகாரி என்று அறிமுகப்படுத்தியபின், தமது செக் ஒன்றிற்கு பணம் மாற்றிக் கொடுக்கக் கேட்டார். புதுடில்லி ரிஸர்வ் பாங்கினால் அளிக்கப்பட்ட செக் அது. அவரது அடையாள அட்டையைக் கேட்டபோது ''தாராளமாக'' என்றபடி தமது, பர்ஸிலிருந்து, புத்தம் புதிய ஒரு ரூபாய் நோட்டை எடுத்து, அதில் காணப்பட்ட கையெழுத்தைக் காட்டி ''இது போதுமா?'' என்று கேட்டார். அப்போது தான் எனக்கெதிரே அமர்ந்திருந்தவர் அன்



றைய மத்திய அரசின் நிதித்துறைச் செயலாளர் திரு. சி. பூதலிங்கம் என்பதை உணர்ந்தேன். அடக்கம் என்றால் என்ன என்பதை எனக்கு உணர்த்தினார்.

''1992-ல் பீஹார் தலைநகர் பாட்னாவில் நான் வங்கியின் சீஃப் ஜெனரல் மானேஜராகப் பணியாற்றியபோது, வழக்கம் போல் மாநில அளவிலான மாநில உயரதிகாரிகளுடன் கலந்துரையாடலும் தேனீர் விருந்தும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. என்னிடம் ஓர் உயர் அதிகாரி கேட்டார்: ''உங்கள் வங்கியின் உயர் பதவிகளுக்கு ஏலம் விடுவது போன்ற முறை உள்ளதா? அப்படியானால் நீங்கள் தற்சமயம் வகிக்கும் CGM பதவியின் விலை என்ன?''

''அம்மாதிரி எந்த முறைகளும் எங்கள் வங்கியில் இல்லை'' என்று நான் சொன்னதை அவர் நம்ப மறுத்தார் என்பது அவர் முகத்திலேயே நன்கு வெளிப்பட்டது!''

'ஹிண்டு'வில் – ஆர். நரசிம்மன்
தகவல் : வடவள்ளி
ஆர். ராமசுப்ரமணியன்

பறை சாற்றியது.

எதிரே மணியும், டி.எஸ்.பி. மல்ஹோத்ராவும். இவர்களுக்குப் பின்னால் ஒரு இன்ஸ்பெக்டர் தள்ளி பவ்யமாக நின்று கொண்டிருந்தார். மணி காட்டிய அடையாள அட்டையும், மல்ஹோத்ராவின் சீருடையும், வேறு பேச்சுக்கே இடம் கொடுக்கவில்லை.

''மிஸ்டர் மேனன்''... தன் பிசிறில்லாத ஆங்கிலத்தில் ஆரம்பித்தான் மல்ஹோத்ரா. கூடவே இன்ஸ்பெக்டர் வைத்திருக்கும் இரு சிறிய ரெஜிஸ்தர்களை வாங்கி, குறிப்பிட்ட சில பக்கங்களைப் பிரித்து, அவர் முன் வைத்தான். இரண்டு தனி ரெஜிஸ்தர்களிலும், சிவப்பு மையினால் வட்டமாக்கப்பட்டுள்ள இடத்தில் பிடி. மேனனின் பெயர், விலாசம், கையொப்பம் காணப்பட்டது.

''இது உங்க கையெழுத்துதானே...!''

''எஸ்... '' உடனடியாக ஆமோதித்தார் மேனன்.

''போன மாசம் ஒரு பார்சி லேடி... இந்த மாசம் ஒரு பாலக்காட்டுப் பாட்டி... இவங்க ரெண்டு பேர் வீட்டுக்கும் துக்கம் விசாரிக்கப் போயிருக்கீங்க...''

''ஓ... அதுவா...? ரெண்டு பேருமே எங்க பாங்க் வாடிக்கையாளருங்க. அவங்க சன், டாட்டர்ஸ், எல்லாம் எங்களுக்கு ரொம்ப வேண்டிய என்.ஆர்.ஐ கஸ்டமர்ஸ்... அன்பார்ச்சுனேட் டெத்... இந்த மாதிரி முக்கியமான கஸ்டமர்ஸ் டெத்தும்போது, ஒரு மரியாதை நிமித்தம் ஒரு பாங்க் மானேஜர்ங்கற முறைல போறது என் வழக்கம்...''

''ஒரு விசேஷம் பார்த்தீங்களா மிஸ்டர் மேனன்...கொலையானவங்கள்ல ரெண்டு பேர் உங்க பாங்க் கஸ்டமர்ஸ்... வயசானவங்க... அதிலும் குறிப்பா, உங்க ப்ராஞ்ச் கஸ்டமர்ஸ்... வேடிக்கையா இல்லை?''

''பாவம்... ரெண்டு பேருமே கொலையாயிருக்காங்க... இதுல என்ன சார் வேடிக்கை...''

– குழப்பமாகக் கேட்டார் மிஸ்டர் மேனன்.

''உங்க காஷியர்கிட்ட நாங்க கொஞ்சம் விசாரணை செய்யணும்...''

''சார்...'' மேனன் திகைக்க,

''ப்ளீஸ் கால் ஹிம் இன்சைடு... திஸ்... இஸ் எ போலீஸ் என்கொயரி... தேவையான உத்தரவுகளோட நாங்க வந்திருக்கோம்...''

மேனனின் கை அடுத்த நிமிடமே பஸ்ஸரை அழுத்தியது.

(தொடரும்)

# கனவே கலையாதே

ஒரு குண்டு வெடிப்பில் இறந்து போகிறார், முரளி காதலித்த 'பஞ்சாப்' சிம்ரன். சோகத்தோடு சென்னைக்கு வரும் முரளியின் கண்ணில்படுகிறார் இன்னொரு சிம்ரன். முரளியின் மன நிலையைப் புரிந்து கொண்டு அவரை மணக்கச் சம்மதிக்கிறார் 'இரண்டாவது' சிம்ரன். அந்த நேரம் பார்த்து வந்து நிற்கிறார் சிம்ரனின் பழைய காதலன். (இதற்கு ஒரு ஃப்ளாஷ்பேக்). முரளி, சிம்ரனை அவரது பழைய காதலனுடன் சேர்த்து வைக்க – 'சுபம்'.

கண்களில் சோகத்தைத் தேக்கி வைத்துக் கொண்டு, படம் முழுக்கக் காதலில் உருகுகிற ரோல் முரளிக்கு. படத்தின் நாயகன் என்பதால் எக்ஸ்ட்ராவாக இரண்டு ஃபைட் சீன்கள். அலட்டாமல் அசத்திவிடுகிறார் மனிதர்.

அடேயப்பா! சிம்ரன்தானா இது! கோபம், அழுகை, சிரிப்பு, காதல் என்று இவர் வெளிப்படுத்தும் ஒவ்வொரு ரஸமும் எக்ஸலண்ட் சாமி! நளினமும், நடிப்பும் சேர்ந்துகொள்ள படத்தில் நிறைய மார்க்குகளை அள்ளிக் கொண்டு போகிறவர் இவர்தான்.

இலையில் அளவாய் ஊறுகாய் வைக்கிற சாக்கில், வெறும் ஸ்பூனைக் காட்டிவிட்டுப் போகிற மாதிரி நகைச்சுவை. டெலிஃபோனில் பேசுகிற மாதிரி ஒரு காட்சியில் தாமுவும், பஸ் ஸ்டாண்ட் காட்சியில் சார்லியும் அடிக்கிற கூத்தைப் பார்க்கையில், இன்னும் கொஞ்சம் இவர்களைப் பயன்படுத்தியிருக்கலாமோ' என்று தோன்றுகிறது.

பின்னணி இசையில் புதுப்புது முயற்சிகள் செய்து பார்க்கிறார் தேவா. 'பூக மஞ்சள்', 'கண்ணில் உன்னைக் கண்டுகொண்டேன்' இரண்டு பாடல்களும் கேட்கிற ரகம். திரும்பத் திரும்பக் கேட்டு சலித்த மெட்டில் ஒரு கானா பாடல். அதையும், வழக்கம் போல தேவாவே பாடுகிறார்.

படத்திற்குப் பெரிதும் கைகொடுத்திருப்பது ஒளிப்பதிவு. அமிர்தசரஸ் – பொற்கோவில், ஜாலியன் வாலாபாக் என்று பஞ்சாப்பை நம் கண்முன்னே கொண்டு வந்து விடுகிறார் 'ஒளி ஓவியர்' தங்கர்பச்சான். கள்ளியும், முட்களும் நிறைந்த ஒரு பிரதேசத்தை யாராவது டூயட் சீனுக்குப் பயன்படுத்துவார்களா? இதில் பயன்படுத்தியிருக்கிறார்கள். அது நம் கண்ணுக்கு தங்கர்பச்சான் கேமராவில் குளிர்ச்சியாக இருப்பது ஓர் ஆச்சரியமான அதிசயம்.

இந்திய பாகிஸ்தான் எல்லையில், இரு நாட்டு வீரர்களும், ராணுவ மரியாதையுடன் கேட்டைத் திறந்து, அவரவர் நாட்டுக் கொடியை இறக்குகிற ஐந்து நிமிடக் காட்சி தான் படம் முடிந்து வெளியே வந்த பின்பும் நம் மனதில் நிழலாடுகிறது.

மற்றபடி 'பழைய பஞ்சாங்க'க் காதல் கதை.

**— கே.பி.எஸ்.**

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

[illegible] நேர்மைக்கும் உழைப்புக்கும் [illegible] பலன் கிடைக்கும் வாரம் [illegible] சரி. ஆபீஸ்லேயும் சரி – [illegible] உங்களுக்கிருந்த மனச் சங்கடங்கள் [illegible] சுத்தமா விலகி ஓடிடும். எதிர்[illegible] இல்லாம வெற்றிப் பாதைல வலம் வரப் போறீங்க. பெண்களுக்கு ஆபரண யோகம் கண்டிப்பா இருக்கும். வீட்லே கல்யாணப் பேச்சு எடுப்பாங்க. உத்தியோகஸ்தர்களுக்கு விருப்பமான இடமாறுதல்கள் கிடைக்க வாய்ப்பு உண்டு.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

[illegible] உழைப்பாளியான உங்களுக்கு [illegible] மட்டும் தள்ளித் தள்ளிப் போயிட்டே இருக்குது இல்லியா? கவலைப் படாதீங்க. அலுவலகம் அத்தனை ஆதரவா இல்லைட்டியும் வீட்டுச் சூழல் உங்களுக்குத் திருப்திகரமாகவே இருக்கும். பணவரவு, [illegible]களுக்குக் குறைவே இருக்காது. [illegible] சில லாபகரமான [illegible] புதிய நண்பர்கள்கிட்ட [illegible] இருங்க. இலக்கியவாதிகள் [illegible] விஷயத்துல கவனமா இருக்க [illegible] எதிர்ப்பை நீங்க [illegible] நேரலாம்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

[illegible] களுக்க் [illegible] யோகம் கூடி [illegible] புதிய வேலை [illegible] வெளிநாடு போற [illegible] வாய்க்கும் பொருளாதாரரீதில [illegible] எதுவும் இருக்காது. சிலருக்கு திடீர் [illegible] பாக்கி வசூல் இருக் [illegible] மூங்கியிருக்கும்ங்கறதால [illegible] தாராளமா தொடங்கலாம். [illegible] புகழ்பெறுவார்கள். [illegible] கலந்து இருக்குங்கறதால, எந்த பிரச்னையையும் சுலபமா தீர்த்துடுவீங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

[illegible] சுமாராத்தான் உங்களை சப்போர்ட் பண்ணுது. வாரத் தொடக்கத்துல நீங்க எந்தப் புது முயற்சியையும் செய்யக் கூடாது. கடன் வாங்கறதோ ஜாமீன் கையெழுத்துப் போடறதோ கண்டிப்பா கூடாது. வழக்குகள் சாதகமா இருக்காது. முடிஞ்சா வாய்தா வாங்கப் பாருங்க. பெண்கள் வீண் விவகாரங்கள்ல மாட்டிக்கிட்டு அவஸ்தைப்பட நேரும். வெளியூர் பயணங்களைத் தவிர்க்கறது நல்லது.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

மதிப்பும் செல்வாக்கும் உயரும் வாரம் போங்க! உடல்நலன் பத்தின கவலை இருந்தா விட்டுத் தள்ளுங்க. உற்சாகமா வேலையைப் பாருங்க. புதிய பதவிகள், உத்யோக உயர்வுன்னு சக்கைபோடு போடப் போறீங்க. அரசியல்வாதிங்களுக்குப் புகழ் கூடும். வியாபார வளர்ச்சி அமோகமா இருக்கும். சிலர் வகையா சொத்துக்கள் வாங்குவாங்க. அரசுப் பணியாளர்களுக்கு திடீர் அதிர்ஷ்டத்துக்கு வாய்ப்பு உண்டு.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

துணிச்சலான காரியங்கள்ல ஈடுபட்டு வெற்றி அடைவீங்க. மனசுல தன்னம்பிக்கை பொங்கும். எதிரிங்க ஓடி ஒளிவாங்க. வெளி

## நடக்குமென்பார்

நாட்டுத் தொடர்புள்ளவங்களுக்கு ஆதாயமும் வளர்ச்சிக்கான பாதையும் கிடைக்கும். வேலை வாய்ப்புகள் தேடி வரும். பெண்களுக்குக் கல்யாண யோகம் தேடி வருது. மாணவர்கள், விஞ்ஞானிகள், பத்திரிகையாளர்கள் எல்லாருக்கும் புகழும் பாராட்டும் உறுதி. இரவுப் பயணமோ, நீண்ட நேர கண்விழிப்போ வேணாம். சிலருக்கு அலர்ஜி மாதிரி ஏதாவது வரலாம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

வியாபாரிகள் தங்கள் தொழில்ல ஏற்றம் பெறுவாங்க. இப்ப உங்களுக்கு நண்பர்கள் உதவ முன்வருவாங்க. பண உதவி தாரா

# நடக்கும்!

ணமா கிடைக்கும். அதனால புதிய முயற்சி கள்ல துணிஞ்சி இறங்கலாம். மனகல சிறு சலனங்கள் இருக்கும். எல்லாம் உங்க திறமை மேல உங்களுக்கு அதிருப்தி இருக்கறதால தான்! விட்டுத் தள்ளிட்டு முன்னேறும் வழியைப் பாருங்க. எதிர்பாராத பெரிய மனிதர்களோட தொடர்பு இப்ப உங்களுக்கு பாஸிடிவான வாழ்க்கைப் பாதையைக் காட்டக்கூடும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

வெளியூர் அல்லது வெளிநாட்டுலேருந்து ஏதாவது நல்ல செய்தி கண்டிப்பா வரும். உல்லாச அனுபவங்களுக்குக் குறைவிருக்காது. கவிஞர்கள், பத்திரிகையாளர்களுக்கும் புதிய வாய்ப்புகளும் பொருளாதார அபிவிருத்தியும் இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராவே இருக்கும். விளையாட்டுத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். எதிரிங்க காணாம போயிடுவாங்க. பெண்களுக்கு மனதுக்கினிய சம்பவங்கள் நடக்கும்.

**கடகராசிக் காரரான விஜய் வாரத் தொடக்கத்தில்**



**புது முயற்சிகளில் ஈடுபடக் கூடாதாம்!**



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

பயணம் பலன் தரும். பணவரவும் அமோகமா இருக்கும். விருந்துகள்ல கலந்துக்குவீங்க. எதிர்ப்புகள் அடங்கியிருக்கும். சிலருக்கு வீட்டுல கல்யாணப் பேச்சு நடக்கும். தயங்காம பண்ணிக்கங்க. முக்கியமான ஒரு விஷயத்துல முடிவெடுக்க முடியாம தவிப்பீங்க. பெரியவங்களை கன்சல்ட் பண்ணுங்க. ஷேர், வீடு, நிலம் எல்லாமே ஆதாயம் தரத்தான் செய்யும். போட்டி, வம்பு தும்புகளில் தலையிடாம இருக்கறது நல்லது.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

வீடு, மனை வாங்க ஏற்ற வாரம் இது. ஆனா நம்பகமான நபர்களைத் தேர்ந்தெடுத்து அணுக வேண்டியது முக்கியம். இப்ப நீங்க கேட்ட இடத்துல பணஉதவி கிடைக்கும் தான். அதுக்காக நிறைய கடன் வாங்கிட்டுப் பின்னால அவஸ்தைப்படாதீங்க. இளைஞர்கள் காதல் கனவுகள்ல மிதப்பாங்க. தப்பில்லை. வேலையிலும் கவனமா இருந்தா சரிதான். பெண்களுக்குப் புடைவை, நகைன்னு யோகம் அடிக்கப் போவுது. சிலர் வெளிநாடு போற சான்ஸும் இருக்குது.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமா இருக்குது. தேக ஆரோக்கியம், பணவரவு, வெளிவட்டாரத் தொடர்பு எல்லாம் சீரா இருக்கும். சொந்த பிஸினஸ் பண்றவங்களுக்கு லாபம் கூடும். வெளிநாட்டு முதலீடு சிலருக்குக் கிடைக்கும். அரசு உத்தியோகஸ்தர்களுக்குக் கொஞ்சம் சிரம தசைதான். மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகலாம். சமூகப் பணியாளர்களுக்கும் மாதர் சங்க மாமிகளுக்கும் புகழ் உயரும். வீட்ல ஏதோ, விசேஷம் நடக்கப் போவுது. எதுக்கும் பண விஷயத்துல சிக்கனமா இருக்கறதே நல்லது.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

தெய்வ காரியங்களை நிறைவேற்ற சரியான நேரம். நீண்ட நாள் பிரார்த்தனைகள் பலிக்கும். குழந்தைப் பேறு கிடைக்கும். வெளிநாட்டு வேலை வாய்ப்பும் சிலருக்கு அமையலாம். போட்டிகள்ல வெற்றிதான். விஞ்ஞானிகள் புகழடைவாங்க. சமூகப் பணியாளர்கள், அரசியல்வாதிகள் அளவோடு ஆதாயம் அடைவாங்க. பணப் பிரச்னை இருக்காது. ஆனா பணம் தண்ணியா செலவழியும். சிலருக்கு வெளியூர் டிரான்ஸ்ஃபர் இருக்கும். உஷ்ணாதிக்கத்தால கொஞ்சம் உடல்நலக் கோளாறு ஏற்படலாம். ●

# பொன்னியின் செல்வன்

*முப்பத்தேழாம் அத்தியாயம்!*

## வேஷம் வெளிப்பட்டது!



யங்கரத் தோற்றங் கொண்டிருந்த அந்தக் காளாமுக சைவரை அந்த நேரத்தில் அந்த இடத்தில் பார்த்ததும் வந்தியத்தேவன் ஒருகணம் திகில் அடைந்தான். பிறகு அவனுக்கு இயற்கையான துணிச்சல் திகிலை விரட்டியடித்தது. "இவனை எங்கேயோ பார்த்திருக்கிறேனே? எங்கே" என்று சிந்தித்தான். ஆம், ஆம்; அரிச்சந்திர நதிக்கரையில் மரத்தடியில் படுத்திருந்தபோது இரண்டு பேர் வந்து உற்றுப் பார்த்து விட்டுப் போகவில்லையா? அவர்களில் ஒருவன் இவன்! அவ்வளவுதானா? ஒரு தடவை மட்டும் பார்த்த முகமா இது? அந்தக் கூரிய பார்வையுள்ள கண்களை வேறு எங்கேயும் பார்த்ததில்லையா?"

இதற்குள் காளாமுக சைவன் அவனை உற்றுப் பார்த்துவிட்டு, "ஹா! ஹா! ஹா!" என்று சிரித்தான். அந்தக் குரல்! – அடிக்கடி கேட்ட குரல் போல இருக்கிறதே?

"அட சே! நீதானா? உனக்காகவா இந்த நள்ளிரவில் இவ்வளவு கஷ்டப்பட்டு வந்தேன்?" என்று காளாமுக சைவன் கூறியபோது, அவன் வேண்டுமென்று சிறிது குரலை மாற்றிக்கொண்டு பேசியதாகத் தோன்றியது.

"பின்னே, யாருக்காக வந்தாய்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இளவரசரைத் தேடிக்கொண்டு வந்தேன்!" என்றான் காளாமுகன்.

"எந்த இளவரசரை?"

"உனக்கென்ன அதைப் பற்றி? நீ ஏன் கேட்கிறாய்?"

"நானும் ஓர் இளவரசன்தான்; அதனால்தான் கேட்டேன்."

"இளவரசனுடைய முக லட்சணத்தைப் பார்...!"

"என் முக லட்சணத்துக்கு என்ன ஐயா, குறைவு? உம்மைப் போல் தாடி மீசையும்

சடை முடியும் எலும்பு மாலையும் அணிந்தால் என் முகம் இலட்சணமாகி விடுமா?"

"அணிந்து பாரேன்! அப்போது தெரியும்."

"தாடி மீசையும் ஜடை முடியும் எத்தனை நாளில் வளரும்?"

"அது என்ன பிரமாதம்? ஒரு நாளில் வளர்ந்து விடும். வேண்டுமென்றால் ஒரு நாழிகையில்கூட..."

"அப்படித்தான் இருக்குமென்று நானும் நினைத்தேன்..."

"என்ன நினைத்தாய்?"

"ஒன்றுமில்லை. என்னைக் கட்டியிருக்கும் கட்டுக்களை அவிழ்த்து விடு. நானும் உங்கள் கோஷ்டியில் சேர்ந்து விடுகிறேன்."

"போதும் போதும்! உன்னைப் போன்ற ஒற்றர்கள் இன்னும் யாரோ எங்கள் கூட்டத்தில் இருக்கிறார்கள். அதனால்தான் எங்கள் மகாசங்கம் இன்று அப்படி முடிந்தது."

"எப்படி முடிந்தது?"

"மகாசங்கத்துக்கு இளவரசர் வரப் போகிறார், அவர் சிம்மாசனம் ஏறியதும் எங்கள் மகா குருவை இராஜ குருவாக ஏற்றுக் கொள்வதாய் வாக்களிக்கப் போகிறார் என்று காத்திருந்தோம்; இளவரசர் வரவேயில்லை."

"என்னைக் கட்டு அவிழ்த்து விடு; இளவரசர் ஏன் வரவில்லையென்று நான் தெரியப்படுத்துகிறேன்."

"எந்த இளவரசர்?"

"வேறு யார்? கண்டராதித்தரின் குமாரர் மதுராந்தகர்தான்!"

"நான் ஊகித்தது சரி!"

"என்ன ஊகித்தாய்?"

"நீ ஒற்றன் என்று ஊகித்ததைத்தான் சொல்கிறேன்."

"எதைக் கொண்டு ஊகித்தாய்?"

"இளவரசரைத் தேடிக்கொண்டு வந்த போது, இந்தக் காட்டுக்குள்ளிருந்து சிலர் வெளியேறுவதைப் பார்த்தேன். அவர்கள் இன்னார் என்று எனக்குத் தெரியும். நீ ஒற்றன் என்று சந்தேகித்துத்தான் அவர்கள் உன்னைக் கட்டிப் போட்டிருக்க வேண்டும். ஆனால் உன்னை உயிரோடு ஏன் விட்டு விட்டுப் போனார்கள் என்றுதான் தெரியவில்லை."

"அதை நான் சொல்கிறேன்; என்னைக் கட்டு அவிழ்த்து விடு!"

"நீ ஒன்றும் சொல்ல வேண்டாம். உன்னைக் கட்டு அவிழ்த்து விடவும் முடியாது. நான் சொல்லுகிறபடி செய்கிறதாக ஒப்புக்கொண்டால்..."

"நீ சொல்லுகிறபடி என்ன செய்ய வேண்டும்?"

"உனக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடுவதில்லையென்று ஒப்புக்கொண்டு நூற்றெட்டு தோப்புக்கரணம் போட வேண்டும்!"

"அப்படியா சமாசாரம்?" என்றான் வந்தியத்தேவன்.



இந்தப் பேச்சு நடந்து கொண்டிருந்தபோதெல்லாம் அவனுடைய கைகள் சும்மா இருக்கவில்லை. மெள்ள மெள்ளக் கட்டுக்களை அவிழ்த்துக் கொண்டேயிருந்தன. "நூற்றெட்டு தோப்புக்கரணம் போட வேண்டும்" என்று காளாமுகன் கூறிய போது, எல்லாக் கட்டுக்களும் அவிழ்ந்து விட்டன. அவ்வளவுதான்; ஒரே பாய்ச்சலாகக் காளாமுகன் மீது பாய்ந்தான் வந்தியத்தேவன். அவனைக் கீழே தள்ளினான். காளாமுகன் கையில் ஏந்தியிருந்த சுளுந்து பக்கத்தில் விழுந்தது; ஆனால் அடியோடு அணைந்து விடாமல் சிறிது வெளிச்சம் கொடுத்துக் கொண்டிருந்தது.

கீழே விழுந்த காளாமுகன் மார்பின் மீது வந்தியத்தேவன் ஏறி உட்கார்ந்து கொண்டு அவன் முக தாடியைப் பிடித்துக் குலுக்கினான். தாடி வந்தியத்தேவனுடைய கையோடு வந்துவிட்டது. அதே சமயத்தில் காளாமுகன் வந்தியத்தேவனை உதறித் தள்ளிவிட்டு எழுந்து நின்றான்.

தரையில் கிடந்து அணைந்து போகும் தறுவாயிலிருந்த சுளுந்தை வந்தியத்தேவன் எடுத்துத் தூக்கிப் பிடித்தான்.

தாடியும் சடையும் இழந்த காளாமுகனுடைய முகம் சாக்ஷாத் வீர வைஷ்ணவ ஆழ்வார்க்கடியானுடைய முகமாகக்

அமரர் கல்கி

...ளித்தது.

...ரும் ஒருவர் முகத்தை ஒருவர் ...ரிது நேரம் சிரித்துக் கொண் ...

"...வரே! சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடக் கூடாது என்று எனக்குச் சொன்னீரே? நீர் மட்டும் என்ன செய்தீராம்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"உன்னைப் போல் நான் அபாயத்தில்



அகப்பட்டுக் கொள்ளவில்லையே, அப்பனே! நான் மட்டும் இப்போது வந்திரா விட்டால்..."

"நீர்தான் என் கட்டுக்களை அவிழ்த்து விட்டதாக எண்ணமா?"

"நீயே கட்டு அவிழ்த்துக் கொண்டிருந்தாலும் இந்தக் காட்டிலிருந்து என் உதவியில்லாமல் வெளியே போக முடியாது. நரிகளுக்கு இரையாக வேண்டியதுதான்."

"நரிகள் கிடக்கட்டும். இங்கே சற்று முன் வந்து கூடியிருந்த மந்திரவாதி நரிகளை நீர் பார்த்திருந்தால்... அந்த நரிகளிடமிருந்து நான் தப்பியதுதான் பெரிய காரியம்!"

"அந்த மந்திரவாதிகளை எனக்கும் தெரியும். மந்திரவாதிகள் மட்டுந்தான் வந்திருந்தார்களா? இன்னும் யாராவது வந்திருந்தார்களா?"

"சிறிய மீன் ஒன்று வந்திருந்தது. புலியை விழுங்க ஆசைப்படும் அதிசயமான மீன் அது!"

"ஆகா! சொல்! சொல்! யார் யார் வந்திருந்தார்கள், என்னென்ன நடந்தது, விவரமாகச் சொல்!"

"நீர் எதற்காக இந்த வேஷம் தரித்தீர்? சாயங்காலம் எங்கே போயிருந்தீர்? போயிருந்த இடத்தில் என்ன நடந்தது? - அதையெல்லாம் சொன்னால் இங்கே நடந்ததை நான் சொல்கிறேன்!"

"நான் சொல்வதற்கு அதிகமாக ஒன்றுமில்லை. இன்று முன்னிரவில் கொள்ளிடக் கரையில் காளாமுகர் மகாசங்கம் கூடும் என்று தெரிந்தது. அங்கே என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்காகத்தான் இந்த வேஷம் போட்டுக் கொண்டு போனேன். பார்த்து விட்டுக் கொள்ளிடக் கரைத் தோணித் துறையில் உன்னை வந்து சந்திக்கலாம் என்று எண்ணினேன். மகா சங்கம் கூடிற்று. பெரிய பழுவேட்டரையர் வந்திருந்தார். காளாமுகர்களின் பெரிய குருவும் வந்திருந்தார். ஆனால் முக்கியமாக யார் வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்களோ, அவர் வரவேயில்லை!"

"இளவரசர் மதுராந்தகரைத்தானே எதிர்பார்த்தார்கள்?"

"ஆம்; அது எப்படி உனக்குத் தெரிந்தது?"

"மதுராந்தகர் தஞ்சைச் சிம்மாசனத்தில் ஏறினால் இராஜ்ய பாரம் அழகாய்த்தான் நடைபெறும்!"

"ஏன் அவ்விதம் சொல்கிறாய்?"

"ஒரு முரட்டுக் குதிரையை அடக்கி ஆள அவரால் முடியவில்லையே? பழுவேட்டரையர் போன்ற சிற்றரசர்களையும், கலகமூட்டும் காளாமுக சைவர்களையும், சண்டைக்கார வீர வைஷ்ணவர்களையும் அவரால் எப்படி அடக்கி ஆள முடியும்?"

ஆழ்வார்க்கடியான் நகைத்து விட்டு "நீ வரும் வழியில் மதுராந்தகரைப் பார்த்தாயா? அவருக்கு என்ன நேர்ந்தது, தெரியுமா?" என்று கேட்டான்.

வந்தியத்தேவன் தான் மதுராந்தகரைத் தொடர்ந்து வந்ததையும், திடீரென்று தீவர்த்தியைக் கண்டு அவருடைய குதிரை தெறி கெட்டு ஓடியதையும், தான் அவரைச் சிறிது தூரம் தேடிப் போனதையும், கடைசியில் களத்து மேட்டில் குதிரையை மட்டும் பார்த்ததையும் கூறினான்.

"ஐயோ! பாவம்! குதிரை அவரை எங்கே தள்ளிற்றோ, என்னமோ? அவருடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்தாலும் நேர்ந்திருக்கலாம். அதனால்தான் அவர் உங்கள் மகா சங்கத்துக்கு வரவில்லை. நாம் மறுபடியும் போய் அவரைத் தேடிப் பார்க்கலாமா?"

"அழகுதான்! அதைப் பற்றி நமக்கு என்ன? நம்முடைய வேலையை நாம் பார்க்கலாம் வா! புறப்படு உடனே! பொழுது விடிவதற்குள் நாம் கொள்ளிட நதியின் தோணித் துறையில் இருக்க வேண்டும்."

"மதுராந்தகர் வாய்க்காலிலோ, வயல் வரப்பிலோ விழுந்து செத்துக் கிடந்தாரானால்...? அப்போதுகூட நமக்கு என்ன கவலை என்று சொல்வீரா?"

"அப்படியெல்லாம் நேர்ந்திராது. அநிருத்தர் அதற்கு முன் ஜாக்கிரதையாக ஏற்பாடு செய்திருப்பார்."

"முதன் மந்திரி அநிருத்தரா? அவருக்கு என்ன இதைப் பற்றித் தெரியும்?"

"ஆகா! அது என்ன அப்படிக் கேட்கிறாய்? அன்பில் அநிருத்தருக்குத் தெரியா

மல் இந்த ராஜ்யத்தில் எந்த இடத்திலும் எதுவுமே நடக்க முடியாது."

"ஓகோ! கடம்பூர் மாளிகையில் நடந்த சதிக் கூட்டத்தைப் பற்றிய விஷயமும் அவருக்குத் தெரியுமா?"

"ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள். வீர நாராயணபுரத்துத் திருவிழா வின்போது பழுவூர் ராணியின் பல்லக்கு போனதை நாம் இருவர் ஒரு மரத்தடியில் நின்று பார்த்தோம் அல்லவா?"

"ஆம்; பல்லக்கின் திரை விலகியதும் நீ அடைந்த பரபரப்பு இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது. பழுவூர் ராணியிடம் ஓர் ஓலை கொடுக்க முடியுமா என்று நீ என்னைக் கேட்டாய்!"

"நீ அதற்குச் 'சிச்சி! அது என்ன வேலை?' என்றாய். நான் ஏதோ காதல் ஓலை கொடுக்க விரும்பியதாகவே நீ எண்ணினாய். சதிகாரர்களின் பேச்சை நம்பி மோசம் போக வேண்டாம் என்று மதுராந்தகருக்கு எச்சரிக்கை செய்யவே நான் விரும்பினேன்; முதன்மந்திரியின் கட்டளைப்படி!"

"பல்லக்கில் இருந்தது மதுராந்தகர் என்று உனக்குத் தெரியுமா?"

"முதலில் சந்தேகித்தேன். திரை விலகியதும் அந்த இரகசியம் தெரிந்தது. நீ நல்ல அழுத்தக்காரன். நான் எவ்வளவோ பிரயத்தனம் செய்தும், நீ பல்லக்கில் இருந்தது பழுவூர் ராணி அல்ல, மதுராந்தகர் என்று சொல்ல மறுத்து விட்டாய் அல்லவா?"

"நீ மாத்திரம் அழுத்தக்காரன் இல்லையா? இன்று சாயங்காலம் நீ எங்கே போகப் போகிறாய் என்று கூடச் சொல்ல மறுத்து விட்டாயே?"

"சொன்னால் நீ



அதிலும் தலையிட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்திருப்பாய்! இப்போதே எவ்வளவு சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டாய், பார்! இனிமேலாவது..."

"காளாமுகர் கூட்டத்தைப் பற்றியும் மதுராந்தகர் அங்கே போக உத்தேசித்திருப் பது பற்றியும் முதன்மந்திரிக்குத் தெரியுமா?"

"தெரியாமலா என்னை அனுப்பினார்? அதேசமயத்தில் மதுராந்தகர் அங்கே போய்ச் சேராதிருப்பதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறார். யாரோ தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான் என்று சொன்னாயே? அவனும் அநிருத்தரின் ஆளாகத் தான் இருந்திருப்பான். வேண்டு மென்றே குதிரையை மிரட் டித் தெறி கெட்டு ஓடும்படி செய்திருப்பான். தரையில் விழுந்த இளவர சரை யாராவது எடுத்துக் காப்பாற்றியிருப் பார்கள்.

"இத்தனை நேரம் அநேகமாக அவர் ரதத்திலோ, பல்லக்கிலோ ஏறித் தஞ் சையை நோக்கிப் போய்க் கொண்டிருப் பார். வா! நாமும் நம் வழியே போகலாம்."

"வைஷ்ணவரே! நான் வர முடியாது."

"இது என்ன? நீ ஒப்புக்கொண்ட காரி யம் என்ன ஆயிற்று? காஞ்சியிலிருந்து ஆதித்த கரிகாலர் புறப்பட்டு விட்டதாகக் கேள்விப்படுகிறேன். நாம் உடனே வாயு வேக மனோ வேகமாகப் போனால்தான்..."



"ஆதித்த கரிகாலரிடம் கொடுக்க வேண்டிய ஓலையை நீரே கொடுத்து விடலாமே? அவர் மதுராந்தகனைப் போல் ஸ்திரீ வேஷத்திலும் வர மாட்டார்; இரவில் ஒளிந்தும் பிரயாணம் செய்யமாட்டார்..."

"நீ என்ன செய்யப் போகிறாய்?"

"உண்மையில் நான் மதுராந்தகரைப் பின் தொடர்ந்து இன்று சாயங்காலம் புறப்படவில்லை. வேறொருவரைத் தொடர்ந்து போக ஆரம்பித்ததில் மதுராந்தகரை வழியில் தற்செயலாகப் பார்க்க நேர்ந்தது."

"நான் ஒரு ஜோசியம் சொல்லுகிறேன். நீ தொடர்ந்து போக ஆரம்பித்தது ஒரு பெண்மணியாக இருக்கும்."

"நீர் பொல்லாத வைஷ்ணவர்! ஒருநாள் உம்முடைய மண்டையை உடைத்துவிட்டு மறுகாரியம் பார்க்கப் போகிறேன்."

"அது உன்னால் முடியாத காரியம். ஏற்கெனவே என் மண்டையை ஒரு காளாமுகனுக்கு அடகு வைத்திருக்கிறேன். அது போனால் போகட்டும். நீ குடந்தையிலிருந்து யாரைத் தொடர்ந்து புறப்பட்டாய்? அந்தப் பெண் யார்?"

"கொடும்பாளூர் இளவரசி குடந்தை சோதிடர் வீட்டுக்கு வந்திருந்தாள். பல்லக்கில் ஏறிக்கொண்டு தனியாகப் புறப்பட்டுப் போனாள். உண்மையில் அந்தச் சித்தப் பிரமை கொண்ட பெண்ணைத் தொடர்ந்து நான் கிளம்பவில்லை. அவளுடைய பல்லக்கு நான் போக வேண்டிய பாதையில் கொஞ்ச தூரம் போயிற்று. திடீரென்று அந்தப் பல்லக்கைச் சில மனிதர்கள் வந்து தாக்கினார்கள். கூடப் போன தாதிப் பெண்ணை மரத்தில் கட்டிப் போட்டுவிட்டு வானதியை மட்டும் கொண்டு போனார்கள். வைஷ்ணவரே! அந்தப் பெண்ணின் கதி என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்ளாமல் உம்மோடு வர எனக்கு இஷ்டமில்லை."

"அந்தப் பெண்ணைப் பற்றி உனக்கு என்ன அவ்வளவு கவலை?"

"அது என்ன அப்படிச் சொல்கிறீர்? ஈழத்துப்பட்ட மகாவீரர் சிறிய வேளாரின் புதல்வியல்லவா? பழையாறை இளைய பிராட்டியின் மனத்திற்குகந்த தோழியல்லவா? இன்னும், பொன்னியின் செல்வருக்கு வானதிதேவியை மணம் செய்விக்கப் போவதாகவும் ஒரு பிரஸ்தாபம் இருந்ததல்லவா?"

"அப்பனே! பொன்னியின் செல்வர் தான் கடலில் முழுகி இறந்து விட்டாரே? அவருடைய திருமணத்தைப் பற்றி இப்போது என்ன கவலை?"

"அவர் இறந்து விட்டார் என்பது என்ன நிச்சயம்! ஊகந்தானே?"

"அப்படியானால் அவர் உயிரோடிருக்கலாம் என்று நீ நினைக்கிறாயா?"

"வைஷ்ணவரே! என்னுடைய வாயைப் பிடுங்கி ஏதேனும் இரகசியத்தைத் தெரிந்து கொள்ளலாம் என்பது உங்கள் உத்தேசமாயிருந்தால், அதை மறந்து விடும்!"

"சரி! சரி! நீ பெரிய அழுத்தக்காரன் என்பது எனக்குத் தெரியும். ஆனால் வானதி தேவியைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். இளையபிராட்டிக்கு அவள் பேரில் உயிர் என்பதுதான் உனக்கு நன்றாகத் தெரியுமே?"

"அதனாலேதான் நானும் கவலைப்படுகிறேன். வானதி தேவிக்கு இந்த ஆபத்து வந்தது இளையபிராட்டிக்குத் தெரியாமல் இருக்கலாம் அல்லவா?"

"இன்றைக்குத் தெரியாவிட்டால் நாளைக்குத் தெரிந்து விடுகிறது."

"நாளைக்குத் தெரிந்து என்ன பயன்? காளாமுகர்கள் அந்தக் கன்னிப் பெண்ணை இன்றிரவு பலி கொடுத்து விட்டால்...?"

"வானதியைக் காளாமுகர்கள் தூக்கிப் பிடித்துக்கொண்டு போனதாகவா சொல்லுகிறாய்?"

"அப்படித்தான் எனக்குத் தோன்றியது. வானதியின் தோழியும் அப்படித்தான் என்னிடம் கூறினாள்."

"அது உண்மையானால், நீ கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டியதில்லை. கொடும்பாளூர் வம்சத்தார் காளாமுகத்தைச் சேர்ந்தவர்கள். வானதி தேவி கொடும்பாளூர்ப் பெண் என்று தெரிந்தால், அவளுக்குக் காளாமுகர்கள் இராஜோபசாரம் செய்வார்கள்!"

"ஓகோ! இது எனக்குத் தெரியாமல் போயிற்றே?"

"ஆகையினால்தான் காளாமுகர்கள் மதுராந்தகத் தேவருக்கு எதிராக இருக்கிறார்கள்..."

"இந்த மண்டை ஓட்டுச் சாமியார்கள் எதிராக இருந்தால் என்ன வந்து விடப் போகிறது?"

"உனக்குத் தெரியாது. இந்த நாட்டில் மிகப் பெரிய குடும்பங்கள் காளாமுகத்

தைச் சேர்ந்தவை. சைன்யத்திலும் அத்தகைய பலர் இருக்கிறார்கள். அதனாலேயே பழுவேட்டரையர் இன்றைக்கு இந்த ஏற்பாடு செய்திருந்தார். மதுராந்தகருக்குக் காளாமுகர்களின் ஆதரவைத் தேட முயன்றார். அது ஒரு குதிரை செய்த கோளாறினால் பலிக்காமற் போயிற்று. நீ புறப்படு, போகலாம். வருகிறாயா? அல்லது நான் கிளம்பட்டுமா?"

வந்தியத்தேவன் வேண்டா வெறுப்பாக எழுந்து குதிரையையும் கையில் பிடித்துக் கொண்டான். அடர்ந்த காடுகளின் ஊடே ஆள் நுழையக் கூடிய வழியைக் கண்டு பிடித்து அவர்கள் வெளியே வந்தார்கள்.

"அதோ பார்!" என்று ஆழ்வார்க்கடியான் வானத்தைச் சுட்டிக் காட்டினான்.

முன் எப்போதையும் விடத் தூமகேதுவின் வால் நீண்டு, வானத்தின் ஒரு பாதி முழுவதிலும் வியாபித்திருப்பதை வந்தியத்தேவன் பார்த்தான்.

குளிர்ந்த வாடைக்காற்று வீசிற்று. வந்தியத்தேவனுடைய உடம்பு சிலிர்த்தது.

தூரத்தில் கிராமத்து நாய் ஒன்று தீனமான சோகக் குரலில் அழுதது.

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# வானதிக்கு நேர்ந்தது!

சூரியன் மறைந்து நாலு திக்கிலும் இருள் சூழ்ந்து வந்த நேரத்தில் வானதி குடந்தை திருவாரூர் சாலையில் பல்லக்கில் போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளம் குழம்பியிருந்தது. நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போக வேண்டும் என்றும், அங்கே காய்ச்சல் வந்து படுத்திருக்கும் இளவரசருக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்றும் அவள் மனம் துடிதுடித்தது. ஆனால் அது எப்படிச் சாத்தியமாகும்? புத்த பிக்ஷுக்களின் விஹாரத்துக்குள் தன்னை அனுமதிப்பார்களா, அங்கே இளவரசரைத் தான் பார்க்க இயலுமா, பார்த்தாலும் பணிவிடை செய்ய முடியுமா, - என்பதையெல்லாம் எண்ணியபோது ஒரே மலைப்பாயிருந்தது. நாகைப்பட்டினத்துக்குத் தனிமையாகப் பிரயாணம் செய்ய வேண்டியிருப்பதை எண்ணியபோது அதைரியம் உண்டாயிற்று. அதைரியத்தைப் போக்கி மனத்தில் உறுதி உண்டு பண்ணிக்கொள்ள முயன்றாள். உலகில் பெரிய காரியம் எதுதான் எளிதில் சாத்தியமாகும்? ஒவ்வொருவர் எடுத்த காரியத்தைச் சாதிப்பதற்கு எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்? அந்த ஓடக்காரப் பெண் கடலில் தனியாகப் படகு செலுத்திக்கொண்டு போக எவ்வளவு நெஞ்சத் துணிவு உள்ளவளாயிருக்க வேண்டும்? புயலிலும் மழையிலும் மலை போன்ற அலைகளுக்கு மத்தியில் படகு விட்டுக் கொண்டு போய் இளவரசரைக் காப்பாற்றியதற்கு எவ்வளவு நெஞ்சுத் துணிவு அவளுக்கு இருக்க வேண்டும்? தான் இந்தச் சிறிய பிரயாணத்தைக் குறித்துப் பயப்படுவது எவ்வளவு பேதைமை? சூடாமணி விஹாரத்துக்குள் உடனே போக முடியாவிட்டால் பாதகமில்லை. அக்கம் பக்கத்தில் இருந்து இளவரசரைப் பற்றிய செய்தி தெரிந்து கொண்டிருந்தாலும் போதும். இளவரசரைப் பார்க்க முடியாவிட்டாலும் பாதகமில்லை; அந்த ஓடக்காரப் பெண்ணையாவது பார்க்க முடிந்தால் போதும். ஆம், அதுதான் சரி! அவளை எப்படியாவது தெரிந்து கொண்டால், அவள் மூலமாக இளவரசரைப் பார்க்க முடிந்தாலும் முடியலாம். அவரிடம் தனக்குள்ள அன்பு ஏதோ ஒரு பிரயோஜனத்தை எதிர்பார்த்ததல்ல என்பதை எப்படியாவது நிரூபித்துக் காட்டிவிட வேண்டும். அதற்குப் பிறகு இந்த உயிரை விட்டாலும் விட்டு விடலாம்; அல்லது புத்த சங்கத்தில் சேர்ந்து பிக்ஷுணி ஆனாலும் ஆகிவிடலாம்...

மறுநாள் எந்த நேரத்துக்கு நாகைப்பட்டினம் போய்ச் சேரலாம் என்று பல்லக்குச் சுமப்பவர்களை விசாரிப்பதற்காக வானதி பல்லக்கின் திரையை விலக்கி வெளியில் பார்த்தாள். சாலை ஓரத்தில் ஓங்கி வளர்ந்திருந்த மரங்களுக்குப் பின்னால் சில உருவங்கள் மறைந்து நிற்பது



போல் அவளுக்குத் தோன்றியது. இன்னும் சிறிது கவனமாக உற்றுப் பார்த்தாள். மறைந்து நின்றவர்கள் வீர சைவ காளா முகர்கள் என்று தெரிந்தது. இதைக் குறித்து வானதிக்குச் சிறிதும் கவலை உண்டாக வில்லை. அவள் கொடும்பாளூர் அரண் மனையில் வளர்ந்த காலத்தில் அடிக்கடி காளாமுகர்கள் அங்கே வருவதுண்டு. அவ ளுடைய பெரிய தந்தையிடம் பேசித் தங் களுக்கு வேண்டிய பொருள்களைப் பெற் றுப் போவதுண்டு. காளாமுகர்களின் பெரிய குருவே ஒரு சமயம் கொடும்பாளூர் வந்திருக்கிறார். அவருக்கு உபசாரங்கள் - பூஜைகள் எல்லாம் நடந்தன. அவளுடைய பெரிய தகப்பனார் பூதி விக்கிரமகேசரி பல திருக்கோயில்களில் காளாமுகர்களுக்கு அன்னம் படைப்பதற்கென்றே நிவந்தங்கள் ஏற்படுத்தியிருக்கிறார். ஆகையால் காளா முகர்கள் தனக்குக் கெடுதல் ஒன்றும் செய்ய மாட்டார்கள். ஒருவேளை உதவி செய்தா லும் செய்வார்கள். இன்றைக்கு அவர்களு டைய மகா சங்கம் கூடுகிறதென்பது வானதிக்குத் தெரிந்திருந்தது. ஆகையால் அன்று பழையாறையிலிருந்து குடந்தைக்கு வந்தபோது கூடச் சாலையில் காளாமுகர் கூட்டங்களை அவள் பார்க்கும்படி நேர்ந் தது. ஆனாலும், இவர்கள் எதற்காக மரத் தின் பின்னால் ஒளிந்து நிற்கிறார்கள்? தன்னை ஒருவேளை வேறு யாராவது என்று அவர்கள் எண்ணிக்கொண்டு ஏதா வது தீங்கு செய்யலாம் அல்லவா...?

இப்படி அவள் எண்ணிக் கொண்டி ருந்தபோதே, மறைந்திருந்தவர்கள் திடுதிடு வென்று ஓடி வந்தார்கள். பல்லக்கைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்போதும் அவள் பயப்படவில்லை. தான் யார் என் பதை அவர்களுக்குத் தெரிவிக்க எண்ணி னாள். எப்படி அதைச் சொல்வது என்று யோசிப்பதற்குள், பல்லக்குடன் வந்த பணிப்பெண்ணை இரண்டு பேர் பிடித்து மரத்தோடு கட்டுவதைப் பார்த்தாள். உடனே அவளை அறியாமல் பீதியுடன் கூடிய கூச்சல் ஒன்று அவள் வாயிலிருந்து வந்தது. பல்லக்கைச் சூழ்ந்திருந்த காளா முகர்களில் ஒருவன் ஒரு திரிசூலத்தை எடுத்து அவள் முகத்துக்கு நேரே காட்டி, "பெண்ணே, கூச்சல் போடாதே! கூச்சல் போடாதிருந்தால் உன்னை ஒன்றும் செய்ய மாட்டோம். இல்லாவிட்டால், இந்தச் சூலத்தினால் குத்திக் கொன்று விடுவோம்!" என்றான்.

வானதிக்குச் சிறிது தைரியம் வந்தது. கம்பீரமாகப் பேச எண்ணிக்கொண்டு "நான் யார் தெரியுமா? கொடும்பாளூர் வேளார் மகள். என்னைத் தொட்டீர் களானால் நீங்கள் நிர்மூலமாவீர்கள்"



என்றாள். அவளுடைய மனத்தில் தைரியம் இருந்ததே தவிர, பேசும்போது குரல் நடுங் கிற்று. அதைக் கேட்ட காளாமுகன் "எல் லாம் எங்களுக்குத் தெரியும். தெரிந்துதான் உனக்காகக் காத்திருந்தோம். சற்று நேரம் சத்தமிடாமலிரு! இல்லாவிட்டால்..?" என்று மறுபடியும் திரிசூலத்தை எடுத்து நீட்டி னான்.

அதேசமயத்தில் சாட்டையினால் 'சுளீர்' 'சுளீர்' என்று அடிக்கும் சத்தமும், 'ஐயோ' 'ஐயோ' என்ற குரலும் கேட்டது. அப்படி அடிபட்டு அலறியவர்கள் சிவிகை தூக்கு வோர் என்பதை வானதி அறிந்தாள். அவர் களைச் சில காளாமுகர்கள் சாட்டையி னால் அடித்திருக்க வேண்டும்!

அதைப் பற்றி வானதி ஆத்திரப்பட்டுப் பல்லக்கிலிருந்து கீழே இறங்கி விட எண்ணி னாள். அதற்குச் சந்தர்ப்பம் வாய்க்க வில்லை. ஏனெனில் சிவிகை தூக்கிகள் பல்லக்கைச் சுமந்துகொண்டு ஓடத் தொடங்கினார்கள். காளாமுகர்களும் பல்லக்கைச் சூழ்ந்த வண்ணம் ஓடி வந்தார் கள். ஓடும்போது அவர்கள் பயங்கரமாகக் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடினார்கள். ஆகையால் வானதி, தான் கூச்சல் போடு வதில் பயனில்லை என்பதை உணர்ந்தாள். ஓடும் பல்லக்கிலிருந்து கீழே குதிப்பதும் இயலாத காரியம். அப்படிக் குதித்தாலும், இந்தப் பயங்கர மனிதர்களுக்கு மத்தியில் தானே குதிக்க வேண்டும்? இவர்கள் எங்கே தான் தன்னைக் கொண்டு போகிறார்கள், எதற்காகக் கொண்டு போகிறார்கள், பார்க்க லாம் என்ற எண்ணமும் இடை இடையே தோன்றியது.

சுமார் அரை நாழிகை நேரம் ஓடிய பிறகு, மரங்களின் மறைவிலிருந்த ஒரு பழைய துர்க்கை கோயிலுக்கு அருகில் வந்து நின்றார்கள். இதற்குள் நன்றாக இருள் சூழ்ந்துவிட்டது. ஒருவன் கோயிலுக்குள் சென்று அங்கே எரிந்து கொண்டிருந்த தீபத்தை எடுத்துக்கொண்டு வந்து வானதி யின் முகத்துக்கு எதிரே காட்டினான். காளாமுகர்களில் ஒருவன், வானதியை உற்றுப் பார்த்து, "பெண்ணே! நாங்கள் கேட் கும் விவரத்தைச் சொல்லிவிடு! உன்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறோம். அல்லது நீ எங்கே போக விரும்புகிறாயோ, அங்கே கொண்டு போய்ப் பத்திரமாய்ச் சேர்த்து விடுகிறோம்" என்றான்.

வானதியின் மனத்தில் இதுவரை தோன் றாத சந்தேகம் உதித்தது. "எனக்கு என்ன விவரம் தெரியும்? என்னை என்ன கேட்கப் போகிறீர்கள்?" என்றாள்.

"பெண்ணே! நீ யாரோ ஒருவரை அந்தரங்கமாகச் சந்திப்பதற்கே இப்படித் தனியாகப் பிரயாணம் தொடங்கினாய்

அல்லவா? அவர் யார்? யாரைச் சந்திப்பதற்காகப் புறப்பட்டாய்?"

வானதியின் சந்தேகம் உறுதிப்பட்டது. ஒரு கண நேரத்தில் அவளுடைய உள்ளத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாயிற்று. ஒரு சிறிய சத்தத்தைக் கேட்டாலும் பயந்து மிரண்டு கொண்டிருந்த பெண் மான், உலகில் எதற்கும் அஞ்சாத பெண் சிங்கமாக மாறியது.

"நான் யாரைச் சந்திக்கப் புறப்பட்டால் உங்களுக்கு என்ன? நீங்கள் யார் அதைப் பற்றிக் கேட்பதற்கு? சொல்ல முடியாது!" என்றாள் வானதி.

காளாமுகன் சிரித்தான்.

"அதை நீ சொல்ல வேண்டாம். எங்களுக்கே தெரியும். இளவரசன் அருள்மொழி வர்மனைச் சந்திப்பதற்குத்தான் நீ புறப்பட்டாய். அவன் எங்கே ஒளிந்திருக்கிறான் என்று சொல்லி விடு. உன்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறோம்" என்றான்.

"நீங்கள் என்ன வேணுமானாலும் செய்து கொள்ளுங்கள். என்னிடமிருந்து எந்த விவரமும் நீங்கள் தெரிந்து கொள்ள முடியாது" என்று வானதி அழுத்தம் திருத்தமாய்க் கூறினாள்.

"உன்னை என்ன வேணுமானாலும் செய்து கொள்ளலாம் என்றா சொல்கிறாய்? நாங்கள் செய்யப் போவது என்னவென்று அறிந்தால் இப்படிச் சொல்லத் துணிய மாட்டாய்!"

"என்ன செய்யப் போகிறீர்கள்? அதையும் சொல்லிப் பார்த்து விடுங்கள்!"

"முதலில் உன் அழகான பூப் போன்ற கரங்களில் ஒன்றை இந்தத் தீவர்த்திப் பிழம்பில் வைத்துக் கொளுத்துவோம். பிறகு இன்னொரு கையையும் கொளுத்துவோம். பின்னர், உன் கரிய கூந்தலில் தீவர்த்தியைக் காட்டி எரிப்போம்..."

"நன்றாகச் செய்து கொள்ளுங்கள். இதோ என் கை! தீவர்த்தியை அருகில் கொண்டு வாருங்கள்!" என்றாள் வானதி.

இராஜ்யத்தில் நடந்து வந்த சூழ்ச்சிகள், சதிகள் எல்லாம் ஓரளவு வானதிக்குத் தெரிந்துதானிருந்தது. இந்தத் துஷ்டர்கள் சதிகாரர்களின் ஆட்களாயிருக்க வேண்டும். இளவரசர் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்கப் பார்க்கிறார்கள். அவருக்குக் கெடுதி செய்யும் நோக்கத்துடனேதான் இருக்க வேண்டும். இளவரசருக்காக, அவருடைய பாதுகாப்புக்காக, தான் இத்தகைய கொடுரங்களை அநுபவிக்கும்படி நேர்ந்தால், அதைக் காட்டிலும் பெரிய பாக்கியம் என்ன இருக்கிறது? – இவ்வாறு எண்ணினாள் கொடும்பாளூர் இளவரசி வானதி. அந்த எண்ணந்தான் அவளுக்கு அத்தகைய மனோ தைரியத்தை அளித்தது.

"பெண்ணே! யோசித்துச் சொல்! வீண் பிடிவாதம் வேண்டாம். பிறகு வருத்தப்படுவாய்!" என்றான் காளாமுகன்.

"என்னை நீங்கள் அணு அணுவாகக் கொளுத்துங்கள்; என் சதையைத் துண்டு துண்டாக வெட்டுங்கள். ஆனாலும் என்னிடமிருந்து ஒரு விவரமும் அறிய மாட்டீர்கள்!" என்றாள்.

"அப்படியானால், எங்களுடைய காரியத்தைப் பார்க்க வேண்டியதுதான்! சீடா! கொண்டு வா அந்த தீவர்த்தியை இங்கே!" என்றான் காளாமுகன்.

அச்சமயம் வானதியின் கவனம் சற்றுத் தூரத்தில் சென்றது. யானைகள், குதிரைகள், பல்லக்குகள், காலாள் வீரர்கள் முதலியவர்கள் அடங்கிய நீண்ட ஊர்வலம் ஒன்று அவர்கள் இருந்த இடத்தை நெருங்கி வந்து கொண்டிருந்ததைப் பார்த்தாள். தெய்வத்தின் அருளால் தனக்கு ஏதோ எதிர்பாராத உதவி வருகிறது என்று எண்ணினாள்.

"ஜாக்கிரதை! அதோ பாருங்கள்!" என்று சுட்டிக்காட்டினாள்.

காளாமுகன் மறுபடியும் சிரித்தான்.

"வருகிறது யார் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"முதன் மந்திரி அநிருத்தர் மாதிரி இருக்கிறது. நான் இப்போது கூச்சல் போட்டால் அவர்களுக்குக் காது கேட்கும். ஜாக்கிரதை! என்னை விட்டு விட்டு ஓடிப் போய் விடுங்கள்! இல்லாவிட்டால்..." என்றாள் வானதி.

"ஆம், பெண்ணே! வருகிறவர் முதன் மந்திரி அன்பில் அநிருத்தர்தான். அவருடைய கட்டளையின் பேரில்தான் உன்னை நாங்கள் பிடித்துக்கொண்டு வந்தோம்" என்றான் காளாமுகன்.

இப்போது வானதியை மறுபடியும் திகில் பற்றிக்கொண்டது. அவளை அறியாமல் பீதி நிறைந்த கூச்சல் ஒன்று அவள் தொண்டையிலிருந்து வந்தது. அதை அடக்கிக் கொள்ளுவதற்காகத் தன்னுடைய வாயைத் தானே பொத்திக் கொள்ள முயன்றாள்.

(தொடரும்)

பொள்ளாச்சியைச் சேர்ந்த முத்துசாமி எனும் இருபத்தி ஐந்து வயது இளைஞருக்குப் பிறவியிலேயே கபால முன்னெலும்புக் குறைபாடு.

அதாவது இந் நோய் உள்ளவர்கள் கழுத்தைத் திருப்பவோ, நிமிர்த்தவோ முடியாது. இருந்தவாக்கில் இருந்தபடியேதான் எதையும் பார்க்க வேண்டும். கழுத்து சிறுத்துக் கைகால்களும் சூம்பிப் போய்விடும்! இது மிக மிக மிக அபூர்வமாக வரும் நோய்.

இது இந்த நோய்தான் என்று தெரியாமல், சுளுக்கு என்று நினைத்து தப்பித்தவறி யாராவது சுளுக்கெடுத்து விட்டால் நிலைமை ரொம்ப மோசமாகி விடும். மரணம் நிகழவும் வாய்ப்பிருக்கிறது!

இத்தகைய நோயை இருபத்தைந்து வருடங்களாக (சுளுக்கே எடுக்க விடாமல்) பாதுகாத்து வந்த முத்துசாமி ஒருமுறை பேருந்தில் பயணித்தபொழுது - டிரைவர் பிரேக் அடித்ததால் இருக்கையின் பின்பக்கக் கம்பியில் அடிபட்டு மிகவும் சீரியஸாகிப் போனார். அரசு ஆஸ்பத்திரி, தனியார் மருத்துவமனைகள் சிலவற்றில் இந்தக் கேஸ் கைவிடப்பட, கோவை பி.எஸ்.ஜி. மருத்துவ மைய நரம்பியல் டாக்டர் இதை

பிழைத்திருந்ததே பெரிய அதிசயம். ஏனென்றால் அந்த நோயும், அடிபட்ட பகுதியும் அவ்வளவு சிக்கலானது. எக்ஸ்ரேயும், எம்.ஆர்.ஐ. ஸ்கேனும் எடுத்துப் பார்க்கையில் இது கபால முன்னெலும்புக் குறைபாடு எனத் தெரிந்தது. தலையும் கழுத்தும் சேரும் பகுதி கபால முன்னெலும்புப் பகுதி; 'no man's land' என்பது இதற்கான மருத்துவச் சொல். இங்கேதான் மூளைத்தண்டின் முக்கியப் பகுதியான முகுளமும் கழுத்துத்



• மூளையையும் முகுளத்தையும் அழுத்திக் கொண்டிருக்கும் எலும்பு

# அபூர்வமாய் வரும் ஆபத்தான

ஒரு சவாலாகவே எடுத்துக் கொண்டார்.

ஏழெட்டு டாக்டர்கள், ஏராள செவிலியர்களுடன் இரண்டு கட்டமாக இருபது மணி நேரம் ஆபரேஷன் செய்து வெற்றி பெற்று விட்டனர். நாம் போன போது முத்துசாமிக்கு ஆபரேஷன் முடிந்து மூன்று வாரங்கள் ஆகியிருந்தது.

இந்த மருத்துவ சாதனை குறித்து டாக்டர் ஸ்ரீனிவாசன் விளக்கினார்.

"இந்தப் பேஷண்ட் இதுவரை

தண்டுவடமும் இணைகின்றன. மூச்சு மையமும், இருதயத் துடிப்பு மையமும், இரத்த அழுத்த மையமும் உள்ளது இங்கேதான். இதே இடத்தில்தான் கூம்புத் தடம் (Pyramidal track) தண்டுவடத்திற்குள் ஊடுருவுகிறது. இதுதான் நம் கைகால் அசைவைக் கட்டுப்படுத்துகிறது. இந்த இடத்தைச் சுற்றிலும் மேலே மண்டையோட்டின் ஒரு பகுதியான



• அறுவைச் சிகிச்சைக்குப் பின் முத்துசாமி



• டாக்டர் ஸ்ரீனிவாசன்

20,000 RPM சக்தி கொண்ட மைக்ரோ ட்ரில்லரைக் கொண்டு, முதல் கழுத்து முன்னெலும்பான அட்லஸ்ஸின் முன் பகுதியையும், இரண்டாவது கழுத்து முன்னெலும்பான அக்ஸிஸின் முன் பகுதியையும், 'டென்ஸ்' எனக் கூறப்படும் முன்னெலும்பையும் பொடியாக்கி வெளியிலெடுத்தோம். முகுளத்தையும் தண்டுவடத்தையும் அழுத்தி நின்ற சதையையும் அகற்றினோம். இது ஒரு கட்டம்.

"அடுத்தகட்டமாக நோயாளியைக் குப்புறப்படுக்க வைத்து கழுத்தின் பின்புற மண்டையோட்டின் ஒரு பகுதியான பிடறி எலும்புக்கும், அட்லஸ், அக்ஸிஸ் ஆகிய பின்புற முன்னெலும்புக்கும், இடுப்புப் பகுதி எலும்பை எடுத்து வைத்து 'ப' வடிவத்தில் அமைந்த ஸ்டீல் பிளேட்டை இணைத்து வைத்துள்ளோம். இருபது மணி நேர ஆபரேஷனில் ஒரு நிமிடம் தவறு நிகழ்ந்தாலும் மரணம்தான். அல்லது கை கால் இயங்காமல் செயலற்று விடும். பேச்சு, மூச்சு எல்லாமே பாதிக்கும்!"

பிடரி எலும்பும் (occipital bone) கீழே முதல் கழுத்து முன்னெலும்பு 'அட்லஸ்'ஸும் (atlas), இரண்டாவது கழுத்து முன்னெலும்பு அக்ஸிஸும் (Axis) உள்ளன. இந்த இடத்தில் சாதாரணமாக அடிபட்டாலோ, அறுவை சிகிச்சை செய்யும் போது சிறு தவறு நேர்ந்தாலோ முகுளத்தில் பாதிப்பு ஏற்பட்டு, மூச்சு மையம் அழுத்தம் பெற்று உடனடி மரணம்

# கழுத்து நோய்!





சம்பவித்து விடும்.

"இந்த பேஷண்டுக்கு கழுத்தில் உள்ள இரண்டாவது முன்னெலும்பின் ஒரு பகுதியான டென்ஸ் (Dens) மண்டையோட்டிற்குள் புகுந்து முகுளத்தையும், கழுத்துத் தண்டுவடத்தையும் அழுத்திக் கொண்டிருந்தது. இதற்கு அறுவை சிகிச்சையைத் தவிர வேறு வழி கிடையாது என்ற நிலை. வாய்மூலமாக

சரி நோயாளி இந்த ஆபரேஷனுக்குப் பின் சகமனிதர்களைப் போல் இயங்க முடியுமா? கழுத்தைத் திருப்ப முடியுமா? என்றால் "அதுதான் இல்லை. அதற்கு இன்னும் உலக அளவிலே கூட மருத்துவ முறை கண்டுபிடிக்கப்படவில்லை" என்கிறார்கள் டாக்டர்கள்!

சந்திப்பு, தொகுப்பு படம் :

**கேயெஸ்வி**

## வாசகர்களுக்கான 'கல்கி கலெக்ஷன்' விமர்சனப் போட்டியில் ரூ.5,000 பரிசு பெறும் விமர்சனக் கட்டுரைகள்

# 'புதிய விநாயக புராணம்!'

கையைப் பிடித்து எதிரில் உட்கார்த்தி வைக்கிறார். கதை ஆரம்பிக்கிறது. சின்னக் குழந்தைகளுக்கு பாட்டி சொல்லும் புராணக் கதை போலத் தொடக்கம். ஆர்வம் கிண்டப்பட்டுவிட்டது. “தும்பிக்கையால் மூச்சுக் காற்று”, “ஜடா மகுடத்துக்கு மேலே போன கோபம், குளத்தங்கரை மரத்தடி”- சொற்றொடர்களின் ஜாலம்-மந்திரக் கயிறால் கட்டிப் போடுகிறார். கதை கேட்கும் சுவாரசியத்தில், அது உண்மையாக நடந்த சம்பவமா என்ற சந்தேகம் கூட வரவில்லை. கல்கி தாமே குட்டை உடைக்கிறார். இது போன்ற 'புதிய படலம்' விநாயக புராணத்தில் சேர்க்கப்பட்டு அதை வருங்கால சந்ததிகள் படித்து மகிழும்படி நேரலாம் என்று! அட இதுவும் இடைச் செருகலா? என்று ஆச்சரியப்பட்டு, யதார்த்தத்திற்கு இறங்கி வருமுன், கல்கியின் நையாண்டி புராணத்தில் நடக்கும் 'இடைச் செருகல்', முன்பின் செருகல்' பற்றி - முகத்தில் பூத்த புன்சிரிப்பு, வெடிச்சிரிப்பாக விரிகிறதே. இது அல்லவோ கல்கியின் “மிடாஸ் டச்.”

சட்டென்று மூட் மாற்றம். நடை மாறுகிறது.

திராவிட கழகத்தார் செய்த மண்பிள்ளையார் உடைப்பு-ஒரு ஸென்ஸிடிவ் விஷயத்தை இவ்வளவு நாசூக்காக விவரிக்க முடியுமா? நாஸ்திகத்தால் ஆஸ்திக உணர்ச்சி மேலும் பெருகியது, விநாயகர் மேல் பக்திநெறி, காணாபத்தியம் என்ற சமயமே புத்துயிர் பெற்றது என்று விவரமாக எழுதி, நடந்த கசப்பான சம்பவங்களை மூடி போட்டு மறைத்துவிடும் சாதுர்யம்- எந்த ஒரு நிகழ்ச்சியையும் அதன் நல்ல பக்கத்தை வெளிச்சம் போட்டுக் காட்டும் பெருந்தன்மை. இதே போல ஆஸ்திகர்கள் மகிழ்ச்சி கொள்ள முடியாதபடி நடந்த சில அநாகரிக சம்பவங்கள் குறித்து அவர் தெரிவிக்கும் வருத்தம். அன்பே சிவம் என்ற கருத்தை வலியுறுத்தும் பரந்த மனப்பான்மை அன்பு நெறிக்கு மாறான செயல் எதுவுமே உண்மையான ஆஸ்திகம் ஆக முடியாது, என்று ஆணித்தரமாக அடித்துச் சொல்கிறார். நாஸ்திகத்தின் மேல் உள்ள வெறுப்பு நாஸ்திகர்கள் மீது வெறுப்பாக மாறக் கூடாது- செயலை நிந்திக்கலாம், செய்பவரை நிந்திக்கக் கூடாது. எல்லா மதங்களுக்கும் இந்த நியதி பொருந்தும்.

விநாயகப் பெருமானே தம் பக்த கோடிகளிடம் இத்தகைய நீசத்தனமான செயலை ஒரு நாளும் எதிர்பார்க்க மாட்டார் என்று எடுத்துக் கூறி ஆஸ்திகர்கள் மனசை மாற்றுகிறார்.

“அன்பே கடவுள்” என்று அவர் முடிக்கும்போது-அதில் உள்ள உண்மை புரிகிறது- ஒரு கடுமையான வார்த்தைகூட இல்லாமல், நகைச்சுவை முலாம் பூசி, எதிராளியை மடக்கும் வித்தை - கல்கியின் தனி முத்திரை.

இந்த 'கலியுக வியாசர்' கூறுவதை வாதாபி கணபதியும் ஏற்றுக் கொண்டதாகப் புன்னகை புரிகிறார்.

### கடவுளே! எங்கள் சங்கீதம்...

கல்கி தொடாத துறைகளே இல்லை - அரசியல், சினிமா, பயணக் கட்டுரை, சரித்திரம் - இதில் அவருக்கு சங்கீதக் கலையில் இருந்த ஆழ்ந்த ஈடுபாடு தெரிந்ததே. சங்கீதத்தை தேவதையாகப் பார்த்த பக்தி, நாதப் பிரம்மம் என்ற அடைமொழி கூறிய 'பரவசம்' சிறந்த இசை விமர்சகராக இருந்த அவருக்கு சங்கீத விஷய ஞானமும் அபாரம். அவர் அனுபவித்து எழுதிய பல இசை விமர்சனங்கள், கட்டுரைகள் இந்த மேலான சங்கீதக் கலை அழிந்து விடுமோ என்ற ஆதங்கத்தில் கர்நாடக சங்கீதத்திற்குப் போட்டியாக முளைத்த 'லாரலப்பா' சங்கீதத்தைத் தாக்கி அவர் எழுதிய தலையங்கம் - இதன் சாரத்தை வாசகர்களின் தாக்குதல் கடிதங்களின் காரத்தின் மூலம் ஊகிக்க முடிகிறது.

வாசக நேயர்கள் 'வெளுத்து வாங்கிய' கடிதங்களை பெருந் தன்மையோடு பிரசுரம்

செய்து, அதற்குத் தமது விளக்கங்களைக் கூறியிருப்பது வாசகர்களின் எழுதும் ஆற்றலை தாம் வெளிக் கொண்டு வந்திருக்கிறோம் என்று மகிழ்ச்சி அடைவது, என்ன ஒரு பரந்த நோக்கு!

"பிற்போக்கு கும்பலுக்கு வக்காலத்து" - "எருமைக் குரலில் சப்த ஸ்வரங்களில் 'ஸ'வுக்கும் 'க'வுக்கும் வித்தியாசமில்லாது உறுமும் வித்வானின் கூச்சல்" என்றெல்லாம் நேயர்கள் சாடினாலும் கல்கியின் கருத்து மேலும் உறுதிப்படுகிறது.

கர்நாடக சங்கீதத்தின் எதிர்காலம் பற்றிய பயம் - சாதாரண மக்களை, இளம் பிள்ளைகளை தன் பால் ஈர்க்கக்கூடிய சக்தி வாய்ந்த 'டப்பா' சங்கீதம் - பாமர மக்கள் கர்நாடக சங்கீதத்தை அனுபவிப்பது மிகவும் கஷ்டம் - உண்மையை எதிர் நோக்கும் கல்கியின் யதார்த்தம்.

மனிதர்களுக்கு ஆன்மா போல நாட்டுக்கும் ஆன்மா உண்டு. அந்த ஆன்மா அந்த நாட்டிற்கே உரிய புராதனக் கலைதான். டப்பா சங்கீதத்தை ஆன்மாவுக்கு வந்த நோயாக நினைக்கிறார். கலைஞானத்தை இழந்த நாட்டிற்கு கதி மோட்சமே கிடையாது. இது புரிந்த கிரேக்க நாட்டு மகான், எதிரிகள், தோல்வியினால் சின்னாபின்னமாகும் நிலையில் கடவுளிடம் வேண்டியது - சாம்ராஜ்யம், ஐஸ்வர்யம் எது போனாலும் தங்கள் நாட்டின் புராதன கலைகள், கவிதை, காவியம், சிற்பம், சங்கீதம் போன்ற இணையில்லாச் செல்வங்களை - அழியாதபடி காப்பாற்றிக் கொடுக்கும்படி. ஆண்டவன் அருள்புரிந்தான்.

குழப்பம் இல்லாத கருத்தை எளிமையாகவும் தெளிவாகவும் எடுத்துச் சொல்லும் திறன். அது என்னை அசத்திவிட்டது.

எந்த ஒரு எழுத்தாளரையும் அவர் பின்னணியை மனத்தில் வைத்தே படிக்க வேண்டும். ஆனால் கல்கி 1951ல் எழுதியது இன்றும் பொருத்தமாக இருக்கிறதே! காளான் போல முளைத்து, விஷச் செடியாக டப்பா சங்கீதம் பரவி நம் கலை மரங்களை வேரோடு சாய்த்து விடும் அபாயம் தொடர்கிறதே. ஆரம்ப கால நீர்க் கசிவாக இருந்தது தற்போது தலைக்கு மேல் போய்விட்ட வெள்ளமாகிவிட்டதே! அதில் மூங்கி மூழ்க வேண்டியதுதானா? இன்றைய 'மத்தியப் பிரதேச' குலுக்கல்களையும் ஆபாச



அசைவுப் பாட்டுக்களையும் பார்த்தால் கல்கி என்ன சொல்லியிருப்பார் என்று நினைக்கத் தோன்றுகிறது. தற்போதும் நம்பிக்கை நட்சத்திரமாக நிறைய இளம் கலைஞர்கள் உருவாகி வருவதைப் பார்த்து சாந்தி அடையலாம்.

ரசனை என்பது சொந்த விஷயம் என்று தர்க்கம் செய்தாலும்- நல்ல ரசனையை வளர்ப்பது சமுதாயக் கடமையும் கூட.

நானே ஓரளவு சினிமாபாட்டு ரசிகன்தான். ஆறு வருடம் கற்ற கர்நாடக இசையை மூட்டை கட்டி பரணில் போட்டு விட்டேனே என்று, கல்கி எழுதியதை படித்தபின் நான் வருத்தப்படுகிறேன். இப்படிப்பட்ட மன மாற்றங்களை ஏற்படுத்தக் கூடியது அவர் எழுத்தின் வலிமை.

சமுதாயப் பொறுப்பு தெரிக்கும் இந்தக் கட்டுரையே என்னைப் பொறுத்த வரை சிறந்தது.

**சி.எஸ். குமார்**

# பயங்கள்

“நமக்கு இருக்கிறது ரெண்டு வழி சுந்தரம். ஒண்ணு மாமுண்டியைப் பார்த்து ரெண்டு மாசம் தவணை கேட்கறது. இல்லை வீட்டைக் காலி செய்துடறது.”

“வீட்டை எப்படிப்பா காலி செய்ய முடியும்? ஒரு சின்ன அசைவு கூட பாட்டியை முடிச்சுக் கட்டிடும்னு டாக்டர் சொல்லியிருக்கிறார். போற உசிர் தானா போகட்டும். நாமளாக் கொல்ல வேண்டாம்.”

“அப்போ, மாமுண்டியைப் பார்த்து தவணை கேட்கலாமா?”

சட்டென்று உஷ்ணம் ஏறியது சுந்தரத்துக்கு. “என்னப்பா நீங்க பேசறது? மாமுண்டி யாரு? வீட்டுக்காரனா, இல்லே மத்யஸ்தனா? ஒரு மூணாந்தர ரௌடி. வீட்டுக்காரன் பேச்சைக் கேட்டு நிலைமை புரியாம பதினைஞ்சு நாள்ளே வீட்டைக் காலி செய்யச் சொல்றான். அவன்கிட்ட போய் நாம நிக்கறதா? நடக்கிறபடி நடக்கட்டும். மாசக் கடைசி வரை பார்ப்போம். என்ன தான் நடந்திரும்? தலையைச் சீவிடுவானா இந்தப் பொறுக்கி?”

ராகவனுக்குப் பையனின் கோபம் புரிந்தது. நியாயம் தங்கள் பக்கம் இருப்பதும் தெரிந்தது. தற்போது குடியிருக்கிற வீட்டுக்கு வந்து பத்து வருடம் ஆகிறது. கேட்டபோது முகஞ் சுளிக்காமல் கேட்ட வாடகை தந்து, வீட்டுக்காரனோடு இதுவரை எந்த விரிசலும் இல்லாமல் காலம் போய் விட்டது. தற்போது கட்டுகிற புது வீடும் மூன்று மாதத்தில் முடிந்து விடும். திடீரென்று வீட்டுச் சொந்தக்காரன் பெண்ணுக்குத் திருமணம் என்பதால் வீட்டை விலை பேசி அட்வான்ஸ் வாங்கி விட்டான். வீட்டைக் காலி செய்யச் சொல்கிறான். அதுவும் ஒரு மாத கெடுவுக்குள். அதற்குக் காரணம் கல்யாணம் மட்டுமில்லை. வீட்டை வாங்குகிறவனுக்கும் சுந்தரத்தின் பாட்டி 'அப்போதோ இப்போதோ' என்றிருப்பது தெரியும். ஒரு பெரிய காரியம் முடிந்தவுடன் வீட்டை வாங்க அவனுக்குப் பிரியமில்லை, எங்காவது போய் கிழவி சாகட்டும் என்பது அவன் முடிவு. அவன் வரை அது நியாயம். வீட்டுக்காரனுக்கு திருமணத்துக்குப் பணம் வேண்டும். அது அவன் பிரச்னை. கிழவி சாகிற நிலையில் யாரும் சுந்தரத்துக்கு வீடு தராதது சுந்தரத்தின் துக்கம். நடுவில் வீட்டுச் சொந்தக்காரன், மாமுண்டி என்கிற ரௌடியை விட்டு மிரட்டி வீட்டைக் காலி செய்ய நினைப்பதால் விஷயம் சற்று விபரீதம் ஆகி இருக்கிறது.

“ஏங்க, மாமுண்டி ஏதாவது தொந்தரவு செய்வானோ? எடுத்ததும் வெட்டிப் போட்டுடுவான்னு சொல்றாங்க. நடுரோட்டிலே ஆள் விட்டு நம்மை அடிச்சாக் கூட நமக்குத்தானே குறைச்சல்” என்று மனைவி ஆரம்பித்தாள்.

“அப்படியெல்லாம் செய்ய மாட்டாங்கம்மா. இன்னும் ஊரு அவ்வளவு



மோசமாகப் போகலே. குரைக்கிற நாய் கடிக்காது. எதிர்த்து நின்னா- சத்தம் போட்டா பத்தடி தள்ளி நின்னுதான் குரைக்கும். என்ன, நாம பயப்படக் கூடாது."

"ஏதாவது ஒரு வீடு கெடைச்சாக் கூடப் போயிடலாம்." – ரோகிணி பேசிய போது சுந்தரம் பதில் பேசவில்லை.

இதுதான் பெண்கள் குணம். புருஷனுக்கோ தன்னைச் சம்பந்தப்பட்டவர்களுக்கோ ஏதாவது சின்னப் பிரச்னை ஏற்பாடுமாகில் தொந்தரவில் இருந்து விலகி நிற்க வேண்டும் என்று சொல்லவே பழக்கப்பட்ட ஜந்துக்கள்.

சுந்தரம் தீர்மானித்தான். வீட்டை காலி செய்யப் போவதில்லை. பதினைந்து நாள் தவணை தந்து எதிராளிகள் எப்படி உருவாவார்கள் என்று கொஞ்சம் திடமாக ஆனால் சற்று திகிலாக எதிர்பார்த்தான்.

**ப**தினைந்து நாள் கழிந்தது. சரியாகப் பதினாறாவது நாள்...

காலையில் அவர்கள் வந்தார்கள். சுந்தரத்தின் வீட்டுக்கு வரவில்லை. வீட்டுக்கு எதிரில் இருந்த மரத்தடியில் எதிர் வீட்டு காம்பவுண்டு ஓரத்தில் வந்து உட்கார்ந்தார்கள். ஒரு சின்ன அட்டையைப் பரப்பி உட்கார்ந்து, சிறு சிறு கல் வைத்து ஆரம்பித்தார்கள், வெறும் ஆடு புலி ஆட்டம்.

"ஏங்க இங்க வந்து பாருங்க. யாருங்க அவங்க, புதுசா எதிர்லே உட்கார்ந்து என்ன செய்யறாங்க..."

"விளையாடறாங்க. ஆடு புலி ஆட்டம்."

"மாமுண்டியோட ஆட்கள்தான் வம்புக்கு வர்றாங்க."

"நாம ஏதும் கேட்க வேண்டாம் ரோகிணி. அவங்க, மேலே என்ன செய்யறாங்க, பார்ப்போம்."

"மாமா, பயம்மா இருக்கு மாமா."

"பயப்படாதம்மா.

## ஸ்ரீகுரு



என்னதான் நடக்குது பார்ப்போம். நான் இருக்கேன்லே."

சுந்தரம் ஆபீஸ் புறப்படுமுன் அப்பாவிடம் ஜாக்கிரதை சொன்னான். "ஏதாவது விஷயம்னா எனக்கு போன் பண்ணுங்கப்பா. கமிஷனர் ஆபீஸ்லே எனக்குத் தெரிஞ்சவன் இருக்கான். அவனைக் கூட்டிப் போய் ஒரு புகார் கொடுத்துட்டு வந்திடறேன். நீங்க வீட்டை விட்டுத் தூரமா எங்கேயும் போக வேண்டாம்."

"சரிப்பா. நீ பத்திரமா போ. யார்கிட்டேயும் ஏதும் பேச்சு வச்சிக்காதே. சட்டுன்னு 'போலீஸ் அது இதுன்னு பிரச்னையைப் பெரிசாக்கிடாதே!"

சுந்தரம் ஸ்கூட்டரை உதைத்துப் புறப்பட்டான். சொல்லி வைத்த மாதிரி வந்திருந்த நால்வரில் ஒருவன் தன்னுடைய வண்டியைக் கிளப்பி சுந்தரம் போன திசையில் விருட்டென்று போக ரோகிணிக்கு திகிரென்றது.

"மாமா, பாருங்க மாமா! பின்னாடியே போறான். ஏதாவது பண்ணிடுவானோ? மோதித் தள்ளி ஏதாவது செய்திடுவானோ?"

ராகவனுக்கும் அந்தச் சந்தேகம் வந்தது. ஆனால் மருமகளிடம் அதைச் சொல்ல முடியாது.

"இதெல்லாம் ஒரு பால்லா. மிரட்டல் முறை. நீ பயப்படறே இல்லை. அதான் அவனுக்கு வேண்டியது. இந்த மாதிரி நெறைய செய்வானுங்க."

"என்னமோ மாமா எனக்கு பயம்மா இருக்கு. இனி இவரு வர்ற வரை எனக்கு எந்த வேலையும் ஓடாது."

ராகவன் யோசனையுடன வீட்டுக்குள் போன போது, பேரனும் பேத்தியும் ஜன்னல் வழியாக புது ஆட்களைப் பார்த்து தங்களுக்குத் தெரிந்த முறையில் விமர்சித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு மணிக்கு சுந்தரம், பக்கத்து வீட்டு போனில் ராகவனைக் கூப்பிட்ட போது என்னவோ ஏதோ என்று பயமேற்பட்டது ரோகிணிக்கு. ராகவன் சாதாரணமாகத் திரும்பி வர கொஞ்சம் சமாதானமாக இருந்தது.

"என்ன மாமா?"

"ஒன்றுமில்லையம்மா. சாதாரணமா கூப்பிட்டான். உங்களுக்கு ஏதாவது பிரச்னையான்னு கேட்டான். ஒண்ணுமில்லைன்னேன். அதான்."

"ஒருத்தன் அவரு பின்னாடியே போனானே..."

"அது சும்மா. அவன் வேற பக்கம் போயிட்டானாம். இதுதான் குண்டு மிரட்டல்ங்கறது!"

"இவரு போற வர்ற வழியைக் கண்காணிக்கறானோ. காரணம் இல்லாம எதுக்குப் பின்னாடி போவான்?"

ரோகிணியைச் சமாதானப்படுத்துவது ராகவனுக்குப் பெரிய பாடாக இருந்தது.

மூன்று மணிக்கு மேல் சிறு தொந்தரவு ஆரம்பித்தது. ஆடு புலியாட்டம், ஆறு பேர் சேர பெரிய சப்தங்களுடன் உற்சாகமாக நடக்க ஆரம்பித்தது. ஒருத்தன் குடித்து விட்டு கெட்ட வார்த்தைகளை சப்தமாகப் பேசிக் கொண்டிருந்தான். ஒரு நாலு மணி வாக்கில் தாட்டியான ஒரு நடு வயதுப் பெண் அங்கு வந்து சேர அவர்கள் கும்மாளம் அதிகமானது.

"அட நம்ம தனம். வா தனம், ஒக்காரு. தொழிலுக்குப் போவல்லியா?"

"அட நேரம் கெடக்குய்யா. ரொம்ப அக்கறையா கேக்கறியே. என்ன விஷயம்?"

"அட, சும்மாக் கேட்டேன். குந்து, ஒரு கை போடலாமா? ஏண்டா தனத்தை நாம்ம சேத்துக்கலாமா?"

"தனத்துக்கு என்ன! அப்புறம் தனத்தைப் பற்றி... அவளுக்கும் அவனுக்கும் ஏற்பட்ட ஒரு அனுபவத்தைப் பற்றி ஒருத்தன் விஸ்தாரமாக சப்தமாகச் சொல்லச் சொல்ல மற்றவர்களும் அவளும் கிளர்ச்சியுடன் அதில் கலந்து கொண்டு மிக அசிங்கமாக நடந்து கொண்டார்கள். தனம் வெட்கமில்லாமல் தொட்டு விளையாட, தெருவில் இருந்த மற்ற வீட்டுக்காரர்கள் வினோதமாகப் பார்த்து விட்டுப் போனார்கள். கொஞ்ச நேரத்தில் எதனாலோ தனத்துக்கும்



"எதிர்க்கட்சித் தலைவி பாடுற பாட்டைவிட நம்ம கட்சித் தலைவர் பாடுற பாட்டுத்தான் போணியாகும்னு எப்படிச் சொல்றே?"

"நம்ம தலைவர் பாடுற பாட்டுக்கு இசை அமைப்பது ஏ.ஆர். ரஹ்மான் ஆச்சே!"

— வந்தவாசி பா. ஜெயக்குமார்

ஒருத்தனுக்கும் சண்டை வர நடுரோட்டில் யாரைப் பற்றியும் கவலைப்படாமல் இரு வரும் ஆபாசமாகப் பேசவும் அலங்கோல மான முறையில் நடக்கவும் ஆரம்பித்த போது ராகவனால் சும்மா இருக்க முடிய வில்லை. கூசிப் போயிருந்த ரோகிணி தடுத் தும் கேட்காமல் வெளியே வந்தார்.

"ஏம்பா உங்களுக்கு மானம் கெடையாது? நடுரோட்லே இவ்வளவு அசிங்கமா நடந்துக் கிறீங்களே. நாலு பேர் குடியிருக்கிற எடமா தெரியலை உங்களுக்கு?"

சண்டை போட்டவன் ராகவனை ஒரு புழு மாதிரி பார்த்துச் சிரித்தான்.

"பாருங்க பெரிசு. உங்களை நாங்க ஏதா வது திட்டினோமா? எங்களுக்குள்ளே ஒரு பிரச்னை. நான் அவளை வச்சிருக்கிறேன். நேத்து ராத்திரி வேறே ஒருத்தன் கூடப் போயிட்டா. அதுதான் பிரச்னை. நீ பஞ் சாயத்து பண்றயா?"

"உங்க பிரச்னையை உங்க வீட்ல வச்சிக் கங்கப்பா. இங்கே ஏன் வர்றீங்க?"

"தோ பாரு பெரிசு, உனக்கு வீடு இருக்கு. பங்களா இருக்கு. உனக்குப் பிரச்னை வந்தா நீ எங்கனா வச்சிக்குவே. நாங்க பிளாட் பாரம். எங்க விஷயம் இப்படித்தான். வீட் டுக் கதவைச் சாத்திக்கினு உள்ளே இரு போ. எங்களைப் பார்க்காதே. உனக்கு என் விவ காரம் வேண்டாம். எனக்கு வூடு இல்லே. உன் வீட்லே வச்சிக்கலாமா? என்ன டீ தே... மு..."

பெரியவருக்கு இவர்கள் அலட்சியமும் ஏற்பாடும் புரிந்தது. இவர்களை ஒன்றும் செய்ய முடியாது என்று தெரிந்து, அடி பட்ட அவமானத்துடன் வீட்டுக்குத் திரும் பினார்.

"பாருங்க மாமா, அகல்யா அந்தக் கெட்ட வார்த்தையைச் சொல்லி அதுக்கு அர்த்தம் கேட்கறா. இதுவே ஸ்கூல்னா டிஸ்மிஸ் பண்ணியிருப்பாங்க. எல்லாம் நம்ம தலைவிதி. இவன்களைக் கேட்க ஆள் இல்லையா மாமா?"

"பொறும்மா. சுந்தரம் வரட்டும். ஒரு முடிவு செய்யலாம்."

ஆவலோடு ஜன்னல் வழியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த குழந்தைகளை கூடத்துக்கு விரட்டினாள் ரோகிணி. வெளியே வண்டை வண்டையான பேச்சு கள் காதைத் துளைக்க, கூசிப் போனாள் ரோகிணி.

சரியாக ஆறு மணிக்கு சுந்தரம் வந்து விட நடந்ததைச் சொன்னார் ராகவன்.

"என்ன செய்யலாம்பா?"



"நம்ம தலைவர் நாற்பது தொகுதிகளையும் கைப்பற்றுவோம்னு சொல்றாரே, ஜெயிச்சுடு வாரா?"

"ஊஹூம், அவர் நாற்பது தொகுதிலயும் வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றுவதைச் சொல்றாரு!"

— வந்தவாசி பா. ஜெயக்குமார்

"நான் போய் அந்த மாமுண்டியைப் பார்த்து நறுக்குன்னு நாலு வார்த்தை கேட்கறேன். கொன்னுபுடுவானா?"

"ஐயோ வேண்டாம் மாமா. நீங்க யாரும் போக வேண்டாம். ஏதாவது வீடு பார்க்க ஏற்பாடு பண்ணுங்க."

"அவரு போகட்டும் ரோகிணி. அவரு பேசட்டும். விடு, என்ன நடக்கும்னு பார்த்து டலாம்."

**மா**முண்டியின் எதிரில் சுந்தரம் உட்கார்ந்திருந்தார். ஒரு பஞ்சாயத்து முடிந்து மற்றொரு பஞ்சாயத்து நடந்து கொண்டி ருந்தது. இரண்டும் முடிந்தால் இவர் முறை வரும். மாமுண்டி பஞ்சாயத்து செய்து கொண்டே இவரைக் கவனித்துக் கொண் டிருப்பது தெரிந்தது. வந்த மனிதரை உட்கார வைத்துக் காத்திருக்க வைப்பது ஒரு மாதிரியான அணுகுமுறை. வந்திருக்கிற மனிதரின் மன ஓட்டம் தெரியும். அவசரம் தெரியும், கோபம் புரிந்து கொள்ளலாம். அதற்கேற்ப நடைமுறையை மாற்றிக் கொள்ளலாம்.

இரண்டாவது பஞ்சாயத்தில் தீர்ப்பைச் சொல்லிக் கொண்டிருந்தான். இரண்டும் சரியான தீர்ப்புகள் என்றே ராகவனுக்குப் பட்டது.

"அப்புறம் வாத்தியாரய்யா. என்ன விஷ யமா பார்க்க வந்தீங்க? பரவாயில்லை. உட்கார்ந்தே சொல்லுங்க. பெரியவங்க நீங்க..." ரொம்ப சாதாரணமாக ஆரம்பித் தான் மாமுண்டி.

"எல்லாம் உங்களுக்கே தெரியும். நான் சொல்லணுமா?"

"பரவாயில்லே. நீங்களே சொல்லுங்க. அதான் நியாயம்."

"ஒரு பதினைஞ்சு நாள் முன்ன உங்க ஆள் வந்து நீங்க பார்க்கப் பிரியப்படறதா சொன்னான். நாங்க வர மாட்டோம்னு

சொன்னோம். அப்படியில்லைன்னா இருக்கற வீட்டை பதினைந்து நாள்ளே காலி செய்யணும்னு நீங்க சொன்னதாச் சொன்னான். முடியாதுன்னு மறுத்தோம். இப்ப உங்க ஆளுங்க எங்க வீட்டு முன்னாடி ஆபாசமா நடந்துக்கறாங்க. அதான் நியாயம் கேட்க வந்தேன். நீங்க கூப்பிட்டா நாங்க வரணுமா? நீங்க சொன்னா நாங்க வீட்டைக் காலி செய்யணுமா? உங்க அடாவடியைப் பார்த்துத் தெருவே கொதிச்சிக் கெடக்கு."

"எங்க அடாவடியாலே தெருவே கொதிச்சுக் கெடக்கு, இல்லையா வாத்தியாரய்யா."

"ஆமாம்."

"அப்புறம் நீங்க மாத்திரம் வந்திருக்கீங்க. தெருவு பூரா வரல்லியே... இதனாலே தெருவுலே இருக்கற மத்தவங்களுக்கு எங்களாலே தொல்லை இல்லைன்னு நான் நம்பலாமில்லே."




**"தலைவருக்கு திடீர்னு நாட்டுப்பற்று அதிகமாயிடிச்சு போலிருக்கு."**

**"என்னாச்சு?"**

**"பாகிஸ்தானின் உளவு அமைப்பான ISI முத்திரை உள்ள எல்லா பொருட்களையும் நாம் புறக்கணிக்க வேண்டும்னு முழங்கியிருக்காரே!"**

**– சீர்காழி வி. ரேவதி**

"எனக்குத் தொந்தரவு ஜாஸ்தி. நான் வந்தேன்."

"ஏன் போலீசுக்குப் போறது. போக மாட்டீங்க சாமி நீங்க. பத்துப் பேர் சேர்ந்து போலீசுக்குப் போக மாட்டீங்க. ஏன்? பயம். பத்துப் பேர் சேர்ந்து ஒரு ரவுடியை எதிர்த்துப் பேச மாட்டீங்க. ஏன்? பயம். வேலை செய்ய சோம்பேறியாயிருக்கிற போலீசை உசுப்பி வேலை வாங்க மாட்டீங்க. காரணம் பயம். ஒற்றுமையா சேர்ந்து ஒரு கெட்ட காரியத்தைத் தட்டிக் கேட்கவும் உங்களாலே முடியாது. அதுக்கும் காரணம் பயம். அது தான் ஸார் உங்க பலவீனம். எங்களுக்குப் பலம். பத்து கெட்டவன் ஒன்றுசேர்ந்து ஒரு கெட்ட காரியம் பண்ண முடியுது. பத்து நல்லவன் சேர்ந்து அதைத் தடுத்து நிறுத்தத் துப்பில்லை."

மாமுண்டி ஆக்ரோஷமாகப் பேச விக்கித்து நின்றார் ராகவன். சொல்வது நிஜம். ஏன் பத்துப் பேர் கூடவில்லை? அல்லது தான் ஏன் பத்துப் பேரைக் கூட்டவில்லை? போலீசுக்குப் போனால் என்ன? நியாயமா போலீசுக்குப் போக வேண்டியதுதானே? ஏன் போகவில்லை?

"உங்க தெருவில் ஒரு எட்டு வருஷம் முன்னே, என் வீட்டுக்குப் பக்கத்தில் ஒருத்தன் நாலு பொம்பிளையைக் கொண்டு வந்து அசிங்கம் பண்ணினான். நான் ஒருத்தன் எதிர்த்துக் கேட்டேன். முதலமைச்சர், ஐஜி., எஸ்பிக்கு புகார் எழுதி வச்சிட்டு தெரு பூரா கையெழுத்துக் கேட்டேன். ஒருத்தர் போடலை. நீங்க உட்பட. உண்டா இல்லையா ஐயா?"

"அதுக்குப் பழிவாங்கறியா மாமுண்டி?"

"ச்சிச்சி. வாயைக் கழுவுங்கய்யா. நான் வீரன். கேவலம் ஒரு கெட்ட சமாசாரம் நடக்குன்னு பத்துப் பேர் கையெழுத்துப் போட்டுப் புகார் தரக் கூடப் பயப்படற முதுகெலும்பில்லாத ஆளுங்ககிட்டயா நான் என் பலத்தைக் காண்பிக்கணும். அன்னிக்கு ஒரு பெரிய படையை எதுத்து நின்னு தனியா போராடினேன். ஒரு கெட்ட போலீஸ்காரன் வழிகாட்டிக் கொடுத்தான். 'இந்தத் தெரு ஜனங்களுக்காக நீ ஏன் வக்காலத்து வாங்கறே. ஒரு பய உன் பின்னாலே வர மாட்டான். நீ யாரை எதிர்த்து நிக்கிறியோ அவன் பின்னாடி போய்ப் பார். எவ்வளவு அசிங்கம்னாலும் பொறுத்துக்குவான், ஒன்றுசேர மாட்டான்...' என்றான். அவன் என் தைரியத்தைப் பாராட்டினான். நான் மேலே வருவேன்னான். அவன் சொன்னதைச் செய்தேன். நான் இன்னிக்குப் பெரிய ஆள். அன்னிக்கு ஒரு இருபது பேர் என் புகார்லே கையெழுத்துப் போட்டிருந்தா ஒரு சமூக விரோதி ஒழிஞ்சிருப்பான். மாமுண்டி மாதிரி ஒரு சமூக விரோதி புதுசா, உருவாகியிருக்க மாட்டான்."

ராகவன் ரத்தம் வெளிறி நின்றார். "என்னை மன்னிச்சுக்கோ மாமுண்டி. என் தப்பு எனக்குப் புரிஞ்சு போச்சு."

"பரவாயில்லே வாத்தியாரய்யா. எனக்கு உங்க பேர்ல வருத்தமில்லே. இப்பவாவது ஒரு பெரிய ரவுடியை அவன் வீட்லே வந்து பார்த்து நீ அநியாயம் செய்றேன்னு கேட்டீங்களே, அதுவே சந்தோஷம். இதுக்காக நான் உங்களைப் பாராட்டறேன்."

வேதம் சாத்தான்களின் வாயில் இருந்து வருவதால் எச்சில்பட்டு விடுவதில்லை தான்! ●




DP Foam வழங்கும் PUF மெத்தைகள், களைத்து வரும் முதுகுகளுக்கு மிருதுவான மருந்து. நாளெல்லாம் உழைத்த சோர்வு தீர உறங்க சுகமான படுக்கைகள். DP Foam மெத்தைகள் மற்ற Foam மெத்தைகளைவிட அடர்த்தியாக இருப்பதால் முதுகிற்கு இதமான பாதுகாப்பு தருகின்றன. நீண்டகாலம் உழைக்கின்றன. பருத்தி மெத்தைகளில் ஆவது போல் தூசி படாது. கழுவலாம். சுலபமாக மடித்தும் வைக்கலாம்.

குடும்பத்தில் அனைவரும் நிம்மதியாக தூங்கி புத்துணர்ச்சியுடன் விழித்தெழ, உங்கள் மெத்தைகள் DP Foam ஆக இருக்கட்டும்.




DP Foam ஸ்வீட் ட்ரீம்ஸ் மெத்தைகள், கான்டூர் தலையணைகள், அதிஅடர்த்தி மெத்தைகள், கன்வல்யூட் மெத்தைகள், பேபி காட், ஸ்லோப், ஸீட்ஸ் மற்றும் போல்ஸ்டர்கள், சென்னையிலும் பாண்டியிலும் உள்ள எங்கள் கம்பெனி கடைகளில் மட்டுமே கிடைக்கும்.

**Sweet Dreams**
**Mattresses**

நுட்பமான தூக்கத்திற்கு, நிம்மதியான இரவுகள்.




- சென்னை: 180, லஸ் சர்ச் ரோடு, கடை எண் 29, T. N. H. B. ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், லஸ் கார்னர், மைலாப்பூர், சென்னை-4. (காமதேனு தியேட்டர் அருகில்) போன்: 498 2663.
- பாண்டிச்சேரி: 13, ரங்கப்பிள்ளை தெரு, பாண்டிச்சேரி-605001 போன்: 221095

FIDELIS -DP FOAM-366



• எதிர்காலச் சிரிப்பு!



• நஞ்சு!

பாதித்த சம்பவம்?

! தேர்தல் தினத்தில் சிதம்பரம் தொகுதியில் இனக் கலவரம்.

● கே. ஆர். உபேந்திரன்,
தஞ்சாவூர்.

? '356-வது சட்டப் பிரிவை நீக்க காங்கிரசுக்கு விருப்பம் இல்லை; ஆனால் அதைத் தவறாக காங்கிரஸ் பயன்படுத்தாது' என்று ஒரு பக்கம் கூறி விட்டு, 'சோனியா பிரதமரானால் அதற்கு

# இன்றைய அரசியலுக்கு அடித்தளம் என்ன?

அடுத்த மாதமே 'ஜெ'வை தமிழ்நாடு முதல்வராக்குவோம்' என்று மணிசங்கர் அய்யர் கூறுகிறாரே?

! முதல்வர் பதவி என்பது இவர் அப்பன் வீட்டுச் சொத்தா என்ன...? 'ஜெ'யிடம் வாரி வழங்குவதற்கு? வாக்காளர்களை இவர்கள் எவ்வளவு தூரம் மதிக்கிறார்கள் என்பது இதிலிருந்தே புரியவில்லையா?

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு.

? தென் சென்னை - த.மா.கா. வேட்பாளர் முக்தா சீனிவாசன் கை சின்னத்தில் வாக்களிக்கும்படி கேட்பது எதைக் காட்டுகிறது?

! அவர் ஜெயிக்கப் போவதில்லை என்பதை!

● க. நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? பாகிஸ்தானிலிருந்து சர்க்கரை இறக்குமதி செய்ததில் பிரதமர் அலுவலகத்துக்குத் தொடர்பில்லை என்று வாஜ்பாய் அறிவித்திருப்பது எதை உணர்த்துகிறது?

! 'சர்க்கரை இறக்குமதிக்கே அவசியமில்லை என்னும் அளவுக்கு உள்நாட்டு உற்பத்தி பெருகியுள்ளது; மீறிச் செய்யப்படும் இறக்குமதியும் தனியார்தான் செய்கிறார்கள்; அரசு கொள்முதல்தான் செய்கிறது; எனவே ஏது ஊழல்?' என்று விவரமாக விளக்கியிருப்பதால் உண்மையை உணர்த்துகிறது.



• வாள்வாள்!

● க.கணேசன், சென்னை- 30.

? காங்கிரஸிலிருந்து வைஜயந்திமாலா விலகி விட்டாரே. இனி காங்கிரஸின் எதிர்காலம்? (சிரிக்காதீங்க சார்!)

! எதுக்கு 'சிரிக்காதீங்க?' காங்கிரஸிலிருந்து விலகியதற்கா? பி.ஜே.பியில் சேர்ந்ததற்கா?

● சி. அருள்மொழி,
கிழக்குருவாடி..

? தங்கள் மனத்தை



• 'ஊசி' கொடுக்காது!



• விவர விளக்கம்!



• மறந்த ஒழிப்பு!

ங்கள் கேட்டவை-

# அரசு

● காவிரி மணாளன், கோனாபட்டு.

? லாலு பிரசாத் யாதவ் கூட தமது தேர்தல் அறிக்கையில் 'ஊழல் ஒழிப்பில் முழுக் கவனம் செலுத்தப்படும்' என்று அறிவித்திருக்கிறாரே? எப்படி?

! 'ஊழல் ஒழிப்பை ஒழிப்பதில்' என்று சொல்ல நினைத்து ஒரு 'ஒழிப்பை' விழுங்கியிருப்பார்!

● சூர்யா, லால்புரம்.

? 'இந்தியாவின் மக்கள் தொகையில் இரண்டு எண்ணிக்கை உயர உதவியதுதான் சோனியா இந்த நாட்டுக்கு ஆற்றியுள்ள பங்கு' என்று நான் பேசியதில் எந்த தவறும் இல்லை என ஜார்ஜ் பெர்னான்டஸ் கூறுகிறாரே?

! யாரும் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர்களில்லைதான். அதற்காக இத்தனை தரம் தாழ்ந்து பேசியிருக்க வேண்டுமா என்ன? அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு அல்லவா?

● டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு.

? 'செருப்பால் அடிப்பேன்' என்று சிலர் செருப்பைத் தூக்குவது சரியா? செருப்பு என்றால் அவ்வளவு கேவலமாகப் போய் விட்டதா?

! கேவலமா! யானை விலை, குதிரை விலை விற்கிறது! அதனால் ஒரு ஜதை செருப்பு வைத்திருப்பவர்கள், பிய்ந்து விடுமோ என்று பயந்து அதனால் அடிக்கத் தயங்குவார்கள். ஆயிரம் ஜதை வைத்திருப்பவர்களுக்கு அது பற்றிக் கவலையில்லை!

● எஸ்.கே. மூர்த்தி, கும்பகோணம்.

? அ.தி.மு.க. – காங்கிரஸ் கூட்டணி வென்றால், நிர்வாகம் எப்படியிருக்கும்?

! நிர்வாகமாவது மண்ணாங்கட்டியாவது. மீண்டும் இல் தாடியைச் சொறிய வேண்டியது தான்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம். ❑

? தாராசிங் என்ற ரௌடியால் முஸ்லிம் வியாபாரி ஒருவர் வெட்டிக் கொலை செய்யப்பட்டதற்கு, தக்க நடவடிக்கை எடுக்க வேண்டிய ஒரிசா அரசு, கடையடைப்பு நடத்தி தன் 'கடமை' உணர்வைக் காட்டியிருப்பது தேர்தல் ஆதாயத்துக்காகத்தானே?



• வடக்கும்...



• ...தெற்கும்!

! முஸ்லிம் வியாபாரி, கிறிஸ்துவ பாதிரியார் என்று மத துவேஷத்தை வெளிப்படுத்தும் கொலை நிகழ்ச்சிகள் நாட்டுக்கே இழுக்கு. தாரா சிங்தான் பொறுப்பு என்பது தெரிந்தும் அவனைப் பிடிக்க முடியாமலிருப்பது அதைவிடப் பெரிய தலைகுனிவு. இங்கே ஒரு வீரப்பன்; அங்கே ஒரு தாராசிங்! தேர்தல் ஆதாயமெல்லாம் கிடைக்காது; அவப்பெயர்தான் கிடைக்கும்!

● டீ.எஸ்.டீ. ராயன், நல்லத்துக்குடி.

? 'பிட்ஸா'வுக்கும் 'சமோசா'வுக்கும் ரொம்ப வித்தியாசம் கிடையாதே – புரியுதா?

! சமோசாவுக்குப் பதிலாக 'இட்லி-வடா' என்று எழுதிப் படித்துப் பாருங்கள்; பளிச்சென்று வித்தியாசம் தெரியும்.

● ராம்ஜெகன், வேலூர் – 1.

? விஜய் டீ.வி.யில் தினமும் இரவு பத்து மணிக்கு ஒளிபரப்பாகும் நையாண்டி தர்பார் எப்படி?

! கொஞ்சம் அரைத்த மாவுதான். இருந்தாலும் அவ்வப்போது நல்ல மசாலா வைத்துப் பரிமாறுவதால் சுவையான தோசை!

● எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? இன்றைய அரசியலுக்கு அடித்தளமாய் இருப்பது எது?

! வாக்காளர்களின் சக்தி.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : எம். சம்பத்,
9, மாரியம்மன் கோவில் தெரு, வேலாயுதம்பாளையம்,
கரூர் மாவட்டம் - 639 117.

# மந்திரப் புன்னகை — 6

**நா**னும் என் மனைவியும் சௌகரிய மாக, மும்பை வந்து விட்டோம். எங்கள் குழுவைச் சேர்ந்த மற்ற இருபத்தைந்து பேரின் கதி என்ன ஆயிற்று என்று அறிந்து கொள்ள ஆவலாக இருக்கிறதா? மறுநாள் காலை அரண்மனை அதிகாரிகள், எங்கள் குழுவினர் தங்கியிருந்த இடத்துக்கு வந்து பார்த்திருக்கிறார்கள். 'பெயர் மாற்றத்துக்குச் சம்மதமா?' என்று இறுதியாக ஒருமுறை கேட்டுவிட்டு, மறுத்து விட்டால் என் மேஜிக் நிகழ்ச்சியை நடத்துவதற்கு அனுமதி மறுத்து விடுவது, அதையும் மீறி நான் ஏதா கிலும் செய்ய முயன்றால் கைது செய்து அழைத்துச் செல்லுவது அவர்களுடைய திட்டம்.

நான் அங்கே இல்லாததால் அவர்களுக்கு ஏமாற்றம். என் குழுவினரை மிரட்டும் தொனியில் விசாரிக்க, நான் சொல்லியிருந்த படியே அவர்கள் நடந்து கொண்டனர். "நாங்கள் அனைவரும் மாயாஜால் மேஜிக் கம்பெனியின் ஊழியர்கள் என்றும், மேடை யில் பங்கேற்பதும், அதற்கு ஊதியம் பெறு வதும் மட்டுமே எங்கள் வேலை. லால், ஊருக்குத் திரும்பிவிட்ட சூழ்நிலையில், இனி எங்களால் மேஜிக் ஷோவை நடத் துவது சாத்தியமில்லை. எப்படியாவது டிக் கெட் ஏற்பாடு செய்து, ஊர் போய்ச் சேரவே நாங்கள் விரும்புகிறோம். இனி எந்தவித பிரச்னை யுமில்லாமல், ஊருக் குப் புறப்பட நிகழ்ச் சியை ஏற்பாடு செய் தவரையே நம்பி இருக்கிறோம்" என்று கவலை தோய்ந்த குரலில் சொன்னார்கள். இனி இவர்களிடம் விசாரிப்பதோ, இவர் களுக்கு தண்டனை தருவதோ பயனில்லாத விஷயம் என்ற முடிவுடன் விசாரணைக்கு வந்த அதிகாரிகள் வெறும் கையுடன் திரும் பிப் போனார்கள்.

இதில் கொஞ்சம் சோகமான விஷயம் என்னவென்றால், விசாரணைக்கு வந் தவர்கள் 'தேடுகிறோம் பேர்வழி' என்று சொல்லி, பஹ்ரைன் கடைகளில் வாங்கி வைத்திருந்த ஐம்பதாயிரம் ரூபாய் மதிப் புள்ள பொருட்களைக் கொண்டு போய் விட்டனர்.

ஆனால், நான் பஹ்ரைனை விட்டுப் புறப்படுவதற்கு முன்பாக, என் நிகழ்ச்சி ஸ்பான்சரிடம், மேற்கொண்டு நிகழ்ச்சி களைத் தொடர்ந்து நடத்த முடியாமல் போனதற்கான நஷ்டஈடு, என் ஊழியர்கள் மும்பை திரும்ப பயண ஏற்பாட்டுக்கான பணம், தவிர, என் உபகரணங்களை பாக்கிங் செய்து, கப்பல் மூலம் இந்தியாவுக்கு அனுப்பி வைப்பதற்கான செலவு இத்தனை யையும் ரகசியமாகக் கொடுத்து, எல்லா ஏற்பாடுகளையும் செய்யும்படி சொல்லி விட்டுத்தான் புறப்பட்டேன். எனவே, அடுத்த சில நாட்களில் மற்றவர்களும் பத்திர மாக மும்பை வந்து சேர்ந்தனர். இன்னும் சில தினங்களில், உபகரணங்களும் வந்து இறங்கின.

அன்னிய மண்ணில், இந்திய நாட்டின் மானம், மரியாதையை நான் மிக திடமான மனத்துடன் காப்பாற்றியதாக பத்திரிகைகள் பலவும் பாராட்டு மழை பொழிந்தன.

**வ**ளைகுடா பகுதியிலிருந்து இப்போது உங்களை ஆப்ரிக்கா கண்டத்துக்கு அழைத் துக் கொண்டு போகப் போகிறேன். கென்யா, உகாண்டா, தான்சேனியா ஆகிய மூன்று நாடுகளிலும் அடுத்தடுத்து மேஜிக் நிகழ்ச் சிக்கு அழைப்பு வந்தது. முதலில் கென்யா வில் புரோகிராம். குறிப்பிடத்தக்க சம்பவங்கள் எதுவும் இல்லாமல்,



அமோக வரவேற் புடன் நிகழ்ச்சி நடந்து முடிந்தபின், உகாண்டாவுக்குப் போனோம்.

எம்பயர் தியேட்டர் என்ற அரங்கத்தில் நிகழ்ச்சி நடந்தது. ஒவ்வொரு நாள் நிகழ்ச் சிக்குமான டிக்கெட் முன்பதிவு எட்டு நாட் களுக்கு முன்பு ஆரம்பமாகும். அதேதினம், அரங்கத்திற்கான எல்லா டிக்கெட்களும் விற்றுத் தீர்ந்து விடும். அந்த அளவுக்கு வர வேற்பு. இதற்கு முக்கிய காரணம், கென் யாவில் என் நிகழ்ச்சிக்குக் கிடைத்த வர வேற்பு பற்றி பேப்பர்களில் வெளியான பாராட்டுக்கள்தான்.

**மேஜிக் நிபுணர் கே. லால்**



ஒருநாள் நிகழ்ச்சிக்கு உகாண்டா நாட்டின் ராணுவத் தலைவர் வந்திருந்தார். அவருக்கு ரொம்பப் பிடித்துவிட்டது. நிகழ்ச்சி

# நிகழ்ச்சி!

முடிந்த பின், நான் அவரைச் சந்தித்து, வருகைக்கும், பாராட்டுக்கும் நன்றி தெரிவித்தபோது, அடுத்த சில நாட்களில் உகாண்டா நாட்டில் மாபெரும் அரசியல் பூகம்பம் வெடிக்கப் போகிறது என்று யாருக்கும் தெரிந்திருக்கவில்லை.

ஆம்! அடுத்த சில நாட்களில் உகாண்டா நாட்டின் அதிபர், சார்க் மாநாட்டில் கலந்து கொள்ளுவதற்காகப் புறப்பட்டுச் சென்றார். அதுதான் சமயம் என்று நினைத்த ராணுவத் தலைவர், அதிபரின் ஆதரவாளர்கள் பலரையும் கொன்றுவிட்டு, தானே இனி உகாண்டாவின் அதிபர் என்று அறிவித்தார். இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்குமே, சதித் திட்டத்தின் மூலம் ஆட்சியைப் பிடித்து, அதிபரான ராணுவத் தலைவர் யார் என்பது? கரெக்ட்! அவர் இடி அமீனேதான்!

பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு போடப்பட்டது. நாடெங்கும் ராணுவ நடமாட்டம் தான். மக்கள் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தனர். வீதிகளில், விர்விர்ரென்று ராணுவ வாகனங்கள் விரைந்து கொண்டிருந்தன. நாடெங்கும் ரத்த ஆறு ஓடியது. இடி அமீனுக்கு எதிராகக் குரல் கொடுத்தவர்களுக்கு, சப்தமில்லாமல் சமாதி கட்டப்பட்டது.

உகாண்டாவில், நம் ஊர் டாட்டா, பிர்லா போல ஒரு பெரும் பணக்கார இந்தியர். நான் உகாண்டா போனவுடனேயே எனக்கு மிகவும் நெருக்கமான நண்பராகி விட்டார். எதிர்பாராத அரசியல் நிகழ்வுகள் காரணமாக, என் நிகழ்ச்சி தடைபட்டது. "உடனடியாக, இந்த நாட்டை விட்டு, வெளியேறி விடுங்கள். அப்போதுதான் உயிருக்குப் பாதுகாப்பு" என்று ஆலோசனை கூறினார் இந்திய வம்சாவளி நண்பர்.

நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து, அரங்கத்துக்குச் சென்று வரவும், ஊர் சுற்றிப் பார்க்கவும் சௌகரியமாக ஒரு வேன் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த வேனில் நாங்கள் அனைவரும் ஏறிக் கொண்டோம். எங்களுடைய உபகரணங்களையெல்லாம் இரண்டு டிரக்குகளில் ஏற்றிக்கொண்டு, வேனைப் பின் தொடர, உகாண்டாவின் எல்லையை நோக்கிப் புறப்பட்டோம். மூன்று மணி நேரம் எந்தவிதமான தங்கு தடையுமில்லாமல் பயணம் செய்தால், நாட்டின் எல்லையைக் கடந்து விடலாம். பத்திரமாய் எல்லையைக் கடந்து விட வேண்டுமே என்று நாங்கள் அனைவரும் வேண்டாத தெய்வமில்லை.

எது நடக்கக் கூடாது என்று நினைத்தோமோ அது நடந்து விட்டது. ஆம்! ஒரு ராணுவ வாகனம் எங்கள் ஊர்திகளை நிறுத்தியது. எங்களுடைய வேனின் பக்கவாட்டில் நானும், சில மாயாஜால மேஜிக் காட்சிகளும் இடம் பெறும் போஸ்டர்கள் ஒட்டப்பட்டிருந்தன. அதைப் பார்த்தவுடனேயே நான் யார் என்று தெரிந்து விடும். ஆனால் ஒரு ராணுவ அதிகாரி, "நீங்கள் யார்? எங்கேயிருந்து வருகிறீர்கள்? எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?'' என்றெல்லாம் கேள்வி மேல் கேள்விகள் கேட்டார்.

"நான் கே. லால், இந்தியாவிலிருந்து வந்திருக்கும் மேஜிக் நிபுணர்" என்று ஆரம்பித்து, "உங்கள் நாட்டு அரசியல் மாற்றங்களுக்கும், எனக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. இன்றுள்ள சூழ்நிலையில், திட்டமிட்டபடி மேஜிக் நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்த இயலாத காரணத்தால், நாங்கள் நாட்டை விட்டுப் புறப்பட்டுச்

செல்கிறோம்" என்றேன்.

அவர் முகத்தில் நான் சொல்லுவதை நம்புவதா? வேண்டாமா? என்ற சந்தேகம் இருப்பதை என்னால் பார்க்க முடிந்தது. அடுத்து ஒரு அஸ்திரத்தை எடுத்து விட்டேன். சமயோசிதமான அந்த ஐடியா உடனடியாக வேலை செய்தது.

உகாண்டாவின் புதிய அதிபரான இடி அமீன் இதற்கு முன்பு ராணுவத்தின் தலைமைப் பொறுப்பில் இருந்த சமயத்தில் - அதுவும் சில நாட்களுக்கு முன்பு, (தேதியைக் குறிப்பிட்டேன்) எங்களுடைய மேஜிக் நிகழ்ச்சியைக் கண்டு ரசிக்க வந்திருந்தார். நிகழ்ச்சியைப் பார்த்து ரொம்ப சந்தோஷப்பட்டு, தன் பாராட்டுக்களைத் தெரிவித்தார்" என்றேன்.

இடி அமீன் என்ற பெயர் மந்திரச் சொல் போல வேலை செய்தது. அவருடைய குரலில் இருந்த அதிகாரத்தோரணை மறைந்து, சகஜம் நிலவியது. ஆனாலும் முழுமையாக, எங்களை நம்பி விடவும் அவர் தயாராக இல்லை. உடனே, இடி அமீனின் அலுவலகத்தைத் தொடர்பு கொண்டார். எங்களைப் பற்றிச் சொல்லி விட்டு, "இவர்களை என்ன செய்ய?" என்று கேட்டார்.

அதிபரின் செயலாளர்களுக்கு, என் நிகழ்ச்சிக்கு இடி அமீன் வந்திருந்தது, பாராட்டியது எல்லாம் தெரியும் போலும். அவர்கள் ஆபத்தில்லாத இந்தியர்கள். அவர்களைத் துன்புறுத்த வேண்டாம். பத்திரமாக, உகாண்டாவின் எல்லையோரம் வரை கொண்டு போய் விட்டு விடுங்கள்" என்று தகவல் வந்தது.

அப்புறம் என்ன? முன்னும், பின்னும் ராணுவ வாகனங்கள் பாதுகாப்புக்கு வர, எங்கள் வேனும், டிரக்குகளும் உகாண்டாவின் எல்லைக்கு பத்திரமாக வந்து சேர்ந்தன. ராணுவ அதிகாரிகளுக்கு நான் நெஞ்சு நெகிழ்ந்து நன்றி தெரிவிக்க, அவர்கள் சல்யூட் அடித்துவிட்டு விடை பெற்றுச் சென்றனர். எங்களுக்குப் போன உயிர் திரும்பி வந்ததுபோல இருந்தது.

புறப்படுகிறபோது, ஏகப்பட்ட அசைவ உணவு மற்றும் மதுபாட்டில்களை, 'பசிக்குச் சாப்பிடுங்கள்' என்று சொல்லிக் கொடுத்தார்கள்! ஆனால் நான் சைவம் என்பதால் மறுத்துவிட்டேன். அப்புறம் நம் ஊர் உருளைக் கிழங்கு போல ஏதோ ஒரு கிழங்கை வேக வைத்திருந்தார்கள். அதைக் கொடுத்தார்கள். அதன் பேர் எனக்கு இப்போது நினைவில் இல்லை என்றாலும், அந்த இக்கட்டான நிலையில், எங்கள் பசியைப் போக்கிய அந்தக் கிழங்கின் சுவை, இன்னமும் எனக்கு நினைவு இருக்கிறது.

ooo

பிஜி தீவுகள் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்களே! பசிபிக் கடலில் இருக்கும் பல தீவுகள் அடங்கிய நாடுதான் ஃபிஜி. போன நூற்றாண்டின் பிற்பகுதியில், அந்தப் பகுதி, பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்டிருந்தபோது, இந்தியர்களை வாங்கிக் கொண்டு போய் அங்குள்ள சர்க்கரைத் தொழிற்சாலைகளில் வேலைக்கு அமர்த்தினார்கள். மொத்த ஜனத் தொகையே சில லட்சம்தான். 'சுவா' என்ற ஊர்தான் தலைநகரம். அந்த நகரத்தில் ஜனத் தொகை ஒன்றரை லட்சம் போலத்தான் இருக்கும்.

என் மாயாஜால நிகழ்ச்சி மூன்று மாத காலம் நடைபெற்றது. அந்த நகரத்தின் மக்கள் தொகையில் பெரும்பாலானவர்கள், என் நிகழ்ச்சியைப் பார்த்து விட்டனர்.

ஃபிஜி தீவுகளில் எனக்கு ரொம்பவும் விசித்திரமான பிரச்னை ஏற்பட்டது. மற்ற நாடுகளில் என்னை ஒரு மேஜிக் நிபுணனாக, சிறந்த பொழுதுபோக்கு நிகழ்ச்சி வழங்குபவனாகத்தான் பார்த்தார்கள், ரசித்தார்கள், பாராட்டினார்கள். ஆனால், ஃபிஜி தீவு மக்களோ, என்னிடம் இயற்கையை மீறிய அதாவது சூப்பர் நேச்சுரல் சக்தி இருப்பதாக நம்பினார்கள்! எனவே, நிகழ்ச்சி தவிர, மற்ற நேரங்களிலும் காத்திருந்து என்னைச் சந்தித்தார்கள். குடும்பப் பிரச்னை, பணப் பிரச்னை என்று தங்களுக்குள்ள பலவிதமான பிரச்னைகளையும் என்னிடம் சொல்லி, அதை நான் தீர்த்து வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்!

என் வயது, அனுபவம், இந்திய கலாசாரம், பண்பாடு இவற்றின் அடிப்படையில் என் மனதுக்குத் தோன்றிய சில ஆலோசனைகளைச் சொல்லி அனுப்பி வைத்தேன். சிலர், நான் சாதாரண மனிதன்; தந்திரங்கள் மூலமாக, மேடையில் சாகஸங்கள் செய்பவன். எனக்கு அதீத சக்தி எதுவும் இல்லை என்று சொன்னால் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை!

இது போன்ற சூப்பர் நேச்சுரல் சக்தி நம்பிக்கை காரணமாக ஏற்பட்ட உச்சகட்ட அனுபவம் ஒன்றைப் பற்றி சொல்லுகிறேன். கோமாவில் கிடந்த மகனை மீட்டுத் தரச் சொன்ன தந்தையின் கதை அது!

(தொடரும்

# நூலுக்குள் ஒரு நூலகம்

பேராசிரியர் பெரியார்தாசன்




ஒரு நூலுக்குள் ஒரு நூலகத்தை அடக்க முடியுமா? 'என்னைச் செதுக்கிய எண்ணங்கள்' என்னும் தமது நூலில் முடியுமெனச் சாதித்திருக்கிறார் டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி.

இது வாழ்க்கை வரலாறா? வாழ்க்கைக்கு வழிகாட்டியா? பட்டிமன்றம் நடத்தினால் தவறில்லை.

பார்க்கச் சகிக்காத கம்பளிப் பூச்சியின் கூட்டுப் புழுப் பருவம், பார்க்க அழகான, பாராட்டத்தக்க வண்ணத்துப் பூச்சியாய் மாற்றி விடுகிறது.

நூலாசிரியரின் வாழ்க்கையென்னும் கூட்டுப் புழுப் பருவம் அவரை மட்டுமல்ல - இதனைப் படிக்கும், படித்துப் பின்பற்றும் எவரையும் அப்படி மாற்றிவிடும் ஆற்றலுடையதாயிருக்கிறது.

திருமணமான புதிதில் இவரும், இவர் மனைவியும் சேர்ந்து வீட்டுப் பின்புறம் உழைத்து ஒரே நாளில் கிணறு தோண்டிய கதையை விவரிக்கும் போது நம் கைகளும் காய்ப்புக் காய்த்த உணர்வைப் பெறுகின்றன.

உரிய பயிற்சியும், உலைவில்லா முயற்சியும் உடைய எவரிடமிருந்தும் சாதனை தப்பித்து விட முடியாது என்பதன் சத்திய வெளிப்பாடே இந்த நூல்.

"சொந்தமாகத் தொழில் செய்வது சுலபமல்ல. நான் அமெரிக்காவில் தொழில் துவங்கி இரண்டு முறை தோற்று, மறுபடியும் மூன்றாவது முறை துவங்கி வெற்றி பெற்றதனால் எனக்குத் தொழில்புரிவோரின் கஷ்டங்கள் நன்கு தெரியும். தொழில் செய்வது பெரிய சவால். நமது அறிவுக்கும் திறமைக்கும், சூழ்நிலை விடுக்கும் சவால்" என்று இவர் எழுதுவதை ஒவ்வொரு தொழில் முனைவோரும் பெரிதாய் எழுதித் தம் வீட்டுச் சுவரில் சட்டம் போட்டு வைத்துக் கொள்ளலாம்.

அதிலும் இந்தப் பகுதியின் கடைசி இரண்டு வரிகளை மனப்பாடம் செய்து மந்திரம் போல் அன்றாடம் உச்சரிக்கலாம்.

நூலாசிரியரின் பள்ளிப் பருவமே ஒரு சிறுகதைத் தொகுதி மாதிரி இருக்கிறது.

அதில் அறிமுகமாகிற மாணவர்களும், ஆசிரியர்களும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வித்தியாசமான கேரக்டர்கள்.

மாயவரம் கொரநாடு பள்ளியில் தேவசகாயம் தலைமையாசிரியர். யாரோ ஒரு மாணவன் எழுதிய காதல் கடிதத்தைக் கொண்டு போய் அழுதுகொண்டே அவரிடம் நீட்டுகிறாள் ஒரு மாணவி.

என்ன நடக்கும்? 'அந்த மாணவனின் முதுகு பிய்ந்து போய்விடும். ஏனெனில் அது அந்தக் காலம்' என்று நினைத்துப் படித்தால் ஏமாற்றம்தான்.

என்னதான் செய்தார் தேவசகாயம்?

"இதோ பார்! அந்தப் பையன் இப்போ என்ன செய்துட்டான்? உன் பேரில் ஆசை என்று எழுதியிருக்கிறான். வேறு ஒன்றும் இல்லையே. பதிலுக்கு உனக்கு அவன் மீது ஆசையா, இல்லையா என்று சொல்லி விடு! அவ்வளவுதானே! அதற்குப் பிறகு அவன் உன்னிடம் ஏதாவது வாலாட்டினால் என்னிடம் சொல்! போ!" என்றார்.

இதை எழுதி விட்டு நூலாசிரியர் சொல்

கிறார் : என்ன யதார்த்தமான உலக இயல்பை உணர்ந்த பதில்?

"சின்ன வயதிலிருந்தே தன்னைப் பற்றியே சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும் ஏற்படும் தன்னம்பிக்கை – தன்னைப் பற்றிய பெருமை – தன்னைப் பற்றிய உணர்வுதான் காலப்போக்கில் மனிதனை உயர்த்துகிறது" என்கிறார் நூலாசிரியர்.

பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பது புரிந்துவிட்டது அல்லவா?

முன்னாள் பாரதப் பிரதமர் இந்திரா காந்தியைக் கவர்ந்த சோதிடர் ஒருவர் இவரைக் கவர்ந்திருக்கிறார்.

அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்து பெரு முயற்சி செய்து அவரைப் பார்த்து சோதிடம் கேட்டிருக்கிறார் நூலாசிரியர். அந்தப் பகவதி பூசை சோதிடரும் இவருக்கு அரைமணி நேரம் சோதிடம் சொல்லியிருக்கிறார்.

"அவர் சொன்னது ஒன்று கூட என் விஷயங்களுக்குச் சரியில்லை. நடந்த சம்பவங்களைச் சொன்னது தவறு; நடந்து கொண்டிருப்பதைச் சொன்னபோதும் அவை சரியல்ல."

சரி! அந்தச் சோதிடர் இந்திராகாந்திக்குச் சொன்னது சரியாயிருந்தது. இவருக்குச் சரியாக இல்லை. சோதிடமென்ன விஞ்ஞானமா? எல்லோருக்கும் ஒரே மாதிரியிருக்க?

எழுத்தோ, சினிமாவோ, அரசியலோ, சரியாக இல்லையானால் அதன் விளைவு சமூக வாழ்க்கையையே பாழாக்கிவிடும். இதற்கான உளவியல் காரணத்தை இப்படி விளக்குகிறார்.

"எழுத்துக்களாலும், சினிமாவினாலும், இசையினாலும், வாழ்வில் நிகழும் சம்பவங்களாலும் நாம் தூண்டப்படுகிறோம் என்பது மனவியல் உண்மை. தூண்டப்படும் பலர் எது நியாயம், எது சரியில்லை என்று தீர்மானிக்கிற விவேகம் கொண்டவர்கள் அல்ல. சில நேரங்களில் உணர்வுகளால் ஈர்க்கப்படுபவர்கள். இழுத்துச் செல்லப்படுபவர்கள். அப்படிப்பட்ட சில அரசியல் தலைவர்கள் அல்லது தலைவிகளது செயல்கள் நம் நாட்டை லஞ்சக்காடாக மாற்றி விட்டன."

ஓ! இவரால் அரசியல் விமர்சனத்தையும் கூட எவ்வளவு அழுத்தமாய்ச் செய்ய முடிகிறது?

இந்தத் தன் வரலாற்றில்தான் "மீண்டும் அந்தச் சம்பவங்களுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் நிலை ஏற்படுவதால், என்னை அறியாமலே என்னிடம் இந்த அகந்தை, ஆணவம், சுய விளம்பரம், பிறரை விமர்சித்துத் தன்னை உயர்த்தும் பண்பு இதெல்லாம் வந்திருக்கக்கூடும். தென்படக் கூடும். மன்னிக்கவும்" என எழுதுகிறார்.

இந்தச் சுயவிமர்சனமே இவரது வெற்றிக்கு அடிப்படை.

மொத்தத்தில் இந்த நூலைப் படித்து முடித்ததும் எனக்குத் தோன்றியது இதுதான்

"வாழ்ந்தால் இவரைப் போல் வாழ வேண்டும். எழுதினால் இவர் நூலைப் போல் எழுத வேண்டும்."

**(என்னைச் செதுக்கிய எண்ணங்கள் ஆசிரியர்: டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி வெளியீடு கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, சென்னை – 17. விலை ரூ.100)**

---

**"யார் யார்தான் கன்ஸ்யூமர் கோர்ட்டுக்குப் போறதுன்னு ஒரு வரைமுறையே இல்லாமல் போயிடிச்சு போங்க."**

**"என்னாச்சு?"**

**"ஒரு வீட்டு தீபாவளி பலகாரம் சாப்பிட்டதால அஜீர்ணம் வந்துடிச்சின்னு ஒரு பிச்சைக்காரன் அந்த வீட்டுக்காரங்க மேல வழக்கு தொடுத்திருக்கானாம்!"**





**"ஏன் சார், கோவிச்சுக்கிறீங்க? இட்லி தான் பஞ்சு மாதிரி இருக்கே!"**

**"அதுசரி, ஆனா சட்னி நெருப்பு மாதிரி இருக்கே...!"**

**– சீர்காழி ரேவதி**

மலையாள மூலம் : எம். முகுந்தன் தமிழில் : டி.ஜி.ஆர். வசந்தகுமார்

# நாட்டுப்புறம்

கங்காதரன் வெளிநாடு செல்லப்போகிறார் என்று அறிந்ததும் நாணுநாயர் தம் கைத்தடியை ஊன்றிக் கொண்டே கங்காதரனைக் காண வந்தார். கைத்தடி நாணுநாயரை வழிநடத்திச் சென்றதா அல்லது நாணுநாயர் தம் கைத்தடியை வழி நடத்திச் சென்றாரா என்று ஐயுறும் வகையில் அவர் நடை இருந்தது.

நாணுநாயர் திடீரென இந்த முதுமையை அடைந்திருக்கிறார். கைத்தடியை ஊன்றி நடக்கும் வயது நாணுநாயருக்கு இல்லை. இந்த திடீர் முதுமைக்குக் காரணம், நாணுநாயரின் மகள் பிரேமாதான் என்று ஊர் மக்கள் பேசிக் கொள்கின்றனர்.

நாணுநாயர் தன்னைப் பார்க்க வருவார் என்று கங்காதரன் மனம் கூறிக் கொண்டே இருந்தது. ஆகவே, அவரைக் கண்டபோது கங்காதரனுக்கு ஆச்சர்யம் எதுவும் தோன்றவில்லை. அவர் முற்றத்திற்கு இறங்கிச் சென்று நாணு நாயரைக் கையைப் பிடித்து வராந்தாவில் ஏற்றி ஒரு நாற்காலியில் உட்கார வைத்தார்.

வெயிலில் நடந்து வந்ததால் நாணு நாயருக்கு நல்ல தாகம் இருந்தது. ஆனால் அந்த சமயத்தில் அவருக்கு அது ஒன்றும் பிரச்னையாக இருக்கவில்லை. காரணம், மனசில் அதைவிடப் பெரிய தாகம் ஒன்று நிரம்பி வழிந்தது. உட்கார்ந்திருக்கும்போது அவருக்கு மீண்டும் ஒரு ஊன்றுகோல் அவசியப்பட்டது.

நாணுநாயர் ஏதோ கூறுவதற்கு முயன்றார். இரண்டு முறை அவர் பேச முயற்சி செய்தார். ஆனால் ஒரு வார்த்தை கூட வெளிவரவில்லை. நாணுநாயரின் இந்த அவஸ்தையைக் கண்டு கங்காதரன் அமைதியிழந்தார். அவர் திண்ணையிலிருந்து எழுந்து வராந்தாவில் அங்கும் இங்கும் இருமுறை நடந்தார்.

"விலாசம் கொண்டு வந்திருக்கிறீரா?"

"இருக்கிறது."

நாணுநாயர் வியர்த்த தம் சட்டைப் பாக்கெட்டிலிருந்து ஒரு கசங்கிய துண்டுக் காகிதத்தை எடுத்தார். அதை வாங்கிய கங்காதரனுக்கு, "இந்த விலாசமும் போன் நம்பரும் சரியாய் இருக்குமோ?" என்று சந்தேகம் ஏற்பட்டது. 'அது சரியாய் இருந்தால் கூட பழக்கமில்லாத அந்த அயல்நாட்டில் 'ஆல்பி'யை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? ஆனால் தம் சந்தேகத்தை அவர் வெளியில் காட்டவில்லை.

''என்னால் முடிந்ததை நான் செய்கிறேன்!'' கங்காதரன், நாணுநாயரை சமாதானப்படுத்தினார்.

நாணுநாயர் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுப் புறப்பட்டார்.

**1988** அக்டோபர் 3ம் தேதி ஒரு மாலை நேரத்தில் ஆல்பி முதன் முதலாய் இந்த கிராமத்தில் கால் பதித்தான். பள்ளியிலிருந்து திரும்புகிற குழந்தைகளோடு அவனும் தோணியில் வந்து இறங்கினான். அந்த நதிக்கரைக் காற்றில் அவனது பொன்னிற முடி வலது பக்கம் சாய்ந்து, பறந்து கொண்டிருந்தது. ஒளிமிகுந்த விழிகளால் ஆச்சர்யத்துடனும் சந்தோஷத்துடனும் அவன் நான்கு திசையிலும் நோக்கினான். நீர் நிரம்பிய பரந்த வயல்வெளிகளும் ஓலைக் குடிசைகளும் அவன் கண்களுக்குக் களிப்பூட்டின. பரிச்சயமில்லாத இந்த கிராமாந்தரப் பகுதியோ, இரவோ, படுக்க ஓர் இடம்



இல்லாததோ எதுவும் அவனை பாதிக்க வில்லை. மீண்டும் கொஞ்சதூரம் நடந்து அங்கே இருந்த கிராமத்து நூலகத்து வராந்தா வில் போய் அமர்ந்தான். தெருவில் ஆள் நடமாட்டம் ஒன்றுமில்லை. சிலசமயம் ஒரு காரோ லாரியோ அந்த வழியாகக் கடந்து சென்றது.

முதுகில் இருந்த பெரிய மூட்டை யிலிருந்து, "படுக்கைப் பையை" வெளியில் எடுத்து விரித்தான். கொசுக்கள், பூச்சிகள் விரட்டும் மருந்தை தேகமெங்கும் தடவிக் கொண்டு கால் நீட்டி மல்லாந்து படுத்தான். தெருவிளக்கு எரியாமல் இருந்ததால் அங்கே இருள் சூழ்ந்திருந்தது. சில நேரங்களில் கடந்து செல்லும் வாகனங்களின் வெளிச்சம் ஒரு நொடி நேரம் அவன் மேல் விழுந்து மின்னி மறைந்து சென்றது. நடு இரவில் எப் போதோ மழை பெய்தபோது அவன்

கண்விழித்து படுக்கைப் பையின் ஜிப்பைத் திறந்து அதற்குள் புகுந்து மறுபடியும் உறங்கலானான்.

அதற்குப் பிறகு கடைத் திண்ணைகளிலும், மரத்தடிகளிலும் மைதானத்தில் எல்லாம் அந்த படுக்கை விரிப்புப் பையை ஊர் மக்கள் கண்டனர்.

''நல்ல குடும்பத்து ஆளப்போலத் தெரியுது! என்ன ஒரு களையான முகம்!''

நாணுநாயர் சொன்னார்.

''கடல் கடந்து நம் ஊருக்கு வந்தவன் இல்லையா.... அதனால நடுத்தெருவுல படுக்க நாம அனுமதிக்கலாமா...''

சாத்து மாஸ்டர் கருத்துத் தெரிவித்தார்.

''என்னுடைய தானியக் கிடங்கு காலியாகத்தான் இருக்கிறது. இருட்டிய பிறகு அங்கே வந்து படுத்துக் கொள்ளட்டும்..'' நாணுநாயர் சொன்னார்.

அன்று மாலையில் சாத்து மாஸ்டரும் நாணுநாயரும் ஆல்பியை அழைத்து வந்து தானியக் கிடங்கில் தங்கச் செய்தனர். பிரேமாவின் அம்மா பரிமாறிய புழுங்கல் அரிசிச் சாதத்துடன் மோர்க் குழம்பைச் சேர்த்து அவன் ருசியுடன் சாப்பிட்டான். அந்தத் தானியக் கிடங்கில் மின்சாரம் இல்லை. நள்ளிரவுக்குப் பின்னும் கூட லாந்தர் விளக்கு வெளிச்சத்தில் உட்கார்ந்து அவன் ஏதோ படித்துக் கொண்டிருப்பதை மேலே தன் படுக்கையறை ஜன்னல் மூலமாகப் பிரேமாவால் பார்க்க முடிந்தது.

காலையில் குளித்து ஈரக் கூந்தலில் துளசிப் பூவுடன் குடையும் பிடித்து பால் வாடிக்குப் போகும் பிரேமாவை ஆல்பி ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன ஒரு மடத்தனமான செயல் இது நாணுநாயரே...? வேறு ஒன்றுமில்லைன்னாலும் கூட கல்யாண வயசுல ஒரு பொண்ணு வீட்ல இருக்குதுங்குற எண்ணமாவது உங்களுக்கு வேணும். அவனைப் பார்த்தா இயேசு கிறிஸ்து போலத் தெரியலாம். ஆனால் இவங்களை நம்ப முடியாது. போதை மருந்து விக்றவனாக்கூட இருக்கலாம்! யாருக்குத் தெரியும்?''

அச்சு முதலாளி ஆவேசப்பட்டார்.

அதைக்கேட்டு பஞ்சாயத்துத் தலைவரான சாத்து மாஸ்டர் இவ்வாறு கூறினார்:

''முதலாளி, ஒரு அயல்நாட்டுக்காரன் நம் ஊருல தங்கறதுனால நம்ம ஊரு அழிஞ்சா போயிடும். நம்ம ஊர்க்காரன் உலகத்துல எங்கேயெல்லாமோ போய் தங்கியிருக்காங்க...? அதனால் அந்த ஊரெல்லாம் அழிஞ்சா போச்சு...? இந்த வெள்ளைக்காரப் பையனை நாணுநாயர் தானியக் கிடங்கிலிருந்தும் இந்த ஊரிலிருந்தும் வெளியேத்தனும்னு நீங்க சொல்றீங்க. மத்த நாடுகளில் எல்லாம் வாழ்ந்துக்கிட்டு வருகிற மலையாளிகள் கிட்ட அந்த நாட்டுக்காரன்க இப்படிச் சொன்னா அப்ப என்ன ஆகும்னு நீங்க நினைச்சிப் பார்த்திருக்கீங்களா முதலாளி...? நாம உலகத்துல எங்க வேணும்னாலும் போகலாம். சிங்கப்பூர், துபாய், அமெரிக்கா எங்க வேணும்னாலும் போலாம். ஒரு வெள்ளைக்காரன் நம்ம நாட்டுக்கு வந்தா நம்மால பொறுத்துக்க முடியலை! உலகம் மாறிக்கிட்டே வருதுன்னு நமக்குத் தெரியணும் முதலாளி! தொழில் நுட்ப, விஞ்ஞான வளர்ச்சி நம்முடைய வாழ்க்கையை மாத்தி அமைச்சிக்கிட்டு இருக்கு. இன்னும் கொஞ்சம் போனா, இந்தியன், அமெரிக்கன் என்னும் வேறுபாடு இல்லாமல் போய்விடும். நாடுகளோட எல்லைகள் மறைந்து போகும். ஒரே நாடு என்று ஒன்று உருவாகப் போகிறது. பூமியில் ஒரு மதம் மட்டுமே இருக்கப் போகிறது. மனித மதம்.''

''உலக்கை!'' அச்சு முதலாளி கூறினார்.

''உங்களோட வேதாந்தம் கேட்டுக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. இருட்டுற முன்பே கொப்பரையை வடகரை போய் சேர்க்கணும்....'' என்றவாறு நாணு நாயரைப் பார்த்துத் தொடர்ந்து,

''சீக்கிரமாய் அந்த வெள்ளைக்காரப் பையனை தானியக் கிடங்கிலிருந்து வெளியேத்தணும். இல்லேன்னா நீ வருத்தப் படுவே...''

வேட்டி முனையை ஒரு கையில் தூக்கிப் பிடித்து டயர் செருப்பு 'சரக் சரக்' என்று ஒலியெழுப்ப அச்சு முதலாளி விரைந்து

**'' உடம்பு பூரா X-Ray எடுக்கனும்னு சொன்னா அவசியமில்லைன்னு சொல்றீங்களே. நீங்க டாக்டரா? நான் டாக்டரா?**

**— ஜோதி ரஞ்சன்**



நடந்தார்.

"நான் இப்ப என்ன செய்யணும் சொல் லுங்க மாஸ்டர். எனக்கு மூளையே குழம்பிப் போனாப் போல இருக்கு!"

"நீங்க ஒண்ணும் செய்ய வேண்டாம்... கொஞ்ச நாள் கழிஞ்சா அந்தப் பையன் அவன் பாட்டுக்குப் போயிடுவான். அது வரை அவன் தானியக் கிடங்கிலேயே தங்கியிருக்கட்டும்!"

''அவனால யாருக்கும் தொந்தரவு இல்லையே?''

"பாவம் அவன்."

**ஆ**ல்பியால் யாருக்கும் ஒரு தொந் தரவும் இல்லை. உச்சி வெயில் வரும்வரை உறங்கிக் கொண்டிருப்பான். கண் விழித் தவுடனே ஒரு கடுங்காப்பி வேணும். முதல்ல நாணுநாயர் அதைக் கொண்டு போய்க் கொடுத்தார். இப்போது பிரேமாவோட அம்மா கொடுக்கிறார். பின், ஆற்றில் இறங் கிக் குளித்துவிட்டு எங்கேயாவது போவான். எப்போதும் ஒரு கிழிஞ்ச பைஜாமாவோடு கசங்கிய ஜிப்பாவும்தான் ஆல்பியோட வேஷம். வழக்கமாய் சவரம் செய்கிற பழக்க மில்லை. ஆனால் அவனைப் பார்த்தா ஒரு தேவ குமாரன் போல் தோன்றும். உணவு அவனுக்கு ஒரு பொருட்டல்ல. பழங்களும், சோடாவும் போதும். எங்கே போனாலும் இருட்டுவதற்கு முன் வீடு திரும்பி விடுவான். அதற்குப் பிறகு லாந்தர் வெளிச்சத்தில் விடி யும் வரை படிப்புதான். துப்பறியும் கதைகள், காதல் கதைகள், பயணக்குறிப்புகள் இவை களே அவன் படிக்கிற புத்தகங்களில் அதிக மாய் இருக்கும். படித்து முடித்து தூக்கி எறி கிற புத்தகங்களின் எண்ணிக்கை அதி கரித்துக் கொண்டே வருகிறது.

ஒரு நாள் அகல் விளக்கு பூஜை செய்ய வேண்டி கோயிலுக்குப் போன பிரேமா, அங்கே ஆல்பியைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தாள்.

"போகப் போக அவன் கோயிலுக்குள்ளே யும் வந்துட்டான்... குருவாயூரப்பனோடு தானா அவன் விளையாட்டு. வேண்டாம்னு சொல்லணும் அவன்கிட்ட!"

வரும் வழியில் நாணுநாயரைக் கண்ட அச்சு முதலாளி முறைத்தார். நாணுநாயர் குழம்பிப் போய் நின்றார். ஊர் மக்கள் அனைவரும் அவர்மேல் குற்றம் சுமத்தினர். மக்கள் அவரை இழிவாய்ப் பேச ஆரம் பித்தனர். சாத்து மாஸ்டர் மட்டுமே அவருக்கு ஆதரவு.

"கடவுள்களுக்கு சாதி மதம் உண்டா முதலாளி?" சாத்து மாஸ்டர் கேட்டார்.

''ஒரு வெள்ளைக்காரப் பையன் கோவிலில் கால் வைத்ததற்குக் கடவுள் கோபித்துக் கொள்ள மாட்டார். நம்ம மனசு போல சின்னது அல்ல தெய்வங்களோட மனசு."

''இந்துக்களுக்குக் கோவில், முஸ்லீம் களுக்கு மசூதி, கிறிஸ்துவர்களுக்கு தேவா லயம். இதுதான் சட்டம்.''

"அப்போ இது எதுலேயும் வராதவங்க எங்கே போய் சாமி கும்பிடுவாங்க?"

"அவங்க சாமி கும்பிட வேண்டாம். நான் உங்க வேதாந்தத்தை கேக்கறாப் போல இல்ல. நான் போறேன். இருட்டும் முன் சந்தையில் போய்ச் சேரணும்."

**நா**ணுநாயரின் மனம் அமைதியற்று இருந்தது. யாருக்கும் ஒரு தீங்கும் செய்திராத அமைதியான ஆல்பியுடனான அவரது நேசிப்பில் யாதொரு குறையும் இல்லை. ஆனால் ஊர் மக்கள் அவருக்குத் தொடர்ந்து தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஊர் மக்களுக்குப் பயந்து வீட்டை விட்டு வெளியேறுவதற்குக் கூடத் தயங்கினார். வழியில் பார்க்கும் போதெல்லாம் அச்சு முத லாளி அவரிடம் வெறிபிடித்த பன்றியைப் போல் உறுமுவது வழக்கம்.

இப்படியே சில நாட்கள் நகர்ந்தன. திரு விழாக்காலத்தில் கோயிலில் தரிசிக்க வரு பவர்கள் கோயில் முற்றத்தில் கூட்டமாய்க் கூடினர். ஊர்வீதிகளில் யானைக் கழிவுகள் ஆங்காங்கே காணப்பட்டன. இரவு முழுக்க ஊர்வீதிகளில் தீப் பந்தங்களின் ஒளி வியாபித்திருந்தது. விடியும்வரை கதக்களி நடைபெறும். அது போன்ற ஒரு நாளில் பிரேமாவின் தாய் நெருப்பில் விழுந்தது போல் ஆனாள். கடிதம் ஒன்றை எழுதி வைத்துவிட்டு பிரேமா ஆல்பியுடன் ஓடிப் போயிருந்தாள்.

"அன்புள்ள அப்பாவும் அம்மாவும் படித்தறிவதற்கு...

நானும் ஆல்பியும் ஒருவரையொருவர் காதலிக்கிறோம். நாங்கள் சுற்றுலா ஸ்தலங்களுக்குச் சென்று கொண்டிருக்கிறோம். ஒரு மாதம் கழித்து ஆல்பியின் விசா முடியும். ஆல்பி திரும்பிச் செல்லும்போது நானும் உடன் செல்வேன்.

அப்பாவும் அம்மாவும் என் தவறுகளை மன்னித்து என்னை ஆசீர்வதிக்க வேண்டும்."

கங்காதரன் அயல்நாடு செல்வதன் நோக்கம் சிதைந்து வரும் புராதனக் கலைகள் பற்றிய ஒரு கருத்தரங்கில் கலந்து கொள்வதற்காகத்தான். அவரின் ஆய்வுக் கட்டுரை 'கூடியாட்ட'த்தை பற்றியது. உலகத்தில் மிகவும் புராதனமான அந்த நாடக உருவம் கொஞ்சம் கொஞ்சமாக நலிந்து கொண்டே வருகிறது. கருத்தரங்கில், பங்கெடுக்கக் கிடைத்த இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி கூடியாட்டத்தை பேணிக்காக்க அயல்நாட்டில் ஒரு குழுவை உருவாக்கும் முயற்சி பற்றிய திட்டம் அவர் மனத்தில் இருந்தது. அது போன்ற ஒரு முயற்சிக்கு உதவ யுனெஸ்கோவும் வாக்களித்திருந்தது. பிரயாணத்திற்கான விமான டிக்கெட்டை இந்திய கலாசார உறவு மையம் அவருக்கு இலவசமாய் அளித்தது. அவர் தமது ஆய்வுக் கட்டுரையை தயார்படுத்திய பின் கம்ப்யூட்டரில் வடிவமைத்து நகல் எடுக்க வேண்டி டவுனுக்கு சென்றார். இரண்டு நாள் கழித்து பம்பாய் புறப்பட்டுச் சென்றார். அங்கேயிருந்துதான் அவரின் பிரயாணம். வழி முழுக்க நாணுநாயரையும் பிரேமாவையும் ஆல்பியையுமே அவர் நினைத்துக் கொண்டிருந்தார். அவர் புறப்படும்போது காம்பவுண்டு கேட் அருகே நின்று லதா கண்களை கசக்கிக் கொண்டிருந்தாள்.

ஆம்ஸ்டர்டாம் விமான நிலையத்திலிருந்து கங்காதரன் ஆல்பியை போனில் தொடர்பு கொண்டிருந்தார். சனிக்கிழமை சந்திக்கலாம் என்று கூறிய ஆல்பி கங்காதரனுக்கு "டிரம்மண்ட்" தெரு விலாசத்தையும் கொடுத்தார்.

டாவரிலிருந்து ரயிலேறி 'வாட்டர்லூ'வில் இறங்கினார். 'வாட்டர்லூ' ரெயில் நிலையத்தைக் கண்டதும் தான் தலைச்சேரியில் இருக்கிறோமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அவருக்கு 'வாட்டர்லூ' ரெயில் நிலையத்திற்கும் தலைச்சேரி ரெயில்வே ஸ்டேஷனுக்கும் அந்த அளவு ஒற்றுமை இருந்தது.

ஆல்பி போனில் கிடைத்தது, கங்காதரனுக்கு பெரும் பாக்கியமாய் தோன்றியது. நாணுநாயர் கொடுத்த போன் நம்பர் தவறானது என்று கங்காதரன் உறுதியாய் இருந்தார். அந்த நம்பர் சரியானதாகவே இருந்தாலும், ஆல்பி அங்கே தான் இருப்பான் என்பது என்ன நிச்சயம்? ஊர் சுற்றும் சுபாவம் கொண்டவர்கள்தான் ஆல்பியும் அவன் சார்ந்த நாட்டு மக்களும். ஆல்பி அங்கேயில்லாது போயிருந்தால் கங்காதரனுக்கு இக்கட்டான நிலை ஏற்பட்டிருக்கும். ஒரு நாளுக்கு மேல் அங்கே தங்கக் கூடிய வசதி அவருக்கு இல்லை. மணிபர்ஸ் காலியாகிக் கொண்டே வருகிறது. ஓட்டல் வாடகைக்காகவும், ரயில் பயணத்திற்காகவும்தான் அவர் பெருமளவு செலவு செய்திருக்கிறார். மற்ற செலவுகளையெல்லாம் அவர் கட்டுப்படுத்த முயன்றார். உலகத்தரம் வாய்ந்த சாக்லேட்டுகள் குறைந்தவிலையில் கிடைக்கும் இடம் ஆம்ஸ்டர்டாம் ஏர் போர்ட்டில் உள்ள டூட்டிப்ரி ஷாப்புகள். லதாவுக்கு சாக்லேட் என்றால் உயிர். ஆனாலும் அவர் எதுவும் வாங்கவில்லை. கருத்தரங்கை ஏற்பாடு செய்திருந்தவர்கள் கொடுத்த ஒவ்வொரு டாலரையும் ஆல்பியைக் கண்டு பிடிப்பதற்காக வைத்துக் கொண்டார்.

ஆல்பி கொடுத்த விலாசம் ஒரு 'பப்' பின் விலாசம். அங்கே நின்று கொண்டும் உட்கார்ந்தும் ஆணும் பெண்ணும் பெரிய குவளைகளில் 'கிராப்ட் பீர்' குடித்துக் கொண்டிருந்தார்கள். 'பப்'களில் உள்ளும் வெளியிலும் மட்டுமல்லாது சாலையோரங்களில் ஆட்கள் உட்கார்ந்து பீர் குடித்துக் கொண்டிருந்ததைப் பார்க்க முடிந்தது.

காரை நிறுத்தி விட்டு தன் அருகில் வேகமாக நடந்து வந்த ஆல்பியை கங்காதரனால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

"தலைவரே... நம்ம தொகுதி மக்களெல்லாம் ரொம்ப விவரமாயிட்டாங்க..."

"என்னய்யா சொல்றே?"

"நமக்காக அவங்க வோட்டுப் போடணும்னா நூறு ரூபாய், அவங்க வோட்டு போட வாராம இருந்து நாம கள்ள வோட்டு போட்டுக்கிட்டா இருநூறு ரூபாய்ன்னு பேரம் பேசறாங்க!"

— பெரியகுளம் ஆர். வேணுகோபால்

ஆல்பி சந்தோஷத்துடன் கங்காதரன் கையைப் பிடித்துக் குலுக்கினான்.

"எப்படி இருந்தது உங்களுடைய கருத்தரங்கம்...?"

ஆல்பி முன்னோக்கி வந்து கங்காதரனை தழுவிக் கொண்டான். அவனுடைய உடம்பில் ஒருவித நறுமணம் கமழ்ந்தது.

ஆல்பி அழகாய்ப் படிய வாரிய தலை முடியுடன் சவரம் செய்த முகத்துடன் கோட்டு, டையும் அணிந்திருந்தான். கையில் ஒரு லெதர் ப்ரீப்கேஸ்.

"எனக்கு திடீர்னு அடையாளம் தெரியலை, சாரி..."

"உங்க ஊர்ல சுற்றுவது போல இங்க சுற்றினால் போலீஸ் பிடிச்சுட்டு போயிடும்."

ஆல்பி கலகலவெனச் சப்தமிட்டுச் சிரித்தான். அவன் கங்காதரனை ஆள் நடமாட்டம் குறைந்த ஓர் இடத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே உள்ள 'பார் அட்டெண்டரு'க்கும், குடித்துக் கொண்டிருக்கும் சிலருக்கும் ஆல்பியோடு நல்ல அறிமுகம் இருந்தது. அவர்கள் பரஸ்பரம் தமக்குள் வணக்கம் தெரிவித்துக் கொண்டு கைகுலுக்கிக் கொண்டனர். ஆல்பியும் கங்காதரனும் கையில் பீர் குவளையுடன் எதிரெதிரே நின்றனர்.

"சொல்லுங்க... ஊரில என்ன விசேஷம்?" ஆல்பி வினவினான்.

"பிரேமாவின் கண்ணீர் இன்னும் உலர்ந்தபாடில்லை..."

"ஏன்? எதுக்காக அவங்க அழறாங்க? ஆல்பி அதிசயத்துடன் கேட்டான்.

"அவள் உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள்..."

"எனக்காகவா? எதுக்கு?"

"அவளுக்கு உங்களைத் தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள முடியலையாம். அவள் உங்களோடு படுக்கையைப் பகிர்ந்து கொண்டவள்."

"யெஸ். வி ஹேட் செக்ஸ்... அதுக்காக நான் ஏன் அவளைக் கல்யாணம் செஞ்சிக்கணும்?"

கங்காதரனுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை.

ஆல்பி தொடர்ந்து, "உங்களுடைய ஊருக்கு வருவதற்கு முந்தைய வருடம் நான் தாய்லாந்தில் விடுமுறைக்கு சென்றிருந்தேன். நான் அங்கே பத்துப் பன்னிரெண்டு பெண்களுடன் இருந்ததுண்டு. அவர்கள் யாரும் கல்யாணம் செய்து கொள்ளும்படி என்னிடம் கேட்டதில்லை"

கங்காதரன் நிலை குலைந்து போனார். விளக்கெண்ணெய் குடித்தது போல் தொண்டையிலும் வாயிலும் ஒரு கசப்பு.

"பிரேமா அனுப்பிய கடிதங்கள் எதுவும் கிடைக்கலையா?"

"கிடைத்தது."

"அவள் உங்கள் குழந்தைக்குத் தாயாகியிருக்கிறாள்!"

"தட் இஸ் ஹெர் ஃபால்ட். அவள் பில்ஸ் சாப்பிட மறந்ததே...."

கங்காதரனுக்கு தன் கையிலிருந்த பீரை அவன் முகத்தில் வீசி அடிக்கத் தோன்றியது. குவளை பிடித்த கை லேசாக நடுங்கத் தொடங்கியது.

ஆல்பி கோட் பாக்கெட்டிலிருந்து ஒரு பாக்கெட் 'மார்ல்பரோ' வெளியில் எடுத்து அதில் ஒன்றை பற்றவைத்துப் புகைவிட்டான்.

கங்காதரன் குடிக்காது குவளையைக் கையில் பிடித்திருந்தார். பீர் தொண்டையிலிருந்து இறங்கவில்லை.

அவர் தலையே வெடித்து விடுவது போலவும் கண்கள் எரிவது போலவும் உணர்ந்தார். சிகரெட் புகை காரணமாக இருக்குமோ? கொஞ்சம் சுத்தமான காற்று சுவாசிக்க வேண்டி அவர் எழுந்து நடந்தார். ஆல்பி குவளையுடன் அவரைப் பின் தொடர்ந்தான்.

"அடுத்த வருடம் நான் வருவேன். பிரேமாவிடம் கூறுங்கள்..."

"வேண்டாம். இனி ஒருபோதும் அங்கே வரவேண்டாம்..."

"நீங்கள் வருவதற்கு நாங்கள் உங்களை அனுமதிக்கமாட்டோம்."

"அது நீங்க சொல்றது தானே?" ஆல்பி சிரித்தான். "நான் விமான நிலையத்தில் வந்திறங்கும்போது உங்களுடைய டூரிஸ்ட் டிபார்ட்மெண்டில் இளம் பெண்கள் மாலைகளோடு காத்துக் கொண்டிருப்பார்கள் இல்லையா?"

கங்காதரன் ஆல்பி முகத்தைப் பார்க்காமலேயே விடைபெற்றார்.



# குறையொன்றுமில்லை

அந்தர்யாமி நிவேதனம் என்கிற நிலையிலே 'பிராணாஹுதி' என்று செய்வதுண்டு. இரண்டே இரண்டு பருக்கை, நெய்யிலே பட்ட அன்னத்தை, நாக்கில் கூட படாமல், பல்லால் கடிக்காமல் ஜாக்கிரதையாக எடுத்து உள்நாக்கில் விழும்படி இட்டு விழுங்க வேண்டும். நம் உடலிலே இருக்கிற அந்தர்யாமிக்கு நிவேதனம் என்று பொருள்.

இப்படிப் பருக்கைகளை எடுத்து ஒருவர் சாப்பிட ஆரம்பிப்பதைப் பார்த்தால், அவர் ஒன்றுமே சாப்பிட மாட்டாரோ என்று தோன்றும். அப்புறம் பார்த்தால் பெரிது பெரிதாகக் கேட்கிறார்! 'இவருக்குப் போட்டு முடியாது போலிருக்கிறதே' என்கிற அளவுக்கு!

பகவான் கிருஷ்ணன் இந்த மாதிரிதான் பூதனையை பிராணாஹுதி ஸ்தானத்தில் வைத்துக் கொண்டான் என்று மகான்கள் சொல்கிறார்கள்.

'சமஸ்த ஆகாரங்களையும் அவன் விழுங்க இருந்ததனாலே பிராணாஹுதி மாதிரி அவளை முடித்தான்' என்று மகான்கள் சொல்கிறார்கள்.

மங்கள ஸ்லோகம் என்பது ஒரு கிரந்தத்துக்கு வெளியே, தனியாக மங்களத்தை உண்டுபண்ணக்கூடியதாகவும் வஸ்துக்களைக் காட்டக்கூடியதாகவும் மங்கள ரூபமாகவும் ஆரம்பத்திலே இயற்றப்படுவது.

இதைப் பின்பற்றி பகவத் பாஷ்யக்காரர் ராமானுஜர், வேதாந்த அர்த்தத்தைக் காட்டக்கூடிய ஓர் உயர்ந்த நூலை இயற்றிய போது, அதற்கு மங்கள ஸ்லோகம் இயற்றுகிறார். அது ரொம்ப அழகான ஸ்லோகம். அனுபவிக்க அனுபவிக்க இழுத்துக் கொண்டே போய்விடும். நரசிம்ஹ மந்திரம் எந்த சந்தஸில் இருக்கிறதோ, அந்த சந்தஸில் 32 அக்ஷரங்களுடன் கூடிய சுலோகம் இது. அதை நித்யம் நாம் சொல்ல வேண்டும். சொன்னால், விஷ்ணுவினுடைய தெளிந்த ஞானம் நமக்கு ஏற்படும் :

அசேஷ சிதசித் வஸ்து  
சேஷினே சேஷசாயினே  
நிர்மலானந்த கல்யாண  
நிதயே விஷ்ணவே நம :  
என்று 32 அக்ஷரங்கள்.

இந்த முப்பத்திரண்டு அக்ஷரங்களும் முப்பத்திரண்டு பிரும்ம வித்யைகளைக் காட்டி நிற்கிறது. சமஸ்த வேதங்களும் இந்த முப்பத்திரண்டில் அடங்கி நிற்கின்றன.

எதனாலே என்று கேட்டால்,

விஷ்ணவே நம: - விஷ்ணுவின் பொருட்டு நம: விஷ்ணுவின் பொருட்டு இந்த அஞ்சலியானது சமர்ப்பிக்கப்படுகிறது.

அந்த விஷ்ணு யார்...?

அந்த விஷ்ணுவுக்கு இதெல்லாம் விசேஷணங்கள் என்று தெரியப்படுத்துகிறார் ராமானுஜர்.

விஷ்ணு என்றால் யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்...?

அசேஷம் என்கிற குணமுடையவன். சேஷம் என்றால் மிகுதி என்று அர்த்தம். அசேஷம் என்றால் 'மிச்சமில்லாத' என்று அர்த்தம்.

துளிக்கூட மிச்சமில்லாலமல், 'ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதும் அகப்படக் கரந்து ஓர் ஆலிலை சேர்ந்த எம் பெருமாமாயனை...' என்றார் நம்மாழ்வார்.

ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதும் அகப்படக் கரந்து -

பகவான் எல்லாவற்றையும் விழுங்கியவன் என்று அர்த்தம். சராசரா கிரஹணாத்- எல்லாவற்றையும் விழுங்கியவன்! 'அப்படி அவன் விழுங்கியபோது ஏதாவது வெளியே நின்றதா?' என்று கேட்டால், அவ

34

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

னைத் தவிர வெளியே நின்றது வேறொன்று மில்லை.

எல்லாவற்றையும் உள்ளுக்குள்ளே விழுங்கி ஆண்டான்!

அசேஷ சப்தத்தினாலே, 'மிச்சம் இல்லாமல் எல்லாமாம்' என்பது சொல்லப் படுகிறது.

சேதனா அசேதனமான எல்லாம் –



## அருள்வாக்கு

மந்த்ர சப்தங்களுக்கு எப்படிக் கண்டமாயிருந்து கொண்டே அகண்டத்தில் சேர்க்கிற சக்தியிருக்கிறதோ, அப்படியே ஸங்கீத சப்தங்களுக்கும் (சக்தி) இருக்கிறது. ஸ்வரஸ்தானம் ஒன்றை தீர்க்கமாக (கார்வையாக) சுருதி சேர நீட்டியோ, அல்லது கமகமாக நன்றாக இழைத்தோ மூர்ச்சனையின் உச்சநிலையை ஸ்வச்சமாகத் தொட்டு விடுகிற போது கண்டமே அகண்டாநுபவத்தில் சேர்ந்து விடுகிறது.

சின்ன எறும்பிலிருந்து பிரும்மா பர்யந்தம் எல்லாருமே ஜீவகோடிகள்தான். இத்தனையும் பரமாத்மா தனக்கு சேஷமாய் வைத்துக் கொண்டிருக்கிறான். அதே மாதிரி அசித் பதார்த்தங்கள் அத்தனையும் அவனுக்கு சேஷம்தான்.

சேஷத்வம் என்பது நமக்கு ஸ்வரூபம். சேஷித்வம் என்பது பகவானுக்கு ஸ்வரூபம்.

அவன் சேஷி. நாம் சேஷர்கள்.

சேஷத்வம் என்றால் தாஸத்வம். அதிலே ரொம்ப அழகான விஷயம் இருக்கிறது. அதைக் கவனிக்க வேண்டும்.

நாம் எது செய்தாலும் பகவானுக்கே என்று சமர்ப்பித்தல் இருக்கிறதே, அதுதான் சேஷத்வம்.

அவனுக்காக அலுக்காமல் நாம் செய்யும் கிரியைகள் அனைத்தையும் அவன் தனக்காகக் கொள்கிறானே – அதுதான் சேஷித்வம்.

அந்த சேவையினால் ஆனந்தப்படுகிறான் பரமாத்மா.

லக்ஷ்மணன் பண்ணின கைங்கர்யம், சேஷத்வத்தினுடைய பராகாஷ்டை!

பரதன் பண்ணியது பாரதந்த்ரியம்.

சேஷத்வம் என்பது ரொம்ப கஷ்டம். வாக்கிலே சொல்வது வேண்டுமானால் சுலபமாக இருக்கலாம். கேட்டுக் கொண்டிருக்கலாம் எத்தனை நேரமானாலும்! ஆனால் லக்ஷ்மணன் பண்ணிய கைங்கர்யம் ஒருத்தரால் பண்ண முடியுமா?

கூடவே இருந்து, இரவெல்லாம் தூக்கமில்லாமல் கைங்கர்யம் செய்தான் ஸ்ரீராமனுக்கு.

எம்பிரானும் மஹாலக்ஷ்மியும் – சீதா பிராட்டி உறங்கியபோது கையில் வில்லை ஊன்றிக் கொண்டு, கண்களில் நீர் அறாத கண்ணினனாய் அல்லும் பகலும் சமமாய் இருக்க, பகல் – ராத்திரி வித்தியாசமில்லாமல் தூங்காமல் பதினான்கு ஆண்டுக் காலம் கைங்கர்யம் பண்ணினானே... அந்த மாதிரி கைங்கர்யம் நம்மால் பண்ண முடியுமா...?!

சேஷத்வம் என்பது எவ்வளவு கஷ்டம் பாருங்கள்! சேஷத்வம் என்பது கட்டிப் பொன் போலே. பெரிய உருண்டையாகத் தங்கம் இருக்கிறது. ஒருத்தர் என்ன பண்ணினார்...? தங்கம்தானே என்று எடுத்து உடம்பில் அலங்காரம் பண்ணிக் கொண்டார் – அதை எடுத்து சுற்றிக் கழுத்தில் கட்டிக் கொண்டார்! பார்ப்பதற்கு விகாரமாய் இருந்தது.

'என்ன! இவ்வளவு பெரிய உருண்டையைத் தூக்கிக் கொண்டு வருகிறாரே?' என்று வினோதமாகப் பார்க்கிறார்கள்.

தங்கம் என்பதற்காக அதை எடுத்து கழுத்திலே கட்டிக் கொண்டால் அழகாக இருக்குமா? தலையிலே கட்டிக் கொண்டால் நன்றாக இருக்குமா...?

தங்கம் உயர்ந்தது. அதை உடனே எடுத்து ஆள முடியாது. அதையே ஒரு ஆபரணமாகத் தயார் பண்ணி வைத்தால் யார் வேண்டுமானாலும் எடுத்துப் போட்டுக் கொள்ளலாம்.

பாரதந்த்ரியம் என்பது இந்தத் தங்க ஆபரணத்தைப் போன்றது.

அவன் இட்ட வழக்காய் இருத்தல் என்பது பாரதந்த்ரியம்.

ஒரு பூமாலை இருக்கிறது. அதை எடுத்து அடியேன் இங்கே வைக்கிறேன்.

'நான் அங்கே இருக்க மாட்டேன்... இங்கேதான் இருப்பேன்' என்று சொல்லுமா அது?

அப்படியானால், இட்ட வழக்காய், அசேதனமான பதார்த்தத்தை எடுத்துப் போட்டோமானால், அது போட்ட இடத்திலே எப்படி இருக்குமோ, அதே மாதிரி 'நீ இங்கே இரு' என்று சொன்னால் அங்கேயே இருக்க வேண்டும்; 'உட்காரு!' என்றால் உட்கார வேண்டும். 'எழுந்திரு!' என்றால் எழுந்திருக்க வேண்டும். 'எதற்கு?' என்று கேட்கக் கூடாது. அப்படிக் கேட்டால் பாரதந்த்ரியத்துக்கு இழுக்கு.

பிரஹலாதனைப் பார்த்து பகவான் கேட்டான்: 'பிரஹலாதா! ஒரு வரம் கேளேன். நான் உனக்கு ஒரு வரம் கொடுக்க

இந்த அகண்டானுபவம்தான் அத்தனை வேத, வேதாந்த, யோக, மந்திர, தந்திர சாஸ்திரங்களுக்கும் லக்ஷ்யமாயிருப்பது. இதை ஸாதித்துத் தரும் ஸ்தானத்தில்தான் ஓசையை, ஒலியை நாதப் பிரம்மம், சப்தப் பிரம்மம் என்று ஸாக்ஷாத் பரமாத்மாவாகச் சொல்வது. அதை goal-ஆக நினைத்து, அதாவது காது என்ற இந்திரியத்தின் மூலம் மனஸின் இந்திரிய ஸுகத்துக்காக இன்றி, ஆத்ம ஸௌக்யத்தை goal-ஆகக் கருதி ஸங்கீத அப்யாஸம் பண்ணும்போது அது 'நாதோபாஸனை'' ''நாத யோகம்'' என்ற உசந்த பெயரைப் பெறுகிறது.



அர்த்தத்தோடு, அக்ஷரத்தோடு கலந்து மனமுருகிப் பாடும்போது பாடுகிறவருக்கும் கேட்கிற ஸதஸ் முழுதற்கும் பரமாத்மாவிடம் தோய்ந்து நிற்கிற பெரியதான இன்பம் கிட்டுகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அப்போது பிரஹலாதன் மனத்திலே நினைக்கிறான்:

'இது என்ன பண்டமாற்றுதல் வியாபாரமா...? நாம் பகவானிடத்திலே பக்தியோடு இருந்தால் அவன் ஏதாவது கொடுக்க வேண்டும் என்று நியமம் உண்டா? அப்படி பகவானிடத்திலே கேட்கலாமா? ஆனால் பகவானே கேட்கச் சொல்கிறான். இப்போது கேட்கவில்லையானால் பாரதந்த்ரியத்துக்கு இழுக்கு! பகவான் சொல்லியும் கேட்கவில்லை என்று அந்த அபசாரத்துக்கு ஆளாவோம்...'

அதனால்தான் பிரஹலாதன் பகவானிடத்திலே கேட்டான் :

'என் தந்தை நல்ல கதியை அடைய வேண்டும்' என்று வரம் கேட்டான்.

பாரதந்த்ரியம் என்றால் சொன்னதை உடனே செய்தல். சேஷத்வம் என்றால் கூடவே இருந்து இரவு பகல் பாராமல் பணிவிடை செய்தல். அது ரொம்ப சிரமமான காரியம். பரமாத்மா ஏற்றுக் கொண்டால்தான் முடியுமேயொழிய நாமே 'சேஷனாய் இருக்கிறேன்' என்றால் முடியுமா!

அவன் வரிக்க வேண்டும் நம்மை.

'எவனை அவன் விரும்புகிறானோ, அவனால் அவன் அடையப்படுகிறான்' என்கிறது உபநிஷத்.

அவனால் அவன் அடையப்படுகிறான் என்று சொன்னால் புத்தியைக் குழப்புகிறது அல்லவா?

கம்பராமாயணத்திலே ஒரு பாசுரம் உண்டு:

'வந்தெதிரே தொழுதானை...' என்று. 'அவனும் அவன் அடி வீழ்ந்தான்' என்று முடியும். முதலில் சொன்ன அவன் யார்? இரண்டாவது சொன்ன அவனுக்குப் பொருள் யார்? என்று விசாரம்.

*மலரிருந்த அந்தணனும் தலைவணங்கும்*
*அவனும் அவனடி வீழ்ந்தான்*

வந்து எதிரே தொழுதானை வணங்கினான். எதிரே வந்து தொழும்படியான பரதனை குகன் வணங்கினான்.

'மலரிருந்த நான்முகனே இறங்கி வந்து வணங்கக்கூடிய பெருமைமிக்க பரதனும் குகனை வணங்கினான்; இதைத்தான் 'அவனும் அடி வீழ்ந்தான்' என்கிறார்.

அந்த மாதிரி இங்கே கவனித்தால் எவனால் **அவன்** விரும்பப்படுகிறானோ, அவனை **அவன்** விரும்புவான்!

எவனொருவன் விசேஷமாக அவனைப் பற்றுகிறானோ அவனால் அவன் அடையப்படுகிறான்.

பகவானை விரும்பக்கூடியவர்களை பகவான் விரும்புவான்.

'மரணமானால் வைகுண்டம் கொடுக்கும் பிரான்' என்றார் நம்மாழ்வார்.

யாருக்கு...?

அவனிடம் நெருங்கிச் செல்லக்கூடியவர்களுக்கு.

கிட்டே நெருங்காதவர்களை பகவான் ஏற்கமாட்டான்.

அகலில் அகலும். அணுகில் அணுகும்.

நாம் தூரப் போனோம் என்று வைத்துக் கொள்ளுங்கள், அவன் அதனினும் தூரப் போய் விடுவான்!

'இவன் எங்கே போகப் போகிறான்; வரட்டும்... வருகிறபோது வரட்டும்' என்று விட்டு விட்டுப் போய்விடுவான். அணுகினாலோ, பத்தடி நெருங்கினாலோ நூறடி நம்கிட்டே வருவான் பரமாத்மா!

(தொடரும்)

எலெக்ஷன்

''கூடவே வந்த வீடியோ கிராபரை தலைவி ஏன் பாதி வழியில துரத்தி அடிச்சிட்டாங்களாம்?''

''வேன்ல உட்கார்ந்தபடியே, 'ஊழலை நாம் வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டும்'னு பேசினப்ப, 'வீடியோ லைட்டை அவுங்க முகத்துக்கு நேரா ஃபோகஸ் பண்ணிட்டாராம்!''

– சீர்காழி வி. ரேவதி

"பிரச்சாரத்துக்குப் போன இடத்துல தலைவிக்கு உடம்புக்கு முடியாம போயிடுச்சாமே?"

"வழில கோர்ட் கண்ல பட்டிருக்கும்!"

- அம்பை தேவா

''உங்க கட்சி ஆரம்பிச்சி ஒரு வாரம் தானே ஆகுது. அதுக்குள்ளே ஏழு சீட் கேட்கறீங்களே நியாயமா?''

''லேட் பண்ணாதீங்க, பொழுது விடிஞ்சா எட்டு சீட் கேட்க ஆரம்பிச்சிடுவோம்!''

– நெல்லையப்பபுரம் செல்வன்

''இந்தத் தொகுதியில் அஞ்சே அஞ்சு பேர் சம்மதிச்சாப் போதும். நான் ஜெயிச்சிடுவேன்!''

''அதெப்படி!''

''எதிர்த்து நிற்கிற அஞ்சு பேரும் சம்மதிச்சு விலகிட்டா போதுமே!''

- பர்வதவர்த்தினி

"அவரு சீஸனுக்கு தகுந்த மாதிரி பிஸினெஸ் பண்றதுல கில்லாடி!"
"அப்படியா? இப்ப என்ன பண்ணிக்கிட்டிருக்கார்?"
"தேர்தல் கூட்டங்களுக்கு ஆட்களை வாடகைக்கு விட்டு சம்பாதிச்சிக்கிட்டு இருக்கார்!"

– சூரம்பட்டி சத்யா முருகவேல்

"உங்க கட்சியில ரெண்டு கோஷ்டி இருக்கறதா சொல்றாங்களே!"
"சுத்தப்பொய்! நாலு கோஷ்டிக்குக் குறையாம இருக்கு!"

– 'மோகனூர்' சத்யா

"அப்பாடா. அறிக்கை வந்தாச்சு. நெல்லை சாவுக்கு அரசியல் கட்சிகளோ, போலீசோ காரணமில்லையாம்!"
"பின்னே?"
"தாமிரபரணியில் தண்ணீர் தளும்பி ஓடியதுதான் காரணமாம்!"

– புளியரை கணேசன்

"தலைவரே, ஒரு சந்தேகம்."
"என்ன?"
"டி.வி.யிலும் ரேடியோவிலும் 'புயல் சின்னம்'னு அடிக்கடி சொல்றாங்களே, அதில் யார் நிற்கிறாங்க?"

– ஆர். ராஜகோபால்

ஜனதா தளம் பிளவுபட்டதில் கர் நாடகாவைப் பொறுத்தவரை பாட்டீல் அணியா? கௌடா அணியா? என்பதில் ரொம்பவும் குழம்பிப் போனவர்கள் ஜனதா தள எம்.எல்.ஏக்களும் எம்பிக் களும்தான்!

இதில் அதிகம் குழம்பியவர் - சாரி, குழப்பியவர் - நடிகர் அம்பரீஷ்தான்! 1994-ல் முதன் முதலாக முன்னாள் பிர தமர் நரசிம்மராவ் முன்னிலையில் காங்கிரஸில் சேர்ந்த இவர், எஸ்.எம். கிருஷ்ணாவுக்காகத் தேர்தல் பிரசாரமும் செய்தார். 1996-ம் ஆண்டு மண்டியா தொகுதி எம்.பி. டிக்கெட் கேட்டு கிடைக்காததால் காங்கிரஸிலிருந்து விலகி ஜனதா தளத்தில் சேர்ந்தார். 1997-ஆம் ஆண்டு ராம்நகர் தொகுதியில் நடை பெற்ற இடைத்தேர்தலில் நின்று தோல்வி அடைந்தார். 1998-ஆம் ஆண்டு பாராளு மன்றத் தேர்தலின்போது மண்டியா தொகுதியில் ஜனதா தள வேட்பாளராக நின்று வெற்றி பெற்றார்.

ஏப்ரல் மாதத்தில் கௌடாவுக்கும் - பாட்டீலுக்கும் நடந்த பலப்பரீட்சையின் போது யார் பக்கமும் சாய முடியாமல் திணறிப் போனார். மீண்டும் சமீபத்தில் சக்கரம் சின்னம் தொடர்பாக இரு அணியினரும் நடத்திய கையெ ழுத்து வேட்டையின்

# மண்டேபாவுக்கு முடிவெட்ட ஆசை

• சவரசேவா!

போதும் யார் பக் கமும் கையெழுத்திடாமல் ஒதுங்கிக் கொண்டார். மீண்டும் காங்கிரஸிலேயே சேர முடிவெடுத்தபோது, இவரது ரசி கர்கள் இவர் ஜனதா தளத்தை விட்டுப் போகக் கூடாதென்று ஆர்ப்பாட்டம் செய்தனர். இதனால் 'அரசியலே வேண் டாம்; சாதாரண பொதுநலத் தொண் டனாகவே இருந்து விடுகிறேன்' என்று அறிக்கை கூட விட்டார்!

நெருங்கிய நண்பர் என்ற முறையில் பெங்களூர் வந்திருந்த ரஜினி கூட இவரிடம் ஜனதா தளத்தை விட்டு விலக வேண்டாமென்று கேட்டுக் கொண்டதாக 'ஏஷியன் ஏஜ்' செய்தி வெளியிட்டிருந்தது.

கடைசியில் என்ன ஆச்சு? 'மண்டியா வில் காங்கிரஸை மண்ணைக் கவ்வ வைப்பேன்' என்று முன்பு சூளுரைத்தவர், மறுபடியும் காங்கிரஸ் கட்சியிலேயே சேர்ந்து விட்டார்! அவர் எதிர்பார்க்கும் மண்டியா தொகுதியிலேயே 'சீட்' கிடைக்குமா என்பதுதான் இப்போதைய சஸ்பென்ஸ்!

கர்நாடகா அமைச்சரவையில் 'சுத்த மான' அமைச்சரென்று பெயரெடுத் திருக்கும் கல்வி அமைச்சர் கோவிந்த கௌடா, 'இனி அரசியலே வேண்டாம். கிராமத்திற்கே சென்று பழையபடி விவ சாயத் தொழிலை கவனிக்கப் போகிறேன்' என்று சொல்லுமளவுக்கு விரக்தி அடைந் திருக்கிறார்.

தேவே கௌடா முதல்வராக இருந்த போது கல்வி அமைச்சராக நியமிக்கப் பட்ட இவர், பின்பு பாட்டீல் அமைச் சரவையிலும் அதே பதவியைத் தக்க வைத்துக் கொண்டார். கடந்த ஐந்தாண்டு களில் 86,884 ஆரம்ப நிலை ஆசிரியர் களையும், 1000 உயர்



நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்களையும் நியமிக்கத் தாம் கொண்டு வந்த 'கவுன்செலிங் முறை' மிகவும் உதவியதாகவும் ஊழலைக் குறைத்திருப்பதாகவும் சொல்லும் கோவிந்த கௌடா, 29,702 ஆரம்பப் பள்ளிகளைச் சீரமைத்திருப்பதாகவும் புள்ளி விவரங்களை அள்ளி வீசுகிறார்.

அப்படியிருந்தும் இவர் விரக்தியடையக் காரணம் என்ன?

எஸ்.எஸ்.எல்.சியில் 'ராங்க்' முறையை ஒழித்ததுதான் காரணம்! 'ராங்க்' பெறும் தனியார் கல்விக் கூடங்கள் அதையே காரணம் காட்டி அதிக அளவில் நன்கொடை வசூலிப்பதைத் தடைசெய்ய, சட்டசபை மூலம் நன்கொடை வசூலிப்பு தடைச் சட்டத்தை இவர் கொண்டு வந்தது பலருக்குப் பிடிக்கவில்லை. பொது மக்களிடம் ஆதரவைப் பெற்றபோதிலும் தனியார் கல்விக் கூடங்களுக்கு இவர் விரோதியாகி விட்டார்!



• அம்பரீஷ் : மறுபடியும் காங்கிரஸ்!



• கோவிந்த கௌடா

'என்னைச் சுற்றிலும் பின்னப்பட்டுள்ள மாயவலை வலுவடைந்திருப்பதால் இனியும் அரசியலில் நீடிப்பது சரியல்ல' என்று கருதுகிறார் கோவிந்த கவுடா!

தென்னாப்பிரிக்கத் தலைவர் நெல்சன் மண்டேலாவின் 81– வது பிறந்த நாளை முன்னிட்டு, சுமார் மூன்று மாத காலம் கர்நாடக மாநிலம் முழுவதும் கிராமங்களுக்குச் சென்று ஒரு லட்சம் தலித்களுக்கு 'சவர சேவா யக்னா' மூலம் இலவசமாக 'ஹேர் கட்' செய்வதென்று தீர்மானித்திருக்கிறார் பெங்களூரைச் சேர்ந்த முத்துராஜ். தன்னுடன் துணைக்கு 25 நண்பர்களையும் சேர்த்துக் கொண்டிருக்கிறார். சிறு வயதில் தான் பார்த்த தலித்துகளுக்கு யாரும் முடிவெட்ட மறுத்த சம்பவமே இதற்குக் காரணம் என்று சொல்லும் முத்துராஜ், கடந்த ஆண்டும் மண்டேலா பிறந்த நாளன்று 5000 பேர்களுக்கு இலவசமாக முடி வெட்டி சாதனை படைத்துள்ளார்! 'மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக என்னைக் கவர்ந்தவர் நெல்சன் மண்டேலாதான். அதனால்தான் செய்யும் நல்ல காரியத்தை அவருடைய பிறந்த நாளில் செய்யலாமே என்று நினைத்துச் செய்கிறேன்' என்று சொல்லுகிறார் முத்துராஜ். இவருக்கிருக்கும் ஒரே ஆசை, தன்னுடைய வாழ்நாளுக்குள் ஒருமுறை மண்டேலாவைச் சந்தித்து அவருக்கும் முடி வெட்டி விட வேண்டும் என்பதுதானாம்!

பஞ்ச் :

பெங்களூரில் நடைபெற்ற லோக் சக்தி – ஜே.எச். பாட்டீல் ஜனதாதளம் – சமதா கட்சி கூட்டணிக் கட்சிகளின் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்ட ஜார்ஜ் பெர்ணான்டஸ் பேசியது : "முன்னாள் பிரதமர் தேவேகௌடா முன் பொருமுறை தாம் சாம்பலிலிருந்து எழுந்து வந்ததாகக் குறிப்பிட்டார். இப்போது சாம்பல் மட்டும்தான் இருக்கிறது. தேவேகௌடாவைத்தான் காணோம்."

— மகேந்திரன்

## சென்ற வாரம்

தாமு-வானியல் விஞ்ஞானிகளின் தலைவர். செவ்வாய் கிரக பயணத்துக்குத் தமது மகன் தயாராவதைத் தடுத்து நிறுத்துகிறார். அது ஆபத்தான பயணம் என்கிறார். ஆனால் நாட்டின் தலைவர் தாமுவின் மகன் ரஸ்ஸுவையே பயணத்துக்குத் தேர்ந்தெடுக்கிறார். இனி...

தாமு உடைந்து விட்டார். கோபத்தில் முகம் ஜிவுஜிவுவென்று சிவக்க, உதடுகள் துடித்தன.

"எவ்வளவு பெரிய இன்ஸல்ட்?" - கையைக் குத்திக் கொண்டார். கூடிதத்தை வீசியடித்தார். ஆறவில்லை.

'செலக்ஷன் கமிட்டியில் எல்லோருமே எனக்கு ஜூனியர்ஸ். ஐ'யாம் தி பாஸ். அவங்ககிட்ட என் சுயகௌரவத்தை விட்டு கெஞ்சி ரேங்க்



# 2

விஸ்ட்டை மாற்றி, தலைவர்கிட்ட அப்பாயின்ட்மென்ட் கேட்டு நாலு முறை நடந்து, அவரிடம் மனம் குளிரப் பேசி, சே! என் பொஸிஷனுக்கு நான் செய்யக்கூடிய வேலையா இது? என்ன செய்ய? மனசு கேட்கவில்லையே. எல்லோரும் அப்போது ஓ.கே. சொல்லிவிட்டு என்னை எவ்வளவு தூரம் முட்டாளாக்கியிருக்கிறார்கள்? என் உழைப்பை இந்த நாடு மறந்து போனதா?' தனக்குத்தானே பேசிக் கொண்டு குறுக்கும் நெடுக்கும் நடந்தார். வேகமாய் இரண்டடி வைத்து பர்ஸனல் கம்ப்யூட்டர் முன்பாக உட்கார்ந்தார். நெட் ஒர்க் லிங்கில் தன் மெஸேஜை தலைவரின் நெம்பருக்குத் தட்ட ஆரம்பித்தார். சூர்யாவும் ரஷ்ஷுவும் அவசரமாக அவர் முதுகுக்குப் பின்னால் கைகுலுக்கிக் கொண்டார்கள். எழுத்துக்கள் ஒவ்வொன்றாய்த் திரையில் வர ஆரம்பித்தன.

*ஐயா,*

*என் பணிக் காலம் ஏற்கெனவே முப்பது ஆண்டு காலத்தைத் தாண்டி விட்டது. முதுமை காரணமாய் என்னால் முனைப்பாய் வேலை செய்ய முடியவில்லை. இனியும் பதவி நீட்டிப்பை நான் விரும்பவில்லை. எனக்கு ஓய்வு வேண்டும். நான் இந்த நாட்டுக்காக உழைத்தது போதுமென்று நம்புகின்றேன். எனவே...*

"ஐயோ அப்பா! என்ன இது?"

"கீப் கொய்ட். அன்ட் கோ அவே!"

*எனவே என் ஓய்வுக்கு ஆணை யிடுமாறு வேண்டுகிறேன்.*

*இப்படிக்கு,*
*டாக்டர். தாமு.*

கம்ப்யூட்டரை அணைக்கும்போது கவனித்தார். சூர்யா சற்றுத் தள்ளி எதிரில் நின்று கொண்டு குறுகுறுவென்று இவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"கோபம் தணிந்து விட்டதா டாட்?"

முறைத்து விட்டு உள்ளே போய் விட்டார். அக்காவும் தம்பியும் அர்த்தத்துடன் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள். கொஞ்ச நேரம் செவ்வாய் பயணத்தைப் பற்றி ஆர்வத்துடன் பேசிக் கொண்டிருந்து விட்டு, சற்று இடைவெளி விட்டு உள்ளே போன போது, மிஸ்டர் தாமு ஒரு தடிமனான புத்தகத்தில் முகம் புதைத்துக் கொண்டிருந்தார்.

"தட்ஸ் குட்!"

"..................?"

"டாட்! இது கூடத் தேவையில்லை. ஒன்று இரண்டு மூன்று என்று நூறு வரைக்கும் எண்ணிக் கொண்டு வந்தாலே போதும். தணிந்து விடும். அல்லது கம்ப்யூட்டரில் புது புது புரோவாக்குகளை முயற்சித்திருக்கலாம்" - சொல்லிவிட்டு குபீரென்று அவள் சிரிக்க ஆரம்பிக்க, அது ரஷ்ஷுவுக்கும் தொற்றிக் கொள்ள, பின்பு தாமுவும் முடியாமல் இலேசாய்ப் புன்முறுவல் பூத்தார்.

"இப்பத்தான் புரியுது. என் கோபமும் அவசர புத்தியும் உங்களிடமிருந்துதான் எனக்கு வந்திருக்கு."

அவர் மீண்டும் சிரித்தார். இந்தத் தடவை நிறைவாய்.

"முதுமைடா. எனக்கென்று யார்? நீங்கள் தானே? உங்களை இழந்து விடுவேனோ என்ற பயம்தான்."

"தம்பி செவ்வாய்க்குச் சென்று வெற்றி வீரனாகத் திரும்பி வரும்போது அந்த சாதனையில் உங்களுக்கு, எங்களுக்கு, நம் உழைப்பிற்கு எவ்வளவு பெருமை? இந்த உலகம் சாதிக்காததை நாம் இந்தியர்கள் சாதிக்கப் போகிறோம்."

# உயிர்களைத் தேடித் தேடி

தி. தா. நாராயணன்

"இல்லை சூர்யா! இந்தச் சாதனையில் நாம் மட்டுமே பெருமைப்பட்டுக் கொள்ள முடியாது. இருபதாம் நூற்றாண்டின் இறுதியிலேயே ஆளில்லாத ராக்கெட்டை செவ்வாயில் இறக்கி ஆராய்ந்திருக்கிறார்கள். கோள்களுக்குப் பயணம் என்பது சாதாரண விஷயமாக இருந்திருக்கிறது. "எ ஷார்ட் ஹிஸ்டரி ஆஃப் ஸ்பேஸ் வாயேஜ்" - ஆசிரியர் டாக்டர். ஏகா. நம் லைப்ரரியிலிருக்கிறது. படித்துப் பார்."

"படித்து விட்டேன். சுவாரஸ்யமாக இருக்கிறது. இருபத்தொன்றாம் நூற்றாண்டிலேயே நிலவிலும், செவ்வாயிலும் மக்கள் குடியேறி விடுவார்கள் என்றெல்லாம் ஹேஷ்யம் எழுதி மகிழ்ந்திருக்கிறார்கள். ஜெனிட்டிக்ஸ்ஸில் பல திருத்தங்கள் செய்து வியாதிகள் தாக்க முடியாத மனிதகுலத்தைத் தோற்றுவிக்க முயன்றிருக்கிறார்கள். ஹூம் கற்பனை மனிதர்கள்" - நக்கலாய்ச் சிரித்தான்.

"நோ... நோ... அப்படிச் சொல்லிவிடாதே சூர்யா! நேற்றைய கற்பனை இன்றைய சாதனை. இருபத்தொன்றாம் நூற்றாண்டில் அந்தப் பிரளயம் மட்டும் நடந்திராவிட்டால் அன்றைக்கே அவர்கள் சாதித்திருப்பார்கள். ஒரு கண்டமே அழிந்து விட்டதே? எவ்வளவு அறிஞர்கள்? விஞ்ஞானிகள்? எல்லா ஆராய்ச்சிகளும் மொத்தமாய் அழிந்து விட, விஞ்ஞானத்தின் இருண்ட காலம் என்று கூட அடைமொழி வழக்கில் வந்து விட்டதே. அதனால்தானே தப்பிப் பிழைத்த நமது கண்டத்தில் நாம் இன்று செவ்வாய்க்கு மனிதனை அனுப்புவதைப் பெரிய பெருமை என்று சந்தோஷப்பட்டுக் கொள்ள முடிகிறது? இன்றைக்கு நாம் மகிழும் எல்லா சாதனைகளும் அவர்கள் அமைத்துக் கொடுத்த அஸ்திவாரத்தின் மீது கட்டப்பட்டிருக்கின்றன என்பதை நினைவில் வைத்துக் கொள்."

"சாரி டாட்! அவர்களைக் கற்பனை மனிதர்கள் என்று சொன்னது உங்களை இவ்வளவு தூரம் பாதிக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஓ.கே. அவர்களுக்கு என் வணக்கங்கள். அப்படியே மனிதகுலத்தைத் தோற்றுவித்த ரீஸஸ் குரங்கு, கற்கால மனிதர்களிலிருந்து நேற்றைய என் மூதாதையர்கள் வரை எல்லோருக்கும் என் பணிவான வணக்கங்கள். அவர்களால்தாம் நாம் இந்த உலகில் பிறந்து சாதனைகளைச் செய்யப் போகிறோம்!"

சொல்லிவிட்டு ரஷ்ஷுவைப் பார்க்க, அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டு சப்தமில்லாமல் சிரித்தான்.

"கமான் டாட்! உங்களுக்கே நன்றாகத் தெரியும். ஸ்பேஸ் ஈகிளில் ஒவ்வொரு கருவியும் பல நூறு தடவைகள் கடுமையாக சோதிக்கப்பட்டவை. இந்தப் பயணத்தில் ஒரு கோளாறும் வராது. இருப்பினும் மகன் பாசம். இவ்வளவு பெரிய அறிவு ஜீவிக்கு, ரிலேட்டிவிட்டி தியரியையே திருத்தம் சொல்லி நிரூபித்து விட்ட சிந்தனையாளருக்கு இந்த செண்டிமெண்ட் வேண்டாமே ப்ளீஸ்!"

"ஓகே! ஓகேம்மா."

அவர் எழுந்து ரஷ்ஷுவின் நெற்றியில் அழுந்த முத்தமிட்டு விட்டு அணைத்துக் கொண்டார்.

"அப்பா! செவ்வாய் பயணத்திற்கு நான் கூட விண்ணப்பித்திருந்தேன். தலைவரிடம் நேரிடையாகப் போய் கோரிக்கை வைத்தேன். பிரயோஜனமில்லை."

தாமு இலேசாகச் சிரித்தார்.

"குழந்தையும் மேதையும் ஒருசேர உனக்குள்ளே ஒளிந்திருக்கிறார்கள் சூர்யா! கம்ப்யூட்டரில் எத்தனை பெரிய ஆளாயிருந்தாலும் கூடவே குழந்தைத்தனமான ஆசை. நான்தான் வேண்டாமென்று தலைமைக்கு ஆலோசனை சொன்னேன்."

"அதுவும் தெரியும்."

"டிரெய்னிங் இல்லாமல் அங்கெல்லாம் அனுப்ப முடியாது. அத்துடன் உன் உதவி இங்கு எனக்குத் தேவை."

"த்சு... என் கண்டுபிடிப்பை நேரிடையாகச் சரிபார்க்கிற ஒரு வாய்ப்பைக் கெடுத்து விட்டீர்கள்."

## க்விஸ் போட்டி - 4 முடிவு!

சரியான விடைகள்:

1) ஹிரோஷிமா 2) டாக்டர் சிதம்பரம் 3) நியூ மெக்ஸிகோ 4) சோவியத் யூனியன் 5) கோரி 6) ட்ராம்பே 7) புத்தர் சிரித்தார் 8) செர்னோபில்

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**டி.வி.கே. மூர்த்தி,**
**60, வாலாஜா ரோடு,**
**உறையூர் போஸ்ட், திருச்சி - 620 003**

"என்னது அது?"

"செவ்வாய் பற்றி உங்களனைவரின் கருத்துக்களுக்கு நான் மாறுபடுகிறேன்."

"எப்படி? அது தட்டையாயிருக்கிறதென்றா?"

"ச்சூ... செவ்வாயில் உயிரினங்கள் வாழ்கின்றன."

ஒரு நிமிடம் அவளைப் புரியாமல் பார்த்தார்.

"நீயே கண்டுபிடிச்சுட்டியா?" - வார்த்தையில் ஏளனம் தெரிந்தது.

"ச்சூ... ப்ளீஸ் டாட்! கிண்டல் அப்புறம். முதலில் கேளுங்கள். சென்ற நூற்றாண்டில் முக்கியமான இரண்டு விளைவுகள் இந்த சூரியக் குடும்பத்தில் நிகழ்ந்து விட்டன. அதன் பிரதிபலிப்பை நம் பூமியிலும் அனுபவித்து விட்டோம். நீங்கள் குறிப்பிட்ட பிரளயம் கூட இதன் பிரதிபலிப்புத்தான். கி.பி. 2008- ஜூலை எட்டாம் தேதி செர்ரஸ் எனும், கிட்டத்தட்ட 800 கி.மீ. விட்டம் கொண்ட மிகப் பெரிய குறுங்கோள் ஒன்று எதிர்பாராதவிதமாய் பாதை தவறி செவ்வாயில் சென்று மோதியது. அதன் விளைவாய் செவ்வாய் சூரியனை நோக்கி ஐந்து லட்சத்துப் பதினெட்டாயிரம் கிலோ மீட்டர்கள் நகர்ந்து அங்கே நிலைகொண்டு சுற்ற ஆரம்பித்தது. இதனால் அதன் மேல் சூரியனின் ஈர்ப்பு விசை அதிகமாகி விட, அதன் சுற்று வேகம் முடுக்கமடைந்து வினாடிக்கு இருபத்தியேழு கிலோ மீட்டர்கள் வேகத்தில் சுற்றவாரம்பித்தது.

இந்த மோதலினால் செவ்வாயின் நிறையும் கூடி விட, அதன் ஈர்ப்பு விசையும் அதிகரித்தது. விளைவு... அது தன் அருகிலிருந்த பொருட்களையெல்லாம் ஈர்க்க ஆரம்பித்தது. சரிதானே..."

"அம்மா! ப்ளீஸ் சீக்கிரம் முடி" - அவர் நீண்ட கொட்டாவி விட்டார்.

"இருங்கள் டாட்! செவ்வாய் தன் அருகில் 9.4 கி.மீ. உயரத்தில் சுற்றிக் கொண்டிருந்த அதன் துணைக் கோள், போபோஸை ஈர்க்க, அது 8.3.2010 அன்று செவ்வாயில் மோதிச் சிதறியது. இது இரண்டாவது விளைவு. இவற்றினால் செவ்வாயின் நிலை உயர்ந்து போக, தற்போதைய எஸ்கேப்பிங் வெலாசிட்டி விநாடிக்கு 6.8 கி.மீ."

"டாட்! மோதிய இரண்டு கோள்களிலும் உறைந்த கார்பன்டையாக்ஸைட்களும், நிக்கல், இரும்பு, சிலிக்கான் பாறைகளும் கொஞ்சம் நீராவியும் இருந்தன என்பது உங்களனைவரின் கருத்து இல்லையா?"

"ஷ்யூர்... ஷ்யூர்... உலகம் முழுக்க இதே கருத்தைத்தான் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். நீ என்ன கட்டி கட்டியாய்த் தங்கமும் பிளாட்டினமும் இருக்கிறது என்கிறாயா?"

அவரை முறைத்தாள்.

"அதில் உயிரினங்களுக்குத் தேவையான 66% நைட்ரஜன், 13% ஆக்ஸிஜன், 18% ஹைட்ரஜன், சொற்ப அளவில் ஆர்கான், ஈதேன், ஹீலியம் வாயுக்களும் உண்டு என்கிறேன்."

"இதென்ன புதுக் கதை?"

"நீங்கள் சொல்லாமல் விட்ட கோணங்கள் எல்லாவற்றையும் இரண்டு வருஷங்களாய் ஆராய்ந்து வருகிறேனே!"

"இம்பாஸிபிள் அன்டு இடியாட்டிக். சரி அப்படி இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். உன் கம்ப்யூட்டரை விட்டு விட்டு ஏன் இந்த வீண் வேலை உனக்கு? அதிலும் அஸ்ட்ரானமி அத்தனை சுலபமாய்க் கணிக்கக்கூடிய விஷயமில்லை சூர்யா!"

"இருக்கட்டும். இன்னும் கேளுங்கள்."

அவர் தேமே என்று முகத்தை வைத்துக் கொண்டு தலையாட்டிக் கொண்டிருக்க, பின்னால் நின்று ரஷ்ஷா வாய் மூடிச் சிரித்தான்.

"அப்கோர்ஸ்! அங்கு உயிரினங்கள் தோன்ற முதல் அவசியமே நைட்ரஜன் நிலைப்படுத்துதல். அதற்காகவே கி.பி. 2045-ல் சீனா ஒரு ஆளில்லாத ராக்கெட் மூலம் "பைஜரிங்யாலாக்டிகோ ஜீன்ஸ்" என்



"ராத்திரி மொட்டை மாடில நீங்க படுத்திருந்தப்ப மழை பெஞ்சுது."

"அசடு! உடனே வந்து என்னை எழுப்ப வேண்டியதுதானே?"

"வந்து பார்த்தப்போ நீங்க நல்லா தூங்கிட்டிருந்தீங்க, அதனால் பேசாம இறங்கி வந்துட்டேன்!"

— எஸ். மாலதி

றும் ஒருவகை பாக்டீரியாக்களை அங்கே தெளித்து விட்டு வந்தது. நைட்ரஜன் நிலைப்படுத்துதலை அது இந்நேரம் முடித்து விட்டிருக்கும். அது மட்டுமல்ல அங்கு எரிமலைக் குழம்பிலிருந்து வெளி வரும் வாயுக்களில் பெருமளவு நைட்ரஜனும், நீராவியும் உள்ளன. டாக்டர். ராணா இதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.''

இடையில் ரஷ்ஷை குறுக்கிட்டான்.

''எஸ்... எஸ்... சீனா விஷயத்தைப் படித்திருக்கிறேன். அப்போதே உலகம் முழுக்க கிண்டலடித்து எழுதினார்களாம். கல் வாத்து முட்டை போடும் என்று சீனர்கள் தினி போடுகிறார்கள் என்றெல்லாம் கார்ட்டூன் போட்டார்களாம்.''

''அதற்கப்புறம் பிரான்ஸ் கி.பி. 2060-ல் எந்தச் சூழலிலும் தாக்குப்பிடித்து வாழும் ஒரு வகை பாசியின் ஸ்போர்களை தூவி விட்டு வந்தது. அது பெருமளவு கார்பன்டையாக்ஸைடை கிரகித்து ஆக்ஸிஜனை வெளிவிடும் தன்மை வாய்ந்தது. இதெல்லாம் நடந்து முடிந்து தொண்ணூற்றியாறு வருஷங்கள் ஓடி விட்டன.''

அவர் மீண்டும் ஒருமுறை பெரிய கொட்டாவியாய் விட்டார்.

''ஸோ என் யூகம் இதுதான் டாட்! அந்த இரண்டு மோதல்களினால் ஏற்பட்ட பெருமளவு வெப்பத்தினால் அங்குள்ள படிகப் பாறைகள் சிதைந்து கார்பன் + ஆக்ஸிஜன் வெளிப்பட்டிருக்கும். தீர்ந்தது பிரச்னை. தண்ணீர் நீர்த்துளிகளாய் ஆரம்பித்து படிப் படியாக நீர்நிலைகள், ஆறுகள், நதிகள் தோன்றியிருக்கக்கூடும். ஆர்.பி.வி. கேமராவின் படங்களில் தெரிகிறது! இந்த மோதல்கள் நிகழ்ந்து சில வருடங்கள் கழித்து எடுத்த படங்களில் கூட அடர்த்தியான மேகங்கள் செவ்வாயை சூழ்ந்திருக்கின்றன. அவை நீராவிதான்!''

தாமு சிரிப்புடன் அவள் பேசுவதையே பார்த்துக் கொண்டிருந்தார்.

''தூவப்பட்ட பாசியின் ஸ்போர்கள் கணிசமான அளவு ஆக்ஸிஜனை உற்பத்தி செய்து விட்டிருக்கும். மொத்தத்தில் தற்போது செவ்வாய் மற்றொரு பூமி!''

''வெரி... வெரி... இன்ட்ரஸ்டிங் தீஸிஸ் பட் ஃபூலிஷ் டேல்'' - சப்தம் போட்டுச் சிரிக்க, சூர்யா முறைத்தாள்.

''சரி.. சரி.. நான் வேண்டுமானால் உன் கோணத்தை ஆராய்ந்து அறிக்கை தரச் சொல்லட்டுமா? எதற்கும் நீ மிஸ்டர் ஹரீஷை காண்டாக்ட் பண்ணிப் பேசேன். நான் அவருக்குச் சொல்கிறேன்.''

''வேண்டாம் விட்டு விடுங்கள். ஏற்கெனவே என் ஆராய்ச்சிக் கட்டுரையை ரகசியமாக முடித்து அனுப்பி விட்டிருக்கிறேன். பார்ப்போம். நீங்கள் இதை வெளியே யாரிடமும் சொல்லாதிருந்தால் போதும்.''

''உன் அதீத கற்பனைவளத்தை உண்மையென்று வெளியே சொல்வேனா? அபத்தம். ஒரு கிரகத்தில் உயிரினங்கள் தோன்ற என்னென்ன அடிப்படை விஷயங்கள் தேவையோ அவை எல்லாம் செவ்வாய் மீது மோதிய கோள்கள் மூலம் கிடைத்து விட்டதாய் நீயாக கற்பித்துக் கொண்டால் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? உன் ஸ்டேட்மெண்ட்டுக்கு ஒரு சாட்சியாவது இருக்கா? ஸில்லி.''

''அப்ப உயிர் வாழ முடியுமா? என்ற காரணம் தவிர்த்து வேறு எதற்காக இந்தப் பயணம் மேற்கொள்ளப்படுகிறதாம்?''

ஒரு வினாடி நிலைகுலைந்து போய்த் தடுமாறினார் தாமு.

(தொடரும்)



## மனித வெடிகுண்டாக விஜயசாந்தி!

போலீஸ் அதிகாரியாக வந்து அதிரடி ஆக்ஷன் படங்கள் தந்த விஜயசாந்தி, மிலிடரியையும் விட்டு வைக்கவில்லை. அவரது லேட்டஸ்ட் படமான 'பாரத ரத்னா'வில் அவருக்கு ராணுவ அதிகாரி வேடம்.

படத்தில் விஜயசாந்திக்கு இரட்டை வேடம். ஒருவர் ராணுவ அதிகாரி. இன்னொருவருக்குத் திருட்டுத் தொழில். ராணுவ அதிகாரி விஜயசாந்தி, சக ராணுவ அதிகாரி (தீவிரவாதிகள்+எதிரி நாட்டின் கைக்கூலி)யின் சதியினால், தன் கால்களை இழக்க நேரிடுகிறது. தப்பி ஓடிவந்து, தலைமறைவு வாழ்க்கை நடத்துகிறார். திருட்டுத் தொழில் செய்யும் விஜயசாந்தி, ராணுவ உடை அணிந்து, கைக்கூலி ராணுவ அதிகாரியைப் பழிவாங்குகிறார். கடைசியில் மனித வெடிகுண்டாகி, எதிரி முகாமை ஒழித்துக்கட்டுகிறார்!

– சி.எம்.

# 20-ம் நூற்றாண்டின் மிகப் பெரிய ஜோக்!

யார் மீதும் விருப்பு - வெறுப்பு இல்லாமலும் நடுநிலைமையோடும், தேர்தல் செய்திகளை வழங்கிய 'தேர்தல் ஸ்பெஷல்' சூப்பர் ஸ்பெஷல்தான்!
பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

சுஷ்மா Vs சோனியா 'கல்கி'யின் நேரடி அலசல் அற்புதம். சுஷ்மாவின் அதிரடி கலக்கலைப் பார்க்கும்போது சோனியா 'அம்பேல்'தான் என்று தோன்றுகிறது!
காயக்காடு, ப. ராமகிருஷ்ணன்.

தேர்தல் ஸ்பெஷல் இதழ் வாயிலாக ஆவலைத் தூண்டும் முக்கியமான தொகுதிகள் பற்றியும், அங்கே போட்டியிடும் வேட்பாளர்கள் பற்றியும், அவர்களது செயல்பாடு பற்றியும், வெற்றி வாய்ப்பு பற்றியும் வாசகர்களுக்கு ரிப்போர்ட்ஸ் வழங்கியிருக்கும் இவ்வார இதழ் அருமை!
விழுப்புரம், வை. வெங்கடேசன்.

என்னடா இந்த வார கல்கியில் நகைச்சுவைத் துணுக்குகளே அதிகமில்லை என்று பார்த்தேன் - அதுதான் தேர்தல் ரவுண்ட்-அப்பில் வேட்பாளர்களும்/அரசியல் தலைவர்களும் அங்கங்கே பேட்டி கொடுத்துள்ளார்களே, தனியாக வேறு ஜோக்கா என்று நினைத்து விட்டீர்கள் போலும்!
காரைக்குடி, பாலு.

சுயநலக் கூட்டணிகளுக்குச் சாவு மணி அடித்து, தேசநலக் கூட்டணிக்கு மகத்தான வெற்றிக் கனியை அளிக்க வேண்டுமென்று வாக்களிக்கப் போகும் மாண்புமிகு மக்களுக்கு அழுத்தமான அறிவுரை கூறிய தங்களது தலையங்கம் மிக அருமை!
அயன்புரம், த. சத்தியநாராயணன்.

உங்கள் விமர்சனத்தில் சுட்டிக்காட்டப்பட்ட குறையைக் கவனத்தில் கொண்டு - தன்னைத் திருத்திக் கொண்டு - இன்று முன்னேறிக் கொண்டிருக்கும் நடிகர் சூர்யா - மறக்காமல், 'வட்டமேஜை' பகுதியில் வாசகர்களுடன் பகிர்ந்து கொண்ட பாங்கினைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.
புனலூர், பி.எல். பரமசிவம்.

இஸ்லாமிய எழுத்தாளர்களே தொட அஞ்சுகிற பிரச்னையைக் கதையாக்கி எங்கள் இதயவலிக்கு ஒத்தடம் கொடுத்த கா.சு. வேலாயுதனுக்குப் பாராட்டுகள்.
தஞ்சாவூர், தா. முகமது இக்பால்.

ரிஷபனின் 'மணமகள் அவசரத் தேவை' என்னும் மினி சிறுகதைத் தொடரின் முடிவு மனதைத் தொட்டது.
பிச்சாண்டார்கோவில், எம். காமராஜ்.

சாம்பலில் இருந்து மீண்டும் உயிர்த்தெழுந்து வருமாம் ஃபீனிக்ஸ் பறவை, கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால், உண்மையா என்ற சந்தேகம் இருந்தது. 'மறுபிறவி'யில் சுசிசிவம் பட்ட கஷ்டங்களையும், பின்பு மீண்டு, வாழ்வை வளமாக்கிக் கொண்டதையும் படித்த போது ஃபீனிக்ஸ் விஷயம் உண்மையாக இருக்கக்கூடும் என்றே நம்பத் தோன்றுகிறது!
திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

இவ்வாண்டின் இறுதியில் அல்லது அடுத்த ஆண்டின் துவக்கத்தில் வாசகர் யாராவது ஒருவர் தராசு பதில்களுக்காக '20-ம் நூற்றாண்டின் மிகப் பெரிய ஜோக் எது?' என்று கேட்கப் போகிறார். அதற்கு தராசு இவ்வார கல்கியில் 21-ம் பக்கத்தின் கடைசி பத்தியில் வெளியான "இங்கு போட்டியிடும் வேட்பாளர்களில் தேர்தலில் நிற்கவே நான் மட்டும்தான் தகுதியுடையவன்" என்ற சு. சுவாமியின் கூற்றையே கூறப் போகிறார்!
ஆலங்குளம், ரா. சாலமோன்.

29.8.'99 தேதியிட்ட கல்கி இதழில் சண்முகராஜாவைப் பற்றிய தகவலில் "1989-க்குப் பிறகு பத்தாண்டுகளாக 'என்.எஸ்.டி.'யில் தமிழர் யாருமே தேர்வு பெறவில்லை" என்ற வரி இடம்பெறுகிறது. 1995-ல் பாலகிருஷ்ணன் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டு மிகவும் சிறப்பாக, திறமையாக '98-ல் பாஸ் செய்திருக்கிறார். தற்போது, பாரதிராஜாவின் 'தாஜ்மஹால்' திரைப்படத்தில் நடித்து வருகிறார். 1996-ல் செல்வி. நளினி என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டு '99-ல் பாஸ் செய்திருக்கிறார். இருவருமே தமிழர்கள்தான்!
புதுடெல்லி - 67, சுகந்தா வெங்கட்ராமன்.

வட்டமேஜை

# கவலை தராத கலவை!

ரெடி இட்லி மிக்ஸ், ரெடி குலோப் ஜாமூன் மிக்ஸ் எல்லாம் கேள்விப்பட்டிருப்பீர்கள். ரெடி கான்க்ரீட் மிக்ஸ் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?

சாரி, ரெடி கான்க்ரீட் மிக்ஸை ஸ்பூன், கரண்டி எதாலும் எடுத்துச் சாப்பிட முடியாது. அதுதான் சங்கடம்.

ஆனால் மூட்டைக் கணக்கில் சிமெண்ட் வாங்கிப் பாதுகாத்து, குழிக் கணக்கில் மணலைத் தருவித்து, வித விதமான சைஸில் ஜல்லியைத் தனியாக வரவழைத்து, எல்லாவற்றையும் தண்ணீர் விட்டுக் கலந்து குழைத்து, கான்க்ரீட் உருவுக்குக் கொண்டு வருவதற்குள் எத்தனை நேரம், எத்தனை சத்தம், எத்தனை தூசி, எத்தனை பாடுபட வேண்டியிருக்கிறது!

ரெடி கான்க்ரீட் மிக்ஸில் இந்தத் தொல்லைகள் எல்லாம் சுத்தமாகக் கிடையாது!

தமிழ்நாட்டில் முதன் முதலாக, ராம்கோ சிமெண்ட்ஸ் வேங்கை வாசலில் (தாம்பரம் பக்கத்தில் தான்) அமைத்திருக்கும் தொழிற் சாலையில் ரெடி கான்க்ரீட் மிக்ஸ் தயாரிக்கிறார்கள்.

நாற்பத்தெட்டு 'க்ரஷ்ஷர்' களிலிருந்து இரண்டே இரண்டைத் தேர்ந்தெடுத்து, ஜல்லியை 20 மி.மீ., 15 மி.மீ., 12 மி.மீ., சைஸ்களில் ஓரிடத்தில் குவித்திருக்கிறார்கள்.

பாலாற்று மணல் ஓரிடத்தில்.

இவை குவித்து வைக்கப்பட்டிருக்கும் சிமெண்ட் தளமே புழுதி ஏதுமில்லாமல் அத்தனை சுத்தமாய் இருக்கிறது.

பிரம்மாண்டமான ராட்சஸ கூண்டுகள் வழியே சிமெண்ட்டைச் செலுத்த, 'ஸ்டெட்டர்' இயந்திரத்தில் மணலையும், ஜல்லியையும், நீரையும் அளவு பார்த்துச் சேர்க்க, துல்லியமான கான்க்ரீட் கலவை பெரிய புனல் வழியே கீழே நிற்கிற லாரியில் உள்ள உருளையில் கொட்டுகிறது.




• லாரியில் இறக்கப்படும் கலவை

அப்படியே எடுத்துப் பூச வேண்டியதுதான்!

ஐந்து மணி நேரத்துக்குத்தான் இந்த ஈரப்பதமான கான்க்ரீட் கலவை இருக்கும். அதற்குள் எடுத்துப் பூசிவிட வேண்டும். (அதாவது ஸ்ரீகிருஷ்ணா மைசூர்பாக்




• எல்லாம் இயந்திர மயம்!

மாதிரி. அப்புறம் தீபாவளி மலர் மைசூர்பாக் ஜோக்கில் வருகிற மாதிரி, இறுகிப் போய்ப் பாறாங்கல் மாதிரி ஆகிவிடும்!) அதனால் சென்னையிலிருந்து காஞ்சிபுரம் வரை இந்த ரெடிமிக்ஸ் கான்க்ரீட்டை உபயோகிக்கலாம்.

20 மாடி, 25 மாடிக் கட்டடங்களுக்கு, கலவையை லாரியில் கொண்டு வந்து, அத்தனை உயரமான மாடிகளுக்கும் பம்ப் செய்துவிட முடியும்! ஆட்கள் சுமந்து செல்ல வேண்டாம்.

சரி, ரெடி கான்க்ரீட் மிக்ஸால் என்ன கூடுதல் பயன்?

– ஒரே மாதிரியான, தரமான ஜல்லி – மணல் மிக்ஸ் செய்யப்பட்ட கலவை, கட்டுமான இடத்திலேயே கிடைக்கிறது. ஸோ, தரம் பற்றிய கவலை கிடையாது.

– தனித்தனியாக ஜல்லி, மணலை எல்லாம் ஆட்கள் வைத்துக் கொண்டு வரத் தேவையில்லை. காத்திருத்தல்

• துல்லியமான பரிசோதனை




இல்லை.

– கொட கொட சத்தம் கிடையாது. 'நாய்ஸ் பொல்யூஷன்' அறவே கிடையாது.

– தூசி பறக்கிற தொந்தரவுக்கும், தொடர்ந்து வரும் தும்மலுக்கும் குட்பை!

மேஸ்திரி – சித்தாள் சல்லாபக் காட்சிகள் 'மிஸ்ஸிங்' ஆகிவிடுமே என்று கவலைப்படாமல் இருக்கிறபட்சத்தில், ராம்கோ ரெடிமிக்ஸ் கான்க்ரீட்டுக்குத் தாராளமாக 'ஓகே' சொல்லலாம்.

ரெடிமிக்ஸ் கான்க்ரீட் கலவைக்கு விலை சற்றே கூடுதல் என்றாலும், அதன் பலன்கள் அதற்கு ஈடுசெய்து விடும்.

1930களிலேயே பிரிட்டனில் இந்த ரெடிமிக்ஸ் கான்க்ரீட் கலவையைக் கண்டுபிடித்து விட்டார்களாம். நமக்கு இங்கே வர 70 வருடங்கள் ஆகியிருக்கின்றன! (சுதந்தரம் வாங்கித் தந்தபோதே ஏன் பிரிட்டிஷாரிடமிருந்து கான்க்ரீட் டெக்னாலஜியையும் வாங்கித் தரவில்லை என்று காந்திஜி மீது புதிதாக ஒரு குற்றச்சாட்டையும் சிலர் சேர்த்துக் கொள்ளலாம்!)

இந்த நவீன, கம்ப்யூட்டரைஸ்ட் தொழிற்சாலையில் மொத்தமே பதினைந்து ஊழியர்கள்தான்! வடசென்னையிலும் இதுபோல ஒரு தொழிற்சாலை உருவாகி வருகிறது.

உலகில் 80 சதவிகிதத்துக்கு மேல் பல நாடுகளில் ரெடிமிக்ஸ் கான்க்ரீட் உபயோகிக்க, நாம் மட்டும் 5 சதவிகிதம் பயன்படுத்தி வருகிறோம்!

''நவீன தொழில்நுட்பம் தனிமனித வாழ்க்கையை அழகுபடுத்துவதில் எவ்வளவு பெரிய பங்குவகிக்கிறது!'' என்று முன்னாள் ரஷ்ய அதிபர் கோர்பசேவ் சொன்னது எத்தனை உண்மை என்று, இந்த ரெடிமிக்ஸ் கான்க்ரீட் நினைவுபடுத்துகிறது.

— சாருகேசி




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editcr : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

# கேஸ்ட்ரோ (GASTRO)

## வாயுத் தொல்லையா?
## சிறந்த மருந்து கேஸ்ட்ரோவை நம்புங்கள்!

நம்மிடையே எண்ணற்ற நபர்கள் வாயு தொல்லைகளினால் அவதிப்படுகிறார்கள். பலரக மருந்துகளையும் சிகிச்சைகளையும் பின்பற்றி பலன் கிடைக்காமல் மனம் நொந்து சலிப்படைந்து கொள்கிறார்கள். காரணம் வாயுத் தொல்லை ஒரு நோய் என்பதை இவர்கள் உணராமல் இருப்பதுதான்.

### வாயுத் தொல்லைகளினால் ஏற்படும் இதர நோய் அறிகுறிகள்

வயிற்றில் எரிச்சல் அல்லது வயிற்றில் ஏதோ பாரம் இருப்பது போன்ற உணர்வு, நெஞ்சுவலி, வயிறு நிறைந்து இருக்கும் பொழுது சத்தத்துடன் கூடிய காற்று வெளியேறுதல், வாயு வெளியேறுதல், இனிப்பு பண்டங்களின் மேல் அளவிற்கு அதிகமான ஆசை, நடக்கும்பொழுது மூச்சு வாங்குதல், காது குடைச்சல், வாயில் துர்நாற்றம், இருமும் பொழுது நுரையீரல்களில் வலி, சளி அல்லது சீதத்துடன் வெளிவரும் மலம், தொண்டையில் சளி கட்டுதல், முன்கோபம், தினசரி அலுவல்களில் ஈடுபாடு இல்லாமை, கவனக்குறைவு போன்றவை வாயுத் தொல்லைகளினால் ஏற்படும் சில அறிகுறிகள்.

மேற்கண்ட அறிகுறிகள் ஏதாவது தங்களுக்கு தென்பட்டால் கேஸ்ட்ரோ உபயோகியுங்கள். மிகச் சிறந்த தூய ஆயுர்வேத மருந்துகளால் தயாரிக்கப்பட்டது. இது உங்களை வாயுத் தொல்லைகளிலிருந்து முழுமையாக விடுவித்து விடுவது மட்டுமின்றி வாயுத் தொல்லையின் அடிப்படை காரணத்தையும் முழுமையாக அழித்து விடுகிறது. இதுவே 'கேஸ்ட்ரோ'வின் தன்னிகரற்ற தனிச்சிறப்பு.

கேஸ்ட்ரோ வாயுத் தொல்லைகளை விரட்டுகிறது. நோயை முழுமையாக குணமாக்குகிறது.




Rani's

தயாரிப்பாளர்கள்

**ராணி டிரக் ஹவுஸ்**

நெல்லாயி – 680 305, திருச்சூர், கேரளா. போன்/பேக்ஸ் : 0488 - 881339

தமிழ்நாட்டு முகவர் (C&F) – தமருகாதம் பார்மாசூட்டிகல்ஸ் (பி) லிட்.,

52, சிங்கண்ண செட்டி தெரு, முதல் தளம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2. போன் : 8592096

**எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கும்**

**DISTRIBUTORS : CHENNAI :** 1) Vasantha Enterprises, Jafferkhanpet, Ph. 4711372; 2) Anandhi Ram Agencies, Adayar; 3) Hema Medical Hall, Park Town, Ph. 5355973; 4) Arunachalam Medical Stores, Chindadripet, Ph. 8534175; 5) Surana Pharmaceuticals, Ph. 586826; 6) Kumaramalayan Distributor, Royapettah, Ph. 4990450; 7) Gowri Enterprises, Tambaram, Ph. 2369215; 8) Gowtham Pharma Distributor, Ph. 582123/586746; 9) Puraswalkam - Plas Pharma, Ph. 6425668. **VELLORE :** M.R. Stores, Ph. 220023; **KAVERIPATTINAM :** Jeeva Medical Stores, Ph. 52032; **DHARMAPURI :** Tamilambigai Marunthakam, Ph. 61854; **VILLUPURAM :** Malars Pharmaceuticals, Ph. 22578; **PONDICHERRY :** Shankar Ganesh Associates, Ph. 335355; **NEYVELI :** Anuradha Enterprises, Ph. 62728; **SALEM :** Prabhat Medical Stores, Shevapet, Ph. 220441/220881; **ERODE :** Shri Raghavendra Swamy Medicals, Ph. 220562; **COIMBATORE :** Devi Enterprises, Ph. 442359; **TRICHY :** A.K.S. Agencies, Ph. 765055/765745; **KUMBAKONAM :** A. Shanmugham & Co., Ph. 431737; **THANJAVUR :** Saraswathi Medical Stores, Ph. 31264; **THIRUVARUR :** Meenu Traders, Ph. 22585; **PUDUKOTTAI :** Sri Balaji Enterprises, Ph. 60979; **MADURAI :** Dhanalakshmi & Co., Ph. 621421; **PARAMKUDI :** Kamala Medicals, Ph. 21340; **VIRUDHUNAGAR :** Meenakshi Medical Agencies, Ph. 44382; **TUTICORIN :** Sethu Ram & Sons, Ph. 325639; **TIRUNELVELI :** Selvam Medical Agencies, Ph. 337591; **NAGERCOIL :** Southern Agencies, South Car Street; M. Gopalanasan, Bilamore Road.

**OUTSIDE TAMILNADU : KERALA :** Available with all medical shops.

**BOMBAY :** Sanjay Distributors, Ph. 2050095; **DELHI :** Cochin Ayurvedic Centre, Ph. 4619367/4691123; **INDORE :** Kerala Stores, Ph. 550383; **AHMEDABAD :** Kerala Stores, Vastrapur, Ph. 6731064; **BANGALORE :** Thomas Agencies, Ph. 2871535; K.G.F. : S. Parasmull, Avenue Road, Robertsonpet; **TIRUPATI :** Surya Medicals, Ph. 20614.

இப்பொழுது வளைகுடா நாடுகளில் எல்லா சூப்பர் மார்க்கெட்டுகளிலும் இலங்கையிலும் கிடைக்கும். யு.ஏ.இ. (ரஸல் கைமா) போன் : 227145; பஹ்ரைன் (மனாமா) போன் : 254340; சவூதி அரேபியா (தமாம்) போன் : 8334034; மஸ்கட் (ஜாலான் பிஊ அலி) போன் : 453872/453071; இலங்கை அனுபம் எண்டர்பிரைசஸ், 110 வேலுவான ப்ளேஸ், கொழும்பு - 9. போன் : 681287

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 " Registered No. TN / MS (S) M4392 /99" Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 " Registered as a Newspaper in Srilanka

# வெண்மையின் புதிய நிறம் உஜாலா




## உஜாலா

உஜாலாவின் துரித செயல்திறன் தண்ணீரில் உடனடியாக கரைகிறது மற்றும் துணிகளின் மீது ஆழமாக செயல்பட்டு பளபளக்கும் வெண்மையை சீராக தருகிறது. துணிகளை மீண்டும் துவைக்கும் போது உடனடியாக அழுக்குடன் வெளியே தள்ளப்பட்டு விடப்படுகிறது. உஜாலாவை திரும்ப உபயோகிக்கும் போது புதுப்பித்த வெளிச்சம் பரவுகிறது. ஓரல்-டாக்ஸிஸிடி, சரும அரிப்பு ஆகிய டெஸ்டுகளில் தீங்கற்றது மற்றும் சருமத்திற்கு ஹானியற்றது என சர்ட்டிபிகேட் பெற்ற விஞ்ஞான ரீதியான தயாரிப்பு ஆகும் உஜாலா.

எல்லாவற்றிற்கும் மேல், ஜோதி லேபாரட்டரீஸின் தயாரிப்பு அல்லவா உஜாலா!

**உஜாலா**

கேட்டு வாங்கும் போது உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் மற்றொன்றுமல்ல தருகிறார்கள் என்பதை உறுதி செய்யுங்கள்

**A Product of JYOTHY LABORATORIES, Mumbai.**